

# ஆல்பர்ட் காம்யூ

# வீழ்ச்சி

தமிழில்

சு.ஆ. வெங்கட சுப்புராய நாயகர்





# ஆல்பர்ட் காம்யூ

# வீழ்ச்சி

தமிழில்

சு.ஆ. வெங்கட சுப்புராய நாயகர்



# வீழ்ச்சி

**அல்பெர் கமுய் (1913-1960)**

**(ஆல்பர்ட் காம்யூ)**

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பிரெஞ்சு இலக்கியவாதியாகத் திகழ்ந்தவர் அல்பெர் கமுய். பிரஞ்சுக் காலனிகளில் ஒன்றான அல்ஜீரியாவில் பிறந்தவர். இவரது இளமைக்காலத்தை வறுமையும் உடல் உபாதைகளும் பங்கிட்டுக்கொண்டன. உலகப் போரின் பெயரில் நடந்த படுகொலைகளைக் கண்டு வெகுண்டு எழுந்த கமுய், மனித இனத்தின் பொருளற்ற தன்மையினைத் தத்துவ விசாரணைக்கு உட்படுத்தினார். அதன்விளைவாக அபத்தநிலை என்னும் புதியகோட்பாட்டினை அறிமுகம் செய்தார். அக்கோட்பாட்டின் அடிப்படையில் அற்புதமான புதினங்களையும் கட்டுரைகளையும் படைத்தார். இலக்கியத்துக்கான நோபல் பரிசினை 1957இல் பெற்ற இவரது வாழ்க்கை அடுத்த மூன்று ஆண்டுகளில் வாகன விபத்து ஒன்றால் முடிவுக்கு வந்தது.

**சு.ஆ. வெங்கட சுப்புராய நாயகர்** (பி. 1963)

மொழிபெயர்ப்பாளர்

பிரெஞ்சு, தமிழ், ஆங்கில மொழிகளுக்கிடையே மொழிப்பாலம் அமைத்துவரும் சு.ஆ. வெங்கட சுப்புராய நாயகர், கடந்த முப்பது ஆண்டுகளாகப் புதுச்சேரியில் பிரெஞ்சுப் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இதுவரை ஆறு புதினங்களையும் பிரெஞ்சுச் சிறுகதைகளின் மொழியாக்கத் தொகுப்புகள் இரண்டினையும் பிரஞ்சிலிருந்து தமிழாக்கம் செய்து வெளியிட்டுள்ளார். தமிழிலிருந்து கதைகளையும், கவிதைகளையும் பிரெஞ்சில் மொழியாக்கம் செய்துள்ளார். சங்க இலக்கியங்களான குறுந்தொகை, ஐங்குறுநூறு ஆகியவற்றை முழுமையாக பிரெஞ்சில் மொழியாக்கம் செய்திருக்கிறார்.

# முன்னுரை

முதலில் இந்நாவலை மொழிபெயர்ப்பதற்குத் தெரிவுசெய்த மொழிபெயர்ப்பாளரை நாம் பாராட்ட வேண்டும். இது எளிதில் மொழிபெயர்த்துவிடக்கூடிய நாவலன்று. மூல ஆசிரியரின் மொழிநடை சிக்கலில்லாமல் இருக்கலாம்; ஆனால், முன்வைக்கப்படும் கருத்துகள் சிக்கலானவை. இருபதாம் நூற்றாண்டின் மத்தியில் மேற்கு ஐரோப்பிய நாடுகளில், குறிப்பாக பிரான்சில், நிலவிய கருத்துச் சூழலைப் புரிந்துகொள்ளாமல் இந்நாவலின் முழு வீச்சையும் அறிந்துகொள்ள இயலாது.

உலகப் புகழ்பெற்ற பிரெஞ்சு எழுத்தாளர் கமுய் அவர்களின் படைப்புகளைப் புரிந்துகொள்ள, முதலில் 1950களில் பிரான்சில் பேசப்பட்ட அபத்தநிலை எனும் கோட்பாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும். உலகத்தில் மனிதன் தன் நிலையை ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்கும் போது, அவனுக்கு உலக நிகழ்வுகள் அனைத்தும் பொருளற்றவைகளாகத் தெரிகின்றன. இம்மண்ணில் மனிதன் ஏன் பிறக்கிறான்? பிறந்தவன் ஏன் சாகிறான்? இது போன்ற கேள்விகளுக்குப் பதில் இல்லாத நிலையைத்தான் அபத்தநிலை என்று குறிப்பிடுகிறார்கள். இந்நிலை இயற்கையால் உண்டாகலாம். நோய், மூப்பு, மரணம் ஆகியவை இயற்கையோடு இணைந்த அபத்த நிலையாகும், ஏனெனில், வாழ்க்கையில் பல இன்னல்களைத் தாண்டி சுகத்தை அடைய நினைக்கும்போது, அவை அதற்குத் தடையாகிவிடுகின்றன. பகைமை, போர், மதக்கலவரம், சர்வாதிகாரம் போன்றவையெல்லாம் மனிதனால் உருவாகும் அபத்த நிலை. இதையெல்லாம் பார்க்கும்போது, மனிதனுக்காக இவ்வுலகம் படைக்கப்பட்டது போல் தெரியவில்லை. அது வேறு ஏதோ ஒரு நோக்கத்திற்காக உருவாகியிருக்கிறது. அதில் மனிதன் அழையாத விருந்தாளியாக வருகிறான்; மறைகிறான். இந்நிலையை இருத்தலியல் எனும் தத்துவத்தில் *contingency* = துணை நிகழ்வு என்று குறிப்பிடுகிறார்கள். அபத்த நிலையை எதிர்கொள்ள மனிதன் என்ன செய்ய வேண்டும்? கமுய் கூறும் பதில்: அபத்தநிலைக்கு எதிர்ப்புக் குரல் எழுப்ப வேண்டும்.

எதிர்ப்புக் குரல் எழுப்புவதென்பது 'அபத்தத்'திற்குப் பணிந்து போகாமல் இருப்பதும், அதனை ஏற்றுக்கொள்ளாமல் இருப்பதும், அதனைத் தவிர்க்க நினைப்பதும்தான். கமுய்யின் படைப்புகள் அபத்தத்தை எதிர்கொள்வதை எடுத்துக்காட்டுகளோடு விளக்குகின்றன:

கமுய்யின் 'கொள்ளை நோய்' * எனும் நாவலில், ஏராளமானோர் நோயினால் மடிகின்றனர். அமைதியாக வாழ்ந்துகொண்டிருக்கும் மக்களின் வாழ்க்கையில் நோய் குறுக்கிடுவது ஓர் அபத்தமாகும். அதனை அப்படியே விட்டுவிட்டால் அது மனித சமுதாயத்தை அழித்துவிடும்; ஆகையால் அதனை எதிர்க்க வேண்டும். அதைத்தான் அந்நாவலில் வரும் மருத்துவர் செய்கிறார். அவர் நோயாளிகளைக் காப்பாற்றும் முயற்சியே ஓர் எதிர்ப்புக்குரல் எழுப்புவதுதான். ஆனால், அவர் தனியாகப் போராடவில்லை. மற்றவர்களுக்கும் விழிப்புணர்வு ஏற்படுத்தி, அவர்களையும் தம்மோடு இணைத்துக்கொண்டுதான் போராடுகிறார். கமுய் தனிமனிதப் போராட்டத்தைச் சுட்டவில்லை.

* La Peste – பிரெஞ்சு; The Plague – ஆங்கிலம்

'புரட்சியாளன்' *(L'homme révolté – The Rebel)* எனும் கட்டுரை நூலில் தன்னுடைய சிந்தனையை இன்னும் தெளிவாக எடுத்துரைக்கிறார். அபத்தத்தை எதிர்த்து அர்த்தமுள்ள ஓர் அரசை உருவாக்க வேண்டுமெனில், அரசின் தவறுகளைச் சுட்டிக்காட்டலாம். அதன் வழிகாட்டுதல்களை ஏற்றுக்கொள்ளாமலிருக்கலாம். புதிய வழிகாட்டுதல்களை முன்வைக்கலாம்; போராடலாம்.

ஆனால், இந்த இடத்தில் சார்த்தர் போன்ற இடதுசாரி சிந்தனையாளர்களிடமிருந்து கமுய்

வேறுபடுகிறார். அவர்களெல்லாம் புரட்சியில் நம்பிக்கை வைத்திருந்தனர். கமுய் அப்படியன்று. புரட்சியின் பெயரால், ஆயிரமாயிரம் உயிர்களைக் கொன்று குவிக்க வேண்டுமானால் அதுவே ஓர் அபத்த நிலையை உருவாக்கிவிடும். அபத்தத்தை எதிர்ப்பதற்காக வன்முறை கலந்த புரட்சியில் ஈடுபடுவதை கமுய் கண்டிக்கின்றார். புரட்சி அழிவில் கொண்டுபோய்விடும் என்ற அவரது அச்சத்திற்கு ஆதாரமாக ரஷ்ய நாட்டில் நடந்த புரட்சிகளைச் சுட்டிக் காட்டலாம். அவரது பார்வையில், மாற்றத்தைக் கொண்டுவர இரத்தம் சிந்தும் புரட்சியை நியாயப்படுத்துவது தவறாகும்.

1950களில் பிரான்சின் காலனியான அல்ஜீரியாவில் வன்முறை வெடித்தபோதும் கமுய்யின் நிலைப்பாடு இதுவாகத்தான் இருந்தது. அல்ஜீரியாவில் பிறந்த பிரெஞ்சுக்காரர் என்பதால் அங்கு பிரெஞ்சுக் கலாச்சாரம் நிலைப்பதை அவர் விரும்பினாலும், அரபுக்காரர்கள்மீது நிகழ்த்தப்பட்ட பிரெஞ்சுக் காலனித்துவ வன்முறைகளை முற்றிலுமாக எதிர்க்கத் தயங்கவில்லை. அல்ஜீரியப் போரில் அவருடைய நிலைப்பாடு 'வெட்டு ஒன்று துண்டு இரண்டு' என்பது போலில்லை. ஆகையால் இந்த நிலைப்பாடு சார்த்தர், ஆரோன் போன்ற பிரெஞ்சுச் சிந்தனையாளர்களின் கண்டனத்துக்குள்ளானது. கமுய்யின் நிலைப்பாட்டை அவர்கள் மதிப்பீடு செய்ய ஆரம்பித்தார்கள்.

இங்குதான் மதிப்பீடு குறித்த பிரச்சினை எழுகிறது. மற்றவர்கள் நம்மை மதிப்பிடுவதை நாம் தவிர்க்க முடியாது. 'மற்றவர்கள்தான் நமக்கு நரகம்,' என்று சார்த்தர் நாடகம் 'உய் க்ளோ' *(Huis Clos)* வில் ஒரு கதாபாத்திரம் சொல்கிறான். நம்மைச் சுற்றியிருப்பவர்களின் பார்வையிலிருந்து நாம் ஒருக்காலும் தப்ப முடிவதில்லை. அவர்கள் நம்மைக் கவனிப்பதோடல்லாமல், நம்மை எப்போதும் மதிப்பிட்டுக்கொண்டே இருக்கிறார்கள். நாம் செய்தவற்றையும் – செய்யத் தவறியவற்றையும் - நம்மை மதிப்பிடுவதற்கான அளவுகோல்களாகப் பயன்படுத்துகிறார்கள். நம்மைப்பற்றி நம்முடைய மதிப்பீடு ஒன்றாகவும் மற்றவர்களின் மதிப்பீடு வேறொன்றாகவும் இருக்கும். அவர்களின் மதிப்பீடுகள் எப்போதும் நமக்குச் சாதகமாக இருப்பதில்லை.

ஒரு காலத்தில் சார்த்தரோடு இணைந்து, இருத்தலியலில் உடன்பாடு கொண்டிருந்த கமுய் இக்கருத்தை ஏற்றுக்கொண்டிருந்தார்.

ஆனால் இந்நாவலின் முக்கிய கதாபாத்திரம், பிறர் தன்னை மதிப்பிடுவதற்கு முன்பு, தானே தன்னை மதிப்பிட்டுக்கொள்ளும் முயற்சியில் ஈடுபடுகிறான்; தான் செய்யத் தவறியதைச் சுட்டிக்காட்டுகிறான்; தன் நடவடிக்கைகளில் வெளிப்பட்ட போலித்தனத்தை எடுத்துரைக்கிறான். தனக்கு ஒரு தண்டனையைத் தேடுகிறான். அப்படி செய்வதன் நோக்கம் என்னவென்று ஒருவாறு யூகிக்க முடிகிறது. தன்மீது குற்றஞ்சாட்டுபவர்களும் இதுபோன்ற முயற்சியில் ஈடுபட வேண்டுமென்று நினைக்கிறான். அப்போதுதான் அவர்களுடைய குற்றங்களும் வெளிப்படும். இது கமுய், தன் கதாநாயகன் மூலம் தன்னை எதிர்த்தவர்களுக்கு மட்டும் விடுத்த அறைகூவலன்று; மனித சமுதாயத்திற்கே விடுத்த அறைகூவலாகும்.

இதுபோன்ற தலைசிறந்த நாவல்களைத் தமிழில் அறிமுகம் செய்துவரும் காலச்சுவடு பதிப்பகத்துக்கு என் வாழ்த்துகள். இந்நாவலை மொழிபெயர்த்த முனைவர் வெங்கட சுப்புராய நாயகரைப் பாராட்டுவதோடல்லாமல், அவரது முயற்சி வெற்றிபெறவும் வாழ்த்துகிறோம்.

**கொமாந்தேர் இரா. கிருஷ்ணமூர்த்தி**

மேனாள் பிரஞ்சுத்துறைத் தலைவர்,

வாழ்வியல் புலத் தலைவர்,

புதுவைப் பல்கலைக்கழகம்.

**மொழிபெயர்ப்பாளர் உரை**

# தண்டனை கோரும் நீதிபதியின் சமூக மதிப்பீடு

*நீங்கள் வாசிக்கவிருக்கும் இப்படைப்பு, பிரெஞ்சு இலக்கிய உலகில் புகழ்பெற்ற எழுத்தாளர் ஒருவரின் சிறந்த படைப்புகளில் ஒன்றாகும். மேலும் பிரெஞ்சு மொழியில் வெளியான ஆகச்சிறந்த படைப்புகளின் வரிசையில் 'வீழ்ச்சி' எனும் இப்புதினத்துக்கு நிச்சயம் தனி இடம் உண்டு. இந்நூலின் ஆசிரியர் அல்பெர் கமுய் தமிழ் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர்தான். (இவரது பெயர் ஆங்கில உச்சரிப்பில் ஆல்பர்ட் காம்யூ எனத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகமாகி உள்ளது. எனினும், பிரெஞ்சு உச்சரிப்பில் அல்பெர் கமுய் என்று அழைப்பதே பொருத்தமாக இருக்கும்.) 'அந்நியன்', 'கொள்ளை நோய்', 'புரட்சியாளன்', 'முதல் மனிதன்' ஆகிய இவரது பல முக்கிய படைப்புகளின் தமிழாக்கங்கள் வாயிலாக அவருடைய எழுத்துகளை வாசகர்கள் அறிந்துள்ளனர். இலக்கியத்துக்கான நோபல் பரிசினைத் தனது 47ஆம் வயதில் பெற்றவர் கமுய். அவர் எழுதிய இப்புதினம் 1956ஆம் ஆண்டு வெளியானது. இந்நூல் வெளியாகி ஒரு சில ஆண்டுகளிலேயே சாலை விபத்தொன்றில் கமுய் இறக்க நேர்ந்தது. எனவே, அவர் உயிருடன் இருந்தபோது வெளிவந்த இறுதிப் படைப்பாகவும் இது அமைந்துவிட்டது.*

*அறுபது ஆண்டுகளுக்கும் முன் வந்த படைப்பாக இருந்தபோதும் இப்போது வாசிக்கையிலும் புதிய புதிய சிந்தனையினைத் தூண்டுவதாக இருப்பது இதன் சிறப்பாகும். ஏனைய இலக்கியப் படைப்புகளைப் போல் கதைச் சுருக்கம் கூறியோ பாத்திரங்களை அறிமுகம் செய்தோ கடந்துசெல்ல முடியாத அரியவகை நூல் இது.*

*இந்தப் புதினம் உருவானபோது ஐரோப்பாவில் குறிப்பாக பிரான்ஸில் நிலவிய வரலாறு, அரசியல் பின்னணி அறியத்தக்கதாகும். அத்துடன் இலக்கியம், சமூகம், மதம், பண்பாடு எனப் பல்வேறு தளங்களிலும் நின்று இப்புதினத்தை வாசிக்கும்போது இப்படைப்பை முழுமையாகப் புரிந்துகொண்டு சுவைக்க முடியும்.*

*இரண்டாம் உலகப்போருக்குப் பின் 1954ஆம் ஆண்டு தொடங்கி நடந்த அல்ஜீரியப் போரின்போது அல்பெர் கமுய் கொண்டிருந்த நிலைப்பாட்டில் தடுமாற்றம் இருப்பதாகப் பலர் கருதினர். குறிப்பாக, இருத்தலியல் என்னும் கோட்பாட்டின் மூலம் புகழ்பெற்ற ழான் போல் சார்த்தர், மிஷேல் ஃபுக்கோ உள்ளிட்டவர்கள் கமுய் 'கள்ள மௌனம்' சாதிப்பதாகப் பகிரங்கமாகக் குற்றஞ்சாட்டினர். தான் பிறந்த அல்ஜீரியாவின் மீதே கமுய் அதிகமான பற்றுவைத்திருப்பதாக அவரது எதிர்முகாம் சந்தேகம் எழுப்பியது. இதனைப் பலரும் ஆமோதித்தனர். இந்தச் சர்ச்சையின் தொடர்பாக அல்பெர் கமுய், சார்த்தர் ஆகியோரிடையே நடந்த சொற்போர் எல்லாருடைய கவனத்தையும் ஈர்த்தது. இத்தகைய சூழ்நிலையில் எழுதப்பட்ட இப்புதினத்தின் மூலமாகச் சில எதிர்வாதங்களை கமுய் மறைமுகமாக எடுத்துவைப்பதை வாசகர்களால் ஊகிக்கமுடியும்.*

*இப்புதினத்தின் முக்கிய கதை மாந்தரான ழான் பத்தீஸ்த் கிலெமான்ஸ், தன் இயல்பின்படியே கதை முழுவதும் ஆதிக்கம் செலுத்துகிறார். பாரீஸில் வழக்குரைஞராகப் பணியாற்றிய இவர் ஆம்ஸ்டர்டாமின் மதுக்கூடம் ஒன்றில் தன் எதிரில் அமர்ந்துள்ள சக பிரெஞ்சுக்காரர் ஒருவரிடம் தன் கதையினை விவரிக்கிறார். நீண்டதொரு தனியுரைச் சாயலில் புனையப்பட்டுள்ள இப்புதினத்தின் இடையிடையே சில கேள்விகள், ஆமோதித்தல்கள், சரிபார்த்தல்கள் ஆகிய உத்திகளின் மூலம் தன் எதிரில் இருப்பவருடன் கிலெமான்ஸ் உரையாடுகிறார்.*

தான் செய்த குற்றத்திற்காக வருந்தி அதிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முனையும் ஒருவரின் கதைதான் இது. தன் குற்றத்தைத் தானே விசாரித்துக்கொள்ளும் நீதிபதியாக நின்று, அக்குற்றத்திற்குத் தனக்குத் தானே தண்டனை அளித்துக்கொள்ளும் பணியைச் செய்பவராக இருக்கிறார் கிலெமான்ஸ். அவ்வாறு செய்வதன்மூலம் தன் குற்றத்திலிருந்து விடுவிக்கப்பட்டுத் தன் மீதுள்ள களங்கம் நீங்கும் என்றும் எதிர்பார்க்கிறார்.

இந்தப் புதினம் தலைப்புகளற்ற ஆறு அத்தியாயங்களைக் கொண்ட பிரதியாகும்; ஆம்ஸ்டர்டாமில் தான் சந்திக்க நேரும் ஒருவரிடம் ஐந்து நாட்களில் கிலெமான்ஸ் தன் அனுபவங்களைப் பகிர்ந்துகொள்வதாக அமைந்துள்ளது. முதல் பாதியில் தனக்கு அமைந்த திருப்திகரமான வாழ்க்கையினை கிலெமான்ஸ் விவரிக்கிறார். அதாவது புதினத்தின் முக்கிய திருப்பமாக அமையும் குறிப்பிட்ட சம்பவம் நடைபெறும் வரையிலான தன் வாழ்க்கை முறையைக் குறித்துப் பேசுகிறார். ஆனால், சலனமற்ற அவரது மனச்சாட்சியை அச்சம்பவம் தொந்தரவு செய்யத் தொடங்குவது புரிகிறது. புதினத்தின் அடுத்தபாதியில், இதிலிருந்து விடுபடத் தான் கடந்துவந்த பாதையைத் திரும்பிப்பார்க்கிறார். தன் கடந்தகால நினைவுகளை அலசும் அவர், இதைக்காட்டிலும் பெரிய குற்றத்தை இழைத்திருப்பதை ஏற்றுக்கொள்கிறார். தன் அன்றாட வாழ்வில் நடந்த நிகழ்வுகள் மட்டுமின்றி, வரலாற்று நிகழ்வுகளையும் தன் வாதங்களுக்கு ஆதாரங்களாக எடுத்துவைக்கிறார். தனக்குப் பிடித்தமான இயேசுவும் இத்தகைய இக்கட்டான சூழலைச் சந்தித்ததாக நினைக்கிறார்.

தம்மைத்தாமே குற்றஞ்சாட்டிக்கொள்வதன் மூலம் நம் நம்பிக்கையைப் பெறும் அதே நேரத்தில் தன்னைச் சுற்றியுள்ள சமூகத்தில் நிகழும் குற்றங்களை விரிவாக அலசும் திறனில் அவரது நோக்கம் நமக்குப் புலனாகிறது. தன்னை முரண்களின் மொத்த உருவமாகப் பிரகடனப்படுத்திக்கொள்ளும் கிலெமான்ஸ், பெரும்பாலான மக்களிடம் இருக்கும் இத்தகைய முரண்களைப் போதிய சான்றுகளுடன் பட்டியலிடுவதன் மூலமாகத் தன் தரப்பு வாதத்துக்கு நியாயம் கற்பிக்க முயல்கிறார். அதாவது, 'நான்' என்று தொடங்கி மெல்ல மெல்ல 'நாம்' என லாவகமாகச் சமூகத்தில் உள்ள மற்றவர்களையும் அவரது பக்கம் சேர்த்துக்கொள்ள முனைகிறார். அதாவது, தன்முகம் விகாரமாக இருப்பதைச் சகித்துக்கொள்ள முடியாதபோது தன் எதிரில் உள்ள (அல்லது அப்படி ஒருவர் இருப்பதாக நினைத்து) சகமனிதர் பக்கமாக மதிப்பீடு என்னும் கண்ணாடியைத் திருப்பிவைக்கிறார். இந்த வழிமுறையினைக் கையாண்டு ஆறுதலடையும் நோக்கமே அவர் எடுத்துவைக்கும் அத்தனை வாதங்களுக்கும் அடிப்படையாகும்.

இவ்வாறாக ஒரே நேரத்தில் குற்றவாளியாகவும் நீதிபதியாகவும் இருக்கும் கிலெமான்ஸ் எனும் இரட்டைத்தன்மை கொண்ட கதாபாத்திரத்தின் வாயிலாகப் பல நுட்பமான செய்திகளைக் கமுய் நமக்கு வழங்குகிறார். மனிதன், தன் குற்றங்களை எப்போதும் நியாயப்படுத்த முயல்வதையும், தன் குற்றத்தின் தன்மையினைத் தீர்மானிக்கும் உரிமையை யாருக்கும் தராமல் தானே எடுத்துக்கொண்டு நீதிவழங்கத் துணிவதையும் சுட்டிக்காட்டுகிறார்.

இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் இந்நூல் முக்கியத்துவம் பெறுவதற்கான காரணங்களைப் புதினத்தை வாசித்து முடிக்கையில் நம்மால் உணரமுடிகிறது. எத்தனையோ அறக்கோட்பாடுகள் தோல்வியைத் தழுவ நேர்வதையும் தீமை மட்டும் என்றும் நிலைத்த இளமையுடன் வலம் வருவதையும் இப்புதினம் நமக்குக் கோடிட்டுக்காட்டுகிறது.

இத்தகைய சிறப்புகளைத் தன்னகத்தே கொண்ட காரணத்தால்தான் இப்புதினம் ஆங்கிலம் (இரண்டு மொழியாக்கங்கள்), ஜெர்மன், ஸ்பானிஷ் உள்ளிட்ட பல்வேறு மொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்பட்டுப் பரவலான வரவேற்பைப் பெற்றுவருகிறது.

இப்புதினத்தில் இடம்பெற்றுள்ள வரலாறு, மதம், பண்பாடு தொடர்பான சொற்களுக்கும், இடப்பெயர்களுக்கும் நூலின் முடிவில் விளக்கக்குறிப்புகளை இணைத்துள்ளேன்; உங்களுக்கு இது உதவியாக இருக்கும்.

இந்த நூலின் மொழியாக்கத்தின்போது பல நிலைகளில் எழுந்த ஐயங்களைக் களைந்து எளிய விளக்கங்களுடன் வழிகாட்டியதோடு செறிவானதொரு முன்னுரையினை வழங்கிய என் பேராசிரியர் ஷெவாலியெ இரா. கிருஷ்ணமூர்த்திக்கு என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஏனைய நூல்களைப்போல் இப்புதினத்தையும் முழுமையாக வாசித்து பிரதியைச் செம்மையாக்க உதவியதுடன் உரிய ஆலோசனைகளை வழங்கிய நண்பர் பேராசிரியர் க. பஞ்சாங்கத்துக்கு நெஞ்சார்ந்த நன்றி.

மொழியாக்கத்தின்போது அவ்வப்போது எழுந்த ஐயங்கள் சிலவற்றை நீக்க உரிய உதவிகள் செய்து வழிகாட்டிய நண்பர் எழுத்தாளர் நாகரத்தினம் கிருஷ்ணாவின் தோழமைக்கு நன்றி. காலச்சுவடு வெளியீடான 'புரட்சியாளன்' (2016) என்னும் அல்பெர் கமுய் எழுதிய மிகவும் சிக்கலான நூலினைத் தமிழாக்கம் செய்தவர் அவர்.

மொழியாக்கத்தின்போது ஏற்பட்ட சிக்கல்களை எதிர்கொள்ள துணைநின்றதோடு தேவையான நூல்களை வழங்கி ஊக்கமளித்த என் ஆங்கிலப் பேராசிரியர் ராஜ்ஜாவுக்கு என் உளம்கனிந்த நன்றி.

விவிலியம் தொடர்பான விளக்கங்களை எனக்கு அளித்து உதவிய அருட்திரு அந்தோனிசாமி அடிகளார், பிரான்ஸ் வாழ் நண்பர் ழெரார் ழொசுஃப் ஆகியோருக்கு என் நெஞ்சம்நிறை நன்றி.

மொழியாக்கத்திற்கு உதவிவரும் பிரெஞ்சு நிறுவனத்துக்கும் அழகிய முறையில் நூலினைப் பதிப்பித்துள்ள காலச்சுவடு பதிப்பகக் குழுவுக்கும் என் மனமார்ந்த நன்றி.

நூலாக்கத்தில் உதவிய என் மனைவி சிவகாமி நாயகர், தட்டச்சு செய்த சி. இளங்கோ ஆகியோருக்கு என் அன்பும் நன்றியும்.

தோழமையுடன்

**சு.ஆ. வெங்கட சுப்புராய நாயகர்**

புதுச்சேரி

*20-01-2021*

அய்யா, என்னால் எதுவும் இடையூறு இல்லை யென்று நினைத்தால், நான் உங்களுக்கு உதவத் தயாராக இருக்கிறேன். இந்த நிறுவனத்தை நடத்தும் 'குரங்கனுக்கு' நீங்கள் சொல்ல விரும்புவதைப் புரியவைக்க முடியாது என்றே நினைக்கிறேன். அவன் டச்சுமொழி மட்டுமே பேசுபவன். உங்கள் சார்பாகப் பேச எனக்கு அனுமதி அளித்தால் நல்லது. இல்லையென்றால் உங்களுக்கு ஜின் தேவைப்படுவதை அவனால் ஊகிக்கவே முடியாது. இதோ, அவன் என்னைப் புரிந்துகொண்டான் என்று நம்பிக்கை வருகிறது. நான் கூறுவதை ஏற்றுக்கொண்டான் என்பதன் அடையாளம்தான் இந்தத் தலையசைப்பு. இதோ அவன் கொண்டுவரப் போகிறான். உண்மையில் அவன் அறிவார்ந்த பொறுமையுடன் செயல்படுகிறான். நல்ல காலம், அவன் முணுமுணுக்காமல் இருக்கிறானே! பரிமாற மறுப்பதற்குச் சாதாரண முணுமுணுப்பு மட்டுமே அவனுக்குப் போதும். அதற்கும்மேல் யாரும் அவனை வற்புறுத்தமாட்டார்கள். தன் கோபதாபங்களைக் கட்டுக்குள் வைத்துக்கொள்வது உயர்விலங்குகளுக்கு இயல்பாகும். சரி, நான் விடைபெறுகிறேன். இந்த வாய்ப்பை எனக்குத் தந்ததற்கு நன்றி. உங்களுக்கு நான் எந்தவிதத்திலும் இடையூறாக இல்லையென்றால் நல்லது. நீங்கள் மிகவும் நல்லவராக இருக்கிறீர்கள். எனவே, இந்த மதுக்கிண்ணத்தை உங்கள் பக்கத்தில் வைத்துக்கொண்டு அருந்தப்போகிறேன்.

நீங்கள் நினைப்பது சரிதான். அவனுடைய மௌனம் பயங்கரமானது. அச்சுறுத்தும் இந்த நிசப்தம், யாரும் நுழைந்திராத காடுகளில் உள்ளதைப் போன்றது. மௌனம் காக்கும் நம் ஆளிடம், நாகரிகம் அடைந்த மொழிகளை உதாசீனப்படுத்தும் போக்கு உள்ளதைக் கண்டு சில நேரங்களில் நான் ஆச்சரியப்பட்டிருக்கிறேன். இந்த மதுக்கூடத்துக்கு வரும் வெவ்வேறு நாடுகளைச் சேர்ந்த மாலுமிகளையும் உபசரிப்பதுதான் அவனுடைய வேலையாகும். மேலும் ஆம்ஸ்டெர்டாம் நகரிலுள்ள இந்த மதுக்கூடத்துக்கு 'மெக்சிக்கோ சிட்டி' என்று ஏன் பெயர் வைத்தான் என்று தெரியவில்லை. இது போன்ற வேலையில் உள்ளவன் மொழி தெரியாமல் இருப்பது அசௌகரியமானது என்றுதானே நினைக்கிறீர்கள்? பேபல் கோபுரத்தில் நுழைந்த குரோமேக்னன் மனிதன் ஒருவனைக் கற்பனை செய்து பாருங்கள். தனக்குப் பழக்கமில்லாத இடத்துக்கு வந்ததைப் போன்ற துன்பத்தையாவது நிச்சயமாக அவன் உணர்ந்திருப்பான். ஆனால் இங்கு இருப்பவன் அப்படி இல்லை. இவன் நாடு கடத்தப்பட்டதாக உணரவில்லை. எதைப்பற்றியும் கவலைப்படாமல் தன் போக்கில் போய்க்கொண்டிருக்கிறான். இவன் அரிதாக உச்சரிக்கும் ஒரே வாசகம், "தேவை என்றால் ஏற்றுக்கொள் அல்லது விட்டுவிடு". எதை ஏற்றுக்கொள்வது, எதை விட்டுவிடுவது? இதில் சந்தேகம் என்ன? நம் ஆசாமியைத்தான் ஏற்றுக்கொண்டாக வேண்டும். இதுபோன்ற பிடிவாதக்குணம் கொண்ட மனிதர்கள் என்னைக் கவர்ந்துவிடுகின்றனர் என்பதை ஒப்புக் கொள்கிறேன். மனிதர்களைப் பற்றி ஆழ்ந்து சிந்திப்பதை விருப்பமாகவோ அல்லது அதையே ஒரு பணியாகவோ கொண்டிருந்தால், நாகரிகம் அடையாத மனிதர்கள்மீது நமக்குப் பரிவு ஏற்படும். காரணம், அத்தகைய மனிதர்களின் நடவடிக்கைகளில் உள்நோக்கம் எதுவும் இருக்காது.

உண்மையில், நம் ஆசாமியிடம் சில உள்நோக்கங்கள் உள்ளன. அவற்றைத் தன் மனதுக்குள்ளேயே புதைத்துவைத்துள்ளான் என்றாலும் அதுதான் உண்மை. தன் எதிரில் சொல்லப்படுவது புரியாமல் போவதால், பிறரை எளிதில் நம்பாதவனாக மாறிவிட்டான். சந்தேகம் கலந்த மேட்டிமை பொருந்திய பார்வை அவனிடம் இருந்து வெளிப்படுவதற்கு இதுதான் காரணம். மனிதர்களிடம் ஏதோ சரியில்லை என்னும் சந்தேகமாவது அவனுக்குள் இருப்பதுபோல் தெரிகிறது. இத்தகைய போக்கால், அவனுடைய பணி தொடர்பான விஷயத்தைத் தவிர வேறு எதைப் பற்றியும் அவனிடம் எளிதில் பேச முடியாமல் போகிறது. உதாரணத்துக்கு, ஒன்றைக் கவனியுங்கள். அவன் தலைக்கு நேர்மேலே, ஏதோ ஒரு படம்

மாட்டியிருந்து பின் எடுத்துவிட்ட சதுரமான வெற்றிடம் ஒன்று இருப்பது தெரிகிறதா? ஆமாம். அங்கு ஒரு படம் இருந்தது உண்மைதான். அது ஒரு சுவாரஸ்யமான படம். உண்மையிலேயே அது ஒரு மகத்தான ஓவியம். இந்த இடத்தின் சொந்தக்காரன் அவன். அந்த ஓவியத்தைப் பெற்றபோதும், அதை விட்டுப்பிரிந்தபோதும் நான் இங்கு இருந்தேன். இரண்டு சந்தர்ப்பங்களிலும், சில வாரங்கள் யோசித்த பிறகு அவனிடம் தெரிந்தது ஒரே விதமான அவநம்பிக்கைதான். அவனுடைய நேர்மையான எளிமையை இந்தச் சமுதாயம்தான் ஒருவகையில் பாழாக்கிவிட்டதை இவ்விடத்தில் ஒப்புக்கொண்டாக வேண்டும்.

நான் அவனைப் பற்றிய மதிப்பீடு எதையும் செய்யவில்லை என்பதை மட்டும் குறித்துக்கொள்ளுங்கள். அவனுடைய அவநம்பிக்கை நியாயமானதுதான் என்று கருதுகிறேன். நீங்களே கவனிப்பதுபோல் அதிகம் பேசும் என் சுபாவம் அவனுடன் ஒத்துப்போகாது. என்ன செய்வது? நான் பேசிக்கொண்டே இருப்பவன். யாருடனும் எளிதில் நண்பனாகிவிடுவேன். மற்றவர்களிடமிருந்து தேவையான அளவு விலகி இருக்கவும் எனக்குத் தெரியும். எனினும், சந்தர்ப்பம் கிடைக்கும்போது அதனை நழுவவிடமாட்டேன். நான் பிரான்ஸில் வசித்த காலத்தில், எந்த ஓர் அறிவுஜீவியைச் சந்திக்க நேர்ந்தாலும் உடனடியாக அவரிடம் நட்பு பாராட்டாமல் என்னால் இருக்க இயலாது. இந்த வாக்கியத்தைக் கேட்டதும், நீங்கள் சிரிப்பது தெரிகிறது. இதுபோன்ற அலங்காரமான வாக்கியம் அமைப்பதிலும், நல்ல மொழிநடையிலும் எனக்கு எப்போதுமே ஈர்ப்பு உண்டு என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். உண்மையில் இது ஒரு பலவீனம் என்று எனக்கே தெரியும். ஒருவன் பட்டுத்துணியினை அணிவதில் ஆர்வம் காட்டுகிறான் என்றால் அவன் கால்கள் அசிங்கமாகத்தான் இருக்கும் என்று பொருள்கொள்ள முடியாது. இருந்தாலும், பல நேரங்களில் மொழிநடையைப் போன்று நல்ல பட்டாடை தோல் வியாதியை மறைத்துவிடும். அதேசமயம், மொழிக் கொலை செய்பவர்கள் அனைவரும் தூய்மையானவர்கள் இல்லை என்று நானே என்னைத் தேற்றிக் கொள்வதுண்டு. அது போகட்டும். நாம் இன்னும் ஒரு ஜின் குடிக்கலாமே.

நீண்ட நாட்களாக ஆம்ஸ்டர்டாமில் தங்கியிருக்கிறீர்களா? இது ஓர் அழகான நகரம் இல்லையா? அற்புதமான நகரம்தானே? இதுபோன்ற வர்ணனையைக் கேட்டு வெகுகாலம் ஆகிவிட்டது. சொல்லப்போனால் பல ஆண்டுகளுக்கு முன் பாரீஸைவிட்டு வந்ததிலிருந்தே இதை நான் கேட்கவில்லை. ஆனால் நம் மனதுக்கென்று ஒரு ஞாபக சக்தி இருக்கிறது. பாரிஸின் நதியோரங்களை மட்டுமா, நம் அழகிய தலைநகர் குறித்த எதையும் நான் மறக்கவில்லை. பாரிஸ் என்பது நாற்பது கோடி உருவங்கள் அலங்கரிக்கும் ஒரு தத்ரூபமான மேடை. கடைசியாக மேற்கொண்ட கணக்கெடுப்பின்படி ஏறக்குறைய ஐம்பது கோடியை நெருங்கி இருக்குமா? ஏனெனில் அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்திருக்கும். அதில் எனக்கொன்றும் ஆச்சரியமில்லை. என் நாட்டு மக்கள், இரண்டு விஷயங்களில் மட்டும் ஆர்வமுடையவர்கள் என்று நான் எப்பொழுதும் நினைப்பதுண்டு. அதிகமாகச் சிந்தனையில் ஈடுபடுபவர்கள், தாறுமாறான உடலுறவில் ஈடுபடுபவர்கள். இதற்காக நாம் அவர்கள்மீது கோபம் கொள்ளத் தேவையில்லை. அவர்கள் மட்டும் அப்படி இல்லை. ஒட்டுமொத்த ஐரோப்பாவும் அப்படித்தான். நம்மைப்பற்றி வருங்கால வரலாற்று அறிஞர்கள் என்ன சொல்வார்கள் என்று நான் சில நேரங்களில் நினைத்துப் பார்ப்பதுண்டு. இன்றைய மனிதனை விவரிக்க, “தாறுமாறான உடலுறவில் ஈடுபட்டான், செய்தித்தாள்களை வாசித்தான்” என்னும் ஒற்றை வாக்கியம் போதும். இந்த அதிரடியான விளக்கத்துக்கு மேல் இவனைப் பற்றிக் கூற எதுவும் இருக்காது என்று துணிந்து சொல்வேன்.

ஆனால் ஹாலந்து மக்கள் அப்படி இல்லை. இவர்கள் அந்த அளவு நவீனமானவர்கள் இல்லை. இவர்களைக் கவனியுங்கள். இவர்களுக்கு நிறைய நேரம் இருக்கிறது. இவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்? அதோ அங்கே இருக்கும் பெண்மணிகளின் உழைப்பில் இங்கே இருக்கும் ஆண்கள் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். இங்குள்ள நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த ஆண்கள், பெண்கள்

என இவர்கள் அனைவரும் வழக்கம்போல் இல்லாத ஒன்றை நினைத்து வருபவர்கள், அல்லது முட்டாள்தனமாக இங்கே வருபவர்கள். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால், அதீத கற்பனையுடனோ அல்லது கற்பனைப் பஞ்சத்தாலோ இங்கு வருபவர்கள். அவ்வப்பொழுது கத்தியையோ துப்பாக்கியையோ எடுத்துக் கையாள்வது இவர்களது வழக்கம். இதைக் கொண்டு இவர்கள் அதில் ஆர்வமுள்ளவர்கள் என நினைத்துவிடாதீர்கள். தாங்கள் எதிர்கொள்ளும் சூழலுக்கேற்ப அப்படிச் செய்ய வேண்டியுள்ளது. அவ்வளவுதான். இவர்களுடைய ஆயுதம் தீர்ந்தவுடன் பயந்துவிடுவார்கள். எது எப்படியோ, குடும்பத்திற்குள் அடுத்தநபரைச் சுரண்டிக் கடைசியில் தீர்த்துக்கட்டுபவர்களைக் காட்டிலும் இவர்கள் கண்ணியமானவர்கள் என்றே நான் கருதுகிறேன். இதுபோன்று, கணக்கை நேர்செய்ய ஏதுவாக நம் சமுதாய அமைப்பு இருப்பதைக் கவனித்தீர்களா? பிரேஸில் ஆறுகளில் உள்ள சிறிய மீன்களைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். அவை ஆயிரக்கணக்கில் படையெடுத்து வந்து, நீச்சலில் அனுபவமில்லாத ஒருவன் நீந்தும்போது அவனைத் தாக்கும். ஒரு சில மணித்துளிகளில் வேகவேகமாக அவற்றின் சிறுவாய்க்குள் அவனை இரையாக்கிய பின், சுத்தமான எலும்புக்கூட்டினை மட்டுமே அவை விட்டுச் செல்லுமாம். ஆம், அதுதான் அவற்றின் இயல்பு. உங்களுக்கும் மற்றவர்களைப் போல் அப்பழுக்கற்ற வாழ்வு வேண்டுமா? ‘ஆமாம்’, என்று தான் சொல்வீர்கள். அதில் சந்தேகமென்ன? ‘இல்லை’ என்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகட்டும், ஒரு பணி, ஒரு குடும்பம், சில திட்டமிடப்பட்ட பொழுதுபோக்குகள் ஆகியவையே போதும் – உங்கள் தனித்துவத்தைத் துடைத்தெறிவதற்கு. அந்தச் சிறுபற்கள் சதையைத் தாக்கி எலும்புவரை விழுங்கித் தின்று தீர்த்துவிடும். நான் கூறியது நியாயமில்லைதான். அப்படி சொல்லியிருக்கக் கூடாது. அவற்றின் இயல்பு என்று நான் கூறியிருக்கக் கூடாது. அது நம்முடைய இயல்பும்தான். யார், யாரைத் துடைத்தெறிவது என்பதுதான் பிரச்சனை.

எப்படியோ நம் ஜின் வந்துவிட்டது. ஆரம்பிக்கலாமா? அதோ, அந்தக் ‘குரங்கன்’ ஒருவழியாக வாயைத் திறந்து என்னை டாக்டர் என்று அழைத்துவிட்டான். இங்கு இருப்பவர்களுக்கு எல்லாருமே மருத்துவர் அல்லது பேராசிரியர்தான். இந்த நாட்டினர் நல்லெண்ணத்தோடும் தன்னடக்கத்தோடும் தங்கள் மரியாதையைக் காட்ட விரும்புவார்கள். எப்படி பார்த்தாலும், கயமைத்தனம் என்பதை அவர்களுடைய பொது இயல்பாகக் கொள்ளமுடியாது. தொடக்கத்தில் நான் மருத்துவராக இல்லை. நீங்கள் என்னைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்பினால் சொல்கிறேன். இங்கு வருவதற்கும் முன் வழக்குரைஞராக இருந்தேன். ஆனால் இப்பொழுதோ நான் ஒரு தண்டனை வழங்கக்கோரும் நீதிபதி.

என்னைப் பற்றி அறிமுகம்செய்து கொள்ளட்டுமா? உங்களுக்கு உதவி செய்யக் காத்திருக்கும் என் பெயர், ழான் பத்தீஸ்த் கிலெமான்ஸ். உங்களைச் சந்தித்ததில் மகிழ்ச்சியடைகிறேன். நீங்கள் ஏதோ தொழில் விஷயமாகத்தான் இங்கு வந்துள்ளீர்கள் இல்லையா? அப்படித்தானே! “ஆமாம். ஏறக்குறைய!” அருமையான பதில். முறையான பதிலும் கூட. எல்லாவற்றிலுமே நாம் ஏறக்குறையாகத்தான் இருக்கிறோம். சரி, என் துப்பறியும் மூளையை உபயோகித்துப் பார்க்கட்டுமா? உங்களுக்கு ஏறக்குறைய என் வயது இருக்கும். உங்களுக்கு ஏறக்குறைய எல்லாவற்றையும் பார்த்து முடித்துவிட்ட நாற்பது வயதுடைய விபரமறிந்த ஒருவரின் கண்கள் அமைந்திருக்கின்றன. ஏறக்குறைய நன்றாக உடை அணிந்திருக்கிறீர்கள். அதாவது எங்கள் நாட்டில் இருப்பவர்களைப் போல். மேலும், உங்கள் கைகள் மென்மையாக இருக்கின்றன. எனவே நீங்கள் ஒரு நடுத்தர வர்க்கத்து நபர்! ஆனால் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த பண்பட்ட நபர். என் அலங்காரமான மொழியாடலைக் கேட்டுச் சிரித்ததிலிருந்து உங்கள் இயல்பைப் பற்றிய இரண்டு விஷயங்கள் புரிந்துவிட்டன. முதலில் அந்த வாக்கிய அமைப்பை இனங்கண்டு கொள்கிறீர்கள். பிறகு அதனால் எரிச்சலடைகிறீர்கள். மேலும், நான் சொல்வதைக் கேட்டு உங்களுக்குச் சிரிப்பு வருகிறது. அப்படியென்றால் உங்களிடம் ஒருவகையான வெளிப்படைத்தன்மை உள்ளது எனத்

தெரிகிறது. எனவே நீங்கள் ஏறக்குறைய . . . அதனால் என்ன? நான் அதிக ஆர்வம் காட்டுவது நீங்கள் பார்க்கும் பணியை விட நீங்கள் சார்ந்திருக்கும் குழு மீதுதான். உங்களிடம் இரண்டு கேள்விகள் கேட்கட்டுமா? அவை கேட்கக்கூடாத கேள்விகள் அல்ல என்று கருதினால் மட்டும் பதில் அளித்தால் போதும். உங்களிடம் செல்வம் இருக்கிறதா? “ஏதோ கொஞ்சம் இருக்கிறது, அப்படித்தானே? சரி. போகட்டும். அதை ஏழைகளுடன் பகிர்ந்துகொண்டது உண்டா? “இல்லை”. அப்படியென்றால் என்னைப் பொறுத்தவரை உங்களை ஒரு “சதுய்சி” (மறுமையினை நம்பாமல், நிகழ்கால வாழ்க்கையினை மகிழ்ச்சியாக அனுபவிக்கும் யூதப்பிரிவினர்) என்று அழைப்பேன். விவிலியத்தில் பரிச்சயம் இல்லையென்றால் இதற்கு மேல் உங்களுக்குப் புரிய வாய்ப்பில்லை. என்ன, விவிலியத்தில் பரிச்சயம் உண்டா? உண்மையிலேயே உங்களைப் பற்றித் தெரிந்துகொள்ளும் ஆர்வம் எனக்கு அதிகரிக்கிறது.

நான் யார் என்றால் . . . நல்லது. நீங்களே ஒரு முடிவுக்கு வரப்பாருங்கள். இந்த உயரமான தோற்றம், தோள்கள், என் முகம். இந்த முகத்தில் கூச்ச சுபாவம் இருப்பதாகப் பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். இவற்றையெல்லாம் வைத்துப் பார்த்தால் ரக்பி ஆட்டக்காரன் போல் இருக்கிறேன் அல்லவா? எனினும் என்னுடன் பேசிப் பார்த்தால் என்னிடமும் கொஞ்சம் நாகரிகமான பண்பு இருப்பதை உணரமுடியும். நான் அணிந்திருக்கும் அங்கிக்கு முடி அளித்த ஒட்டகத்துக்கு ஒருவேளை தோல் வியாதி இருந்திருக்கலாம். ஆனால், என் நகங்களை ஒழுங்காகப் பராமரித்து வருகிறேன். நானும் விவரம் தெரிந்தவன்தான். இருந்தாலும் உங்கள் தோற்றத்தை வைத்தே எவ்வித முன்னெச்சரிக்கையுமின்றி உங்களிடம் மனம்விட்டுப் பேசுகிறேன். மேலும் பயன்படுத்தும் மொழியிலும் நடத்தையிலும் மேன்மையுடையவனாக இருந்தாலும், ஆம்ஸ்டர்டாம் நகரின் ஸிதிஜிக் வீதியில் மாலுமிகள் கூடும் இத்தகைய மதுவிடுதிகளுக்கு வருவதை நான் வழக்கமாக வைத்துள்ளேன். விடுங்கள், அதிகம் சிந்திக்காதீர்கள். என்னைப் போல் என் பணியும் இரட்டைத் தன்மையுடையது; அவ்வளவுதான். நான் உங்களிடம் ஏற்கெனவே கூறியபடி நான் ஒரு தண்டனை வழங்கக்கோரும் நீதிபதி. என்னைப் பற்றிய சிக்கலில்லாத ஒரே விஷயம் என்னவென்றால் என்னிடம் எந்த உடைமையும் இல்லை என்பதுதான். ஆம், நான் பணக்காரனாகத்தான் இருந்தேன். ஆனால், மற்றவர்களிடம் எதையும் பகிர்ந்துகொண்டது கிடையாது. இது எதைக் காட்டுகிறது? நானும் ஒரு ‘சதுய்சி’ என்பதைத்தான் . . . அதோ! துறைமுகத்திலிருந்து சைரன் ஒலி கேட்கிறதா? ஸைதொர்ஸே (ஹாலந்தின் வடமேற்கு) பகுதியில் இன்று இரவு பனிமூட்டம் இருக்கும்.

நீங்கள் அதற்குள் புறப்படுகிறீர்களா? என்னால் தாமதமாகியிருந்தால் மன்னித்துவிடுங்கள். என்னைப் பணம் செலுத்த அனுமதியுங்கள். ஏனெனில், நீங்கள் எங்கள் ஊரில் உள்ள மதுக்கூடமான இந்த மெக்ஸிக்கோ சிட்டியில் இருக்கிறீர்கள். உங்களை இங்கு உபசரிப்பதில் எனக்கு மிகவும் சந்தோஷம். மற்ற நாட்களைப் போல் நாளை இரவும் நிச்சயமாக நான் இங்கு வருவேன். அப்போது உங்கள் உபசரிப்பை நன்றியுடன் ஏற்றுக்கொள்வேன். நீங்கள் செல்ல வேண்டிய வழி . . . அது மிக சுலபம். உங்களுக்குத் தொல்லை எதுவுமில்லையென்றால், துறைமுகம்வரை நான் உங்களுடன் வருகிறேன். அங்கிருந்து யூதர்கள் வசிக்கும் பகுதியைக் கடந்துசென்றால் அழகிய சாலைகளைக் காணலாம். அங்குப் பெரும் ஓசையை எழுப்பியபடி டிராம்வே வண்டிகள் மலர்களுடன் வலம் வரும். அத்தகைய சாலைகளில் ஒன்றில்தான் நீங்கள் தங்கியிருக்கும் ‘டேம்ராக் ஹோட்டல்’ அமைந்திருக்கிறது. தயவுசெய்து நீங்கள் முன்னே செல்லுங்கள். யூதர்களின் பகுதியில்தான் நான் வசித்துவருகிறேன். நம் ஹிட்லரின் ஆட்கள் அந்த இடத்தைக் காலிசெய்துதரும்வரை அப்பகுதி அப்படித்தான் அழைக்கப்பட்டது. என்னவொரு காலிசெய்யும் முறை கவனித்தீர்களா! முகாம்களில் எழுபத்தைந்தாயிரம் யூதர்கள் அடைக்கப்பட்டனர் அல்லது கொல்லப்பட்டனர். உண்மையிலேயே அது திட்டமிட்ட ஒட்டுமொத்த அழித்தொழிப்பு. இப்படிப் பொறுமையாகத் திட்டமிட்டதை நான் வியந்து பாராட்டுகிறேன். நம்மிடம் போதுமான திறன்

இல்லாதபோது ஒரு திட்டத்தை வகுக்க வேண்டும். இந்த விஷயத்தில் அருமையான விளைவுகளை இது ஏற்படுத்திவிட்டது என்பதில் சந்தேகமேயில்லை. ஆக, வரலாற்றில் மிகப் பெரிய குற்றங்கள் நடந்த இடங்களுள் ஒன்றில்தான் நான் வசித்து வருகிறேன். ஒருவேளை, அந்தக் குரங்கனையும், சந்தேகக் கண்ணுடன் நோக்கும் அவன் குணத்தையும் புரிந்துகொள்வதற்கு இதுவும் எனக்கு உதவுகிறதோ? மற்றவர்மீது பரிவுகாட்ட என் இயல்பு வலிந்து இழுத்துச்செல்லும்போது அதை முறியடிக்க இப்படித்தான் என்னால் முடிகிறது. புதிய நபர் ஒருவர் என் முன் இருக்கும்போது, எனக்குள் "அபாயம்! பொறுமை தேவை!" என்று எச்சரிக்கை மணி ஒலிக்கும். பரிவு காட்டும் குணம் வலிமையாக இருந்தாலும் நான் எதற்கும் எச்சரிக்கையாகவே இருப்பேன்.

என் சிறிய கிராமத்தில் நடந்த ஒரு சம்பவத்தைப் பற்றி எப்போதாவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அது ஓர் இராணுவ நடவடிக்கை. வயதான ஒரு பெண்மணியின் மகன்கள் இருவரைப் பணயமாகப் பிடித்துக்கொண்டனர். அவர்களில் யாரைச் சுட்டுக் கொல்வது எனத் தேர்ந்தெடுக்கும்படி அந்தப் பெண்ணிடம் ஜெர்மானிய அதிகாரி மரியாதையோடும் பணிவோடும் கேட்டாராம். தேர்ந்தெடுப்பதாம், கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். இவனையா அல்லது அவனையா? பிறகு, அவன் இறப்பதைப் பார்ப்பதா? விடுங்கள். அதைப் பற்றி விரிவாகப் பேசவேண்டாம். அய்யா, இங்கு எதுவும் சாத்தியம் என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். பிறர்மீது சந்தேகப்படாத தூய உள்ளமுள்ள ஒருவரை நான் அறிவேன். அவர் அமைதியையும் உச்சக்கட்ட சுதந்திரத்தையும் நேசிப்பவர். விலங்குகள் உட்பட உயிர்கள் அனைத்தையும் சமமாக நேசிக்கும் இயல்புடையவர். சந்தேகமின்றி அவர் ஓர் உயர்ந்த மனிதர்தான். ஐரோப்பாவில் இறுதியாக நடந்த மதப்போரின்போது, தன் கிராமத்திற்குச் சென்று தங்கிவிட்டார். அவருடைய வீட்டு வாசலில், "நீங்கள் எங்கிருந்து வருபவரானாலும் சரி, உள்ளே வாருங்கள். உங்கள் வருகை நல்வரவாகட்டும்" என்று எழுதிவைத்திருந்தார். அந்த அன்பு அழைப்பை யார் ஏற்றுக்கொண்டார்கள் என்று நினைக்கிறீர்கள்? இராணுவ உதவிப்படையினர்தான். ஏதோ சொந்த வீடு போல் உள்ளே புகுந்து அவரது கதையை முடித்துவிட்டார்கள்.

அம்மா! மன்னிக்க வேண்டும். விடுங்கள், எப்படியும் அந்தப் பெண்ணுக்கு ஒன்றும் புரிந்திருக்காது. இந்த மக்களைப் பார்த்தீர்களா! பல நாட்களாக நிற்காமல் பெய்து வரும் மழையையும் பொருட்படுத்தாமல் இவ்வளவு நேரமாகியும் இவர்கள் இங்கு இருப்பதை என்ன சொல்வது? நல்லவேளையாக ஜின் இருக்கிறது. இந்த இருட்டில் உள்ள ஒரே வெளிச்சம் இதுதான். உங்கள் உள்ளத்தில் அது உண்டாக்கும் பொன்நிற அல்லது செப்பு நிற வெளிச்சத்தை உணர்கிறீர்களா? இந்த ஜின்னின் கதகதப்பில் இரவு நேரத்தில் நகரத்தைச் சுற்றி நடைப்பயிற்சி மேற்கொள்ள எனக்குப் பிடிக்கும். பல இரவு நேரங்களில் கனவில் மிதந்தபடியோ மனதுக்குள் பேசியவாறோ மணிக்கணக்கில் நடந்துகொண்டிருப்பேன். ஆம், இன்றைய இரவைப் போலவே. உங்களைக் கொஞ்சம் குழப்பிவிட்டேன் என்று நினைக்கிறேன். மன்னிக்க வேண்டும். நீங்கள் உண்மையிலேயே பழகுவதற்கு இனியவர். ஆனால் நான் கொஞ்சம் அதிகமாகவே பேசுகிறேன். நான் வாயைத் திறந்ததும் வாக்கியங்கள் மடைதிறந்த வெள்ளமாகப் பெருக்கெடுக்கின்றன. மேலும், இந்த நகரம் என்னைப் பேசவைக்கிறது. இங்கிருக்கும் மக்களைப் பாருங்கள். சிலர் நடை பாதைகளில், சிலர் வீடுகளில் உள்ள சிறிய இடத்தில், இன்னும் சிலர் சிறிய கால்வாய்களில். பனிமூட்டம், குளிர், இவற்றோடு சோப்பு நுரைபோல் எழுந்து நிற்கும் கடல் சூழ வாழும் இவர்களை எனக்கு மிகவும் பிடிக்கும். காரணம், இவர்கள் மனம் ஒரே இடத்தில் இருப்பதில்லை. ஒரே நேரத்தில் இவர்கள் இங்கேயும் இருக்கிறார்கள், வேறு இடத்திலும் இருக்கிறார்கள்.

ஆம், நான் கூறுவது உண்மைதான். சகதியால் வழுக்கக்கூடிய நடைபாதையில் அவர்கள் எடுத்து வைக்கும் கனமான அடிகளின் ஓசையைக் கேட்கும்போதும், அவர்கள் பொன்னிற மீன் கடைக்கும் சருகு

நிற நகைகள் விற்பனை செய்யும் கடைக்கும் போய்வருவதைப் பார்க்கும்போதும் இன்று இரவு அவர்கள் இங்கு 'இருக்கிறார்கள்' என்று தானே நினைப்பீர்கள்? அப்படியென்றால் நீங்களும் மற்றவர்களைப் போல் இவர்களைத் தொழிலாளர் பிரதிநிதிகளும் வர்த்தகர்களும் கொண்ட வர்க்கம் என்று முடிவுசெய்துவிட்டீர்கள். வாழ்வு நிலையென்று நினைத்து, நாணயங்களால் கணக்கிடும் இவர்களுடைய வாழ்வின் ஒரே உணர்ச்சிபூர்வமான தருணம், டச்சு ஓவியர் ராம்பிரான் படைப்பு ஒன்றில் பார்த்ததைப் போல் அகலமான தொப்பிகள் அணிந்தபடி, உடற்கூறுப் பாடத்தைக் கற்க முனையும் அந்த நொடிகளில்தான் உள்ளது என்று கருதியிருந்தால் நீங்கள் நினைப்பது தவறு. அவர்கள் நம் அருகில் நடந்து செல்வது உண்மைதான். இருந்தாலும் அவர்களுடைய எண்ணங்கள் எங்கே நிலைகொண்டுள்ளன என்று பாருங்கள். சிவப்பும் பச்சையுமாக ஒளிரும் கடையின் விளம்பரப் பலகையில்தான் அவை உள்ளன. ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். உண்மையில், ஹாலந்து என்பது ஒரு கனவு! பொன்னும் புகையும் கலந்த கனவு. பகலில் புகைமயமாகவும் இரவில் பொன்மயமாகவும் இருக்கும். இரவும் பகலுமாக இதோ இங்கிருக்கும் இவர்களைப் போன்ற பெருமிதம் கொண்ட புதிர்நிறைந்த "லோஹென்கிரின்" போன்ற மனிதர்களால் அக்கனவு நிகழ்ந்துகொண்டிருக்கும். (லோஹென்கிரின் – ஜெர்மானிய இலக்கியத்தில் 13ஆம் நூற்றாண்டு தொன்மக்கதையில் வரும் பாத்திரம். தான் யாரென்று கேட்கக்கூடாது என்ற நிபந்தனையுடன் கன்னி ஒருத்தியைக் காப்பாற்ற அன்னப்படகில் பயணம் மேற்கொண்டவன்) இவர்கள் சோகமான அன்னங்களைப் போன்ற தங்கள் கறுப்பு மிதிவண்டிகளில் சுற்றிக்கொண்டிருப்பார்கள். உயரமான கைப்பிடியுடைய அந்த மிதிவண்டிகளில் கால்வாய்களின் வழியாகக் கடலைச் சுற்றி ஓயாமல் வலம் வருவார்கள். செப்புநிற மேகங்களில் அவர்களின் மனம் சஞ்சரித்திருக்கக் கனவு காண்பார்கள். வட்டமடித்து வரும் அவர்கள், தூக்கத்தை இழந்தவர்கள். பொன்நிறமான ஊதுவத்திப் புகை நடுவில் பிரார்த்தனை செய்யும் அவர்கள் இந்த உலகத்தில் இல்லை. பல்லாயிரம் கிலோமீட்டர் தூரத்தில் இருக்கும் தொலைதூரத் தீவான ஜாவாவை நோக்கிச் செல்கிறார்கள். இந்தோனேஷியாவின் வினோத முகபாவங்களுடைய கடவுள்களிடம் அவர்கள் பிரார்த்தனை செய்கிறார்கள். இக்கடவுள்களின் படங்கள்தான் அவர்களுடைய கடை ஜன்னல்களை அலங்கரித்துள்ளன. ஆனால் இப்பொழுது அவை நம் தலைக்கும் மேல் அலைந்துகொண்டிருக்கின்றன. அடுத்ததாக, அவை ஒய்யாரமான குரங்குகளைப் போல் கடை விளம்பரப்பலகைகளிலோ அடுக்கடுக்கான மேற்கூரைகளிலோ இறங்கி, சொந்த ஊர் நினைவில் உள்ள இந்த ஆதிக்க வர்க்கத்தினருக்கு ஒரு விஷயத்தைத் தெளிவுப்படுத்தும். ஹாலந்து நாடு முக்கியத்துவம் பெறுவது அது ஐரோப்பாவின் வர்த்தகத் தளமாக விளங்குவதால் மட்டுமன்று அதன் கடலாலும்தான். ஆம், சிப்பாங்கோவுக்கு (ஜப்பானியத் தீவுகள்) அழைத்துச் செல்லும் இக்கடல், மகிழ்ச்சியில் தள்ளாடி மடிவதற்கான தீவுகளுக்கும் மக்களை அழைத்துச் செல்லும்.

சரி, நான் என் வாதத்தைத் தொடர்கிறேன். நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். இது என் பழக்க தோஷம். இந்த நகரத்தைப் பற்றியும் முக்கியமான விஷயங்களைப் பற்றியும் உங்களுக்கு நான் கூறுவதைப் புரியவைக்கவேண்டும் என்ற விருப்பமும் இதில் அடங்கியுள்ளது. ஏனெனில், நாம் முக்கியமான விஷயத்தை அறிந்துகொள்ள வேண்டிய இடத்தில் இருக்கிறோம். மையப்புள்ளியை நோக்கிக் குவியும் ஆம்ஸ்டர்டாமின் கால்வாய்களைக் கவனித்தீர்களா? அவை நரக வளையங்கள் போல் காட்சியளிக்கின்றன இல்லையா? அதுவும் நடுத்தட்டு மக்களின் நரகம். இயல்பாகவே அவர்கள் கெட்ட கனவுகளுடன் இருப்பவர்கள். வெளியில் இருந்து உள்ளே நுழையும் போது இந்த வளையங்களுக்குள் போகப் போக, இழைத்திருக்கும் குற்றங்களுக்கேற்ப நிலைமை இறுக்கமாகவும் இருள் மயமாகவும் மாறிவிடும். இப்பொழுது நாம் இருப்பது கடைசி வளையத்தில். இது என்ன வளையம்? அட! உங்களுக்கு அது தெரியுமா? தொலைந்தது போங்கள்! உங்களை எந்த வகையில் சேர்ப்பது என்று தெரியவில்லை. நாம் இருப்பது ஐரோப்பியக் கண்டத்தின் கடைக்கோடியில் என்றாலும் இதனை முக்கிய விஷயங்களுக்கான

இடம் என்று நான் குறிப்பிடுவதற்குக் காரணம் புரிகிறதா? இத்தகைய விசித்திரங்கள், விவரமான ஆட்களுக்குப் புரிந்துவிடும். எது எப்படி இருந்தாலும், செய்தித்தாள் வாசிப்பவர்களுக்கும் தாறுமாறான உறவுகொள்பவர்களுக்கும் அதிகம் புரியாது. ஐரோப்பாவின் பல பகுதிகளில் இருந்து வரும் அவர்கள், உள்ளடங்கிய கடலைச் சுற்றியுள்ள களையிழந்த புகலிடப் பகுதியில் தங்குகின்றனர். சைரன் ஒலிகளைக் கேட்டு, பனி மூட்டத்தில் கப்பல்கள் வருவது தெரிகிறதா என்று தேடிப்பார்த்து ஏமாந்து போகின்றனர். மழையில் நனைந்தபடிக் கால்வாய்கள் வழியாகத் திரும்பி, குளிரில் விறைத்துப் போய், 'மெக்ஸிக்கோ சிட்டி'க்குள் நுழைந்து எல்லா மொழிகளிலும் ஜின் கேட்கின்றனர். அங்குதான் நான் அவர்களுக்காகக் காத்திருக்கிறேன்.

அப்படியென்றால், என் நாட்டிலிருந்து வந்திருக்கும் அருமை நண்பரே, நாளைக்குச் சந்திப்போம். இப்பொழுது நீங்கள் செல்லவிருக்கும் பாதை உங்களுக்குத் தெரியும். நான் இந்தப் பாலத்தின் அருகில் உங்களிடமிருந்து விடைபெறுகிறேன். இரவு நேரத்தில், நான் ஒருபோதும் பாலத்தின் மீது செல்வதில்லை. அதற்குக் காரணம் நான் எடுத்துக்கொண்ட ஒரு சபதம்தான். நீங்களே நினைத்துப்பாருங்கள். யாரோ ஒருவர் தண்ணீருக்குள் குதித்துவிட்டால் இரண்டு சாத்தியங்கள் உண்டு. ஒன்று, அவரைக் காப்பாற்ற நீங்களும் குதிக்க வேண்டும். இந்தக் குளிர்காலத்தில் இதை விடப் பெரிய ஆபத்து உங்களுக்கு வேறு எதுவும் இருக்க முடியாது. அடுத்த சாத்தியக்கூறு, அவரை நீங்கள் காப்பாற்றாமல் பரிதவிக்கவிடுவது. ஆனால், குதிக்க வேண்டும் என்ற எண்ணத்தை அடக்கி, அப்படிக் குதிக்காமல் விடுவதும் பயங்கரமான வேதனையை உண்டாக்கக் கூடும். போய் வரட்டுமா? என்ன கேட்டீர்கள்? அந்தப் பெண்களா? அதோ அங்கே ஜன்னல்களுக்குப் பின்னால் இருக்கிறார்களே அவர்களா? அது ஒரு கனவு! அதிகச் செலவில்லாமல் கிடைக்கும் கனவு. பயணம் செய்யலாம்! மசாலா நெடியோடு அப்பெண்கள் இந்தியத் தீவுகளுக்குச் செல்ல உங்களை வரவேற்பார்கள். நீங்கள் உள்ளே நுழைந்தால் போதும்! திரைச்சீலைகளை இறக்கிவிடுவார்கள். அவ்வளவுதான், கடற் பயணம் தொடங்கிவிடும். நிர்வாண உடல்களில் கடவுள்கள் வந்து இறங்க, தீவுகள் வெவ்வேறு திசையில் விலகிச் செல்லும். காற்றில் அலைக்கழிக்கப்படும் பனைமரங்களாய், அவை தலைவிரிக்கோலமாய்க் காட்சியளிக்கும். போய்த்தான் பாருங்களேன்.



அது என்ன தண்டனை வழங்கக்கோரும் நீதிபதி? அட! அந்த விஷயத்தைச் சொல்லி உங்களைக் குழப்பி விட்டேன். தயவுசெய்து என்னை நம்புங்கள். நான் உங்களுக்குத் தொல்லை தர வேண்டும் என்று அப்படி செய்யவில்லை. இன்னும் கொஞ்சம் தெளிவாகவே என்னால் விளக்க முடியும். ஒருவகையில், நான் செய்யும் வேலையில் அதுவும் அடங்கும். ஆனால் அதற்கும் முன், நடந்து முடிந்த சம்பவங்கள் சிலவற்றை உங்களுக்குச் சொல்லியாக வேண்டும். அப்பொழுதுதான் என் கதை தெளிவாக உங்களுக்குப் புரியும்.

சில ஆண்டுகளுக்கு முன், நான் ஒரு வழக்குரைஞராகப் பாரீஸில் பணியாற்றி வந்தேன். அதுவும் புகழ்பெற்ற வழக்குரைஞராக. நிச்சயமாக, என் உண்மையான பெயரை உங்களிடம் சொல்லவில்லை. என்னிடம் ஒரு சிறப்பு இருந்தது. அதாவது உன்னதமான விஷயங்களுக்காக மட்டுமே வழக்காடுவேன். விதவைகளுக்கும் அனாதைகளுக்கும் வாதாடுவது என்பார்களே, அது போல். ஏன் அப்படிச் சொல்கிறார்கள் என்று தெரியவில்லை. ஏனென்றால் துரோகம் செய்யும் விதவைகளும் உண்டு; இரக்கமற்ற அனாதைகளும் உண்டு. ஆனால் குற்றஞ்சாட்டப்பட்ட ஒருவரிடம், பாதிக்கப்பட்டதற்கான சிறு துப்புக் கிடைத்தாலும் போதும், என் மூளை செயலில் இறங்கிவிடும். என்ன மாதிரியான நடவடிக்கை தெரியுமா? சூறாவளியாகச் சுழல்வேன்! என் உணர்ச்சிகளை எளிதில் வெளிப்படுத்திவிடுவேன். நாள்தோறும் நீதி என்னோடு இரவில் தங்கிவிடுவதாகக் கூட நினைக்க வாய்ப்பிருந்தது. என் தொனியில் உள்ள துல்லியம், என் உணர்வில் உள்ள நியாயம், என் வாதத்திறன், அரவணைப்பு, கோபத்தை அடக்கியாண்டு நான் வைக்கும் வாதங்கள், இவை யாவும் உங்களுக்குப் பிடித்திருக்கும் என்று உறுதியாக நம்புகிறேன். இயற்கையாகவே எனக்கு நல்ல உடல்நிலை வாய்த்திருக்கிறது. எனவே உன்னதத் தன்மையும் தானாகச் சேர்ந்துவிடுகிறது. இவற்றைத் தவிர இரண்டு உண்மையான உணர்வுகள் எனக்குப் பக்கபலமாக வாய்த்திருந்தன. முதலில் நீதிமன்றத்தில் நல்லவர்கள் பக்கத்தில் நின்று வாதாடுகிறோம் என்ற திருப்தி. அடுத்ததாக, பொதுவாக நீதிபதிகள் மேல் தன்னிச்சையாக எழும் வெறுப்பு. என்ன இருந்தாலும், அந்த வெறுப்பு மட்டும் அந்த அளவுக்கு நியாயமானது, அனிச்சையானது என்று சொல்ல முடியாது. அந்த வெறுப்பின் நியாயம் இப்பொழுது விளங்குகிறது. ஆனால் வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு அது சோகமானதொரு விஷயமாகத் தோன்றியது. இன்றைய சூழலில் நமக்கு நீதிபதிகள் தேவைப்படுகின்றனர் என்பதையாவது மறுக்க முடியாது இல்லையா? இருந்தாலும், அந்த ஆச்சரியமான வேலையைச் செய்ய ஒரு மனிதன் எவ்வாறு தன்னைத்தானே நியமித்துக்கொள்கிறான் என்பதைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நான் அதை ஏற்றுக்கொண்டதற்குக் காரணம் மனிதர்களின் தேவையைப் புரிந்துகொண்டதுதான். உண்மையில், ஒரே நேரத்தில் கோடிக்கணக்கில் வந்து பயிர்களை அழித்துச் செல்லும் வெட்டுக்கிளிகளைச் சகித்துக்கொள்வதுபோல்தான் இதுவும். ஒரே வித்தியாசம், இந்த வெட்டுக்கிளிகளின் படையெடுப்பால் எனக்கு ஒரு லாபமும் கிடையாது. மாறாக என்னிடம் வழக்கைக் கொண்டுவரும், நான் வெறுக்கும் அந்த மனிதர்களிடம் பேசுவதால்தான் எனக்கு அன்றாட வருவாய் கிடைக்கிறது.

எது எப்படியோ, நான் நல்லவர்கள் பக்கத்தில் இருக்கிறேன். என் மனச்சாட்சி அமைதியடைய அது போதுமே. சட்டப்படி நடக்கிறோம் எனும் உணர்வு, நாம் செய்வது சரி என்ற திருப்தி, சுய கௌரவம் தரும் சந்தோஷம், இவைதான் நம்மைத் தூக்கி நிறுத்தவும் முன்னேறச் செய்யவுமான சக்திவாய்ந்த சாதனங்களாகும். மாறாக, மனிதர்களிடமிருந்து இவற்றைப் பறித்துவிட்டால் அவர்களை வெறிபிடித்த நாய்களாக மாற்றிவிடுவீர்கள். தன்மீது தவறு இருப்பதைத் தாங்கிக்கொள்ள முடியாத ஒரே காரணத்தால்

எவ்வளவு குற்றங்கள் நடந்துவிட்டன பார்த்தீர்களா! எனக்குத் தெரிந்த ஒருவன் இருந்தான். தொழிலதிபரான அவனுடைய மனைவி அற்புதமான பெண். எல்லாருக்கும் பிடித்தமானவள். இருந்தாலும் அவளுக்கு அவன் துரோகம் செய்தான். தன்னைப் பற்றிய நன்னடத்தைச் சான்றிதழைப் பெறவோ, தனக்குத் தானே அதனை வழங்கிக்கொள்ளவோ முடியாத அளவுக்குத் தவறு இழைத்திருந்தான். உண்மையில், இத்தகைய நிலையில், தான் இருப்பது அவனுக்குப் பயங்கரக் கோபத்தை உண்டாக்கியது. தன் மனைவி நல்லவளாக நடந்துகொள்வது அதிகரித்துக்கொண்டே போகப் போக அவன் கோபமும் அதிகரித்தது. இறுதியில் அவனால் தனது தவற்றைத் தாங்கிக்கொள்ள இயலாமல் போனது. பிறகு என்ன செய்தான் தெரியுமா? அவளுக்குத் துரோகம் செய்வதை நிறுத்திக் கொண்டானா? அதுதான் இல்லை. அவன் அவளைக் கொன்றுவிட்டான். அப்படியான சூழலில்தான் அவனுடனான தொடர்பு எனக்கு ஏற்பட்டது.

என் தொழிலைக்கண்டு எல்லாரும் பொறாமைப்படும் அளவுக்கு இருந்தேன். குற்றவாளிகளின் பட்டியலில் என் பெயர் இடம்பெறும் வாய்ப்பைத் தவிர்த்துவந்தேன். குறிப்பாக, நான் திருமணமாகாதவன் என்பதால், என் மனைவியைக் கொல்லக் கூடிய வாய்ப்பு அறவே இல்லை. குற்றம் செய்தவர்களுக்காக வாதாட நான் ஒப்புக்கொண்டேன். ஒரே ஒரு நிபந்தனையைத்தான் வைப்பேன். குற்றவாளிகள் நல்லவர்களாக இருக்க வேண்டும். காட்டுமிராண்டிகளில் நல்லவர்கள் இருப்பதில்லையா, அது போல். இப்படிப் பட்டவர்களுக்காக நான் பரிந்து வாதாடும் முறை எனக்குப் பெரும் திருப்தியை அளித்துள்ளது. என் தொழிலைப் பொறுத்தவரை என்னிடம் எந்தக் கறையினையும் காணமுடியாது. நான் ஒருபோதும் லஞ்சம் பெற்றதில்லை. அதைக் குறிப்பிட வேண்டியதில்லை. ஆனால் எந்தவொரு நடவடிக்கையிலும் நான் தரம் தாழ்ந்ததில்லை. இன்னுமொரு அதிசயமான விஷயம், எனக்குச் சாதகமாகப் பேசும்பொருட்டு எந்தப் பத்திரிக்கையாளரையும் புகழ்ந்ததில்லை. அதேபோல் எந்த அரசு ஊழியரையும், அவருடைய நட்பு உதவியாக இருக்கும் என்று நினைத்து நான் புகழ்ந்ததுமில்லை. மேலும், இரண்டு அல்லது மூன்று முறை ‘லெழியோன் தொனேர்’ என்னும் உயரிய விருது அதிருஷ்ட்டவசமாக என்னைத் தேடி வந்தது. ஆனால் அடக்கமான பெருந்தன்மையோடு என்னால் அதை மறுக்க முடிந்தது. இப்படி மறுப்பதில்தான் உண்மையான கௌரவம் இருப்பதாகக் கருதினேன். அதுமட்டுமல்ல, ஏழைகளிடம் நான் பணம் வசூலித்ததில்லை. இதைத் தம்பட்டம் அடித்துச் சொல்லிக் கொண்டதும் இல்லை, அய்யா! அதற்காக, நான் இதையெல்லாம் சொல்லி இப்பொழுது பெருமைப்பட்டுக் கொள்கிறேன் என்று முடிவுசெய்துவிடாதீர்கள். இதில் எனக்கு எந்தப் பெருமையும் இல்லை. நம் சமுதாயத்தில் ஆசை இருக்க வேண்டிய இடத்தில் பேராசை மேலோங்கியிருப்பதை நினைத்தால் எனக்கு எப்போதும் சிரிப்பு வந்துவிடும். நான் உயர்ந்த இலக்கை நோக்கியே சென்றுள்ளேன். என் விஷயத்தைப் பொறுத்தவரை சரியாகத்தான் சொல்கிறேன் என்று உங்களுக்குச் சீக்கிரத்தில் புரிந்துவிடும்.

எனக்கு ஏற்பட்ட திருப்தியைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். என் இயல்பான குணம் எனக்கு வசதியாக இருந்தது. அதில்தான் வாழ்வின் சந்தோஷம் அடங்கியிருக்கிறது என்று நம் எல்லாருக்கும் தெரியும். இருந்தாலும் நாம் ஒருவரையொருவர் தேற்றிக்கொள்வதற்காகச் சுயநலம் என்று சொல்லி இத்தகைய சந்தோஷங்களை முறைகேடானது எனக் கண்டிப்பது போல் அவ்வப்போது பாவனை செய்கிறோம். என்னிடம் இருந்த இந்தக் குணம், விதவைகளிடமும் அனாதைகளிடமும் சரியான பலனைத்தந்தது என்று சொல்லலாம். காலப்போக்கில் என் வாழ்க்கையை முழுவதுமாக இது ஆட்கொண்டுவிட்டது. உதாரணமாகப் பாதையைக் கடக்க முற்படும் பார்வை இழந்தவர்களுக்கு உதவிசெய்ய எனக்கு அதிக விருப்பம் இருந்தது. நடைபாதையின் விளிம்பில் தயங்கி நிற்கும் பார்வையற்றவரின் கைத்தடியைத் தூரத்தில் இருந்து பார்த்த அடுத்த கணமே வேகமாக அந்த இடத்துக்குப்

போய்விடுவேன். சில நேரம், வேறு ஏதாவது கருணைக்கரம் ஒன்று உதவிசெய்ய வரும். அப்படி வேறு யாராவது காப்பாற்ற முன்வரும்போது அதற்கு ஒரு நொடிக்கும் முன்னதாக நான் முந்திக்கொள்வேன். அதன் பிறகு கனிவாகவும் ஆனால் இறுக்கமாகவும் அவருடைய கைகளைப் பற்றிப் போக்குவரத்து நெரிசலைத் தாண்டிப் பாதுகாப்பாக அடுத்த நடைபாதைக்கு அழைத்துச் செல்வேன். விடைபெறும்போது, எங்களுக்குள் உணர்ச்சிவயப்பட்டுப் பிரிவோம். இதே போல், சாலைகளில் வழிகாட்டி உதவுவது எனக்கு எப்போதும் பிடிக்கும். புகைக்க லைட்டர் தருவேன். அதிகமான பாரமுடைய வண்டிகளை இழுக்க உதவி செய்வேன். பழுதாகி நிற்கும் காரைத் தள்ள உதவுவேன். மீட்பர் சேனையின் பெண் ஊழியரிடம் செய்தித்தாளை வாங்குவேன். வயதான பெண்மணி ஒருவர் வைத்திருக்கும் மலர்கள், மோன்பர்னாஸ் கல்லறையிலிருந்து களவாடப்பட்டவை என்று தெரிந்திருந்தபோதிலும் அவற்றைக் காசு கொடுத்து வாங்குவேன். இன்னும் ஒரு விஷயம். இதைச் சொல்வதற்கே கஷ்டமாக இருக்கிறது. எனக்குத் தர்மம் செய்வது பிடிக்கும். என் நண்பர்களில் பழுத்த கிருத்தவரான ஒருவர், யாராவது பிச்சைக்காரன் தம் வீட்டை நோக்கி வருவதைப் பார்த்தவுடன் முதலில் தனக்கு அருவருப்பு ஏற்படும் என்று ஒப்புக்கொள்வார். ஆனால் எனக்கு ஏற்படும் உணர்வோ அதைவிட மோசமானது. ஏனெனில், எனக்கு அதுபோன்ற சமயங்களில் மகிழ்ச்சி ஏற்படும். சரி, அதை விட்டுவிட்டு வேறு விஷயத்துக்குப் போவோம்.

இனி, என்னுடைய நல்லியல்பைப் பற்றிப் பேசுவோம். என்னுடைய நன்னடத்தை எல்லாருக்கும் தெரிந்தது மட்டுமல்ல, விவாதத்துக்கும் அப்பாற்பட்டது. உண்மையில், என்னிடமுள்ள நல்ல பழக்கவழக்கங்கள் எனக்குப் பெரும் சந்தோஷத்தை அளித்தன. சிலநாள் காலையில், பேருந்திலோ மெட்ரோவிலோ பயணம் செய்யும்போது என் இருக்கையை, அதைப் பெறுவதற்கு உண்மையிலேயே தகுதி உள்ள ஒருவருக்காக விட்டுக் கொடுத்திருக்கிறேன். வயதான பெண்மணி ஒருவர் தவறவிட்ட பொருளைக் கண்டெடுத்து, எனக்கேயுரிய புன்னகையுடன் அதனை அவரிடம் தந்துள்ளேன். இதே போல், என்னைவிட அவசரமாகச் செல்ல வேண்டிய ஒருவருக்காக என் டாக்சியை விட்டுக் கொடுத்திருக்கிறேன். இத்தகைய வாய்ப்புகள் கிடைத்த நாட்கள் எனக்கு மகிழ்ச்சியாக இருந்தன என்று உணர்ந்திருக்கிறேன். இதில் குறிப்பிட்டாக வேண்டியது என்னவென்றால், அரசுப் போக்குவரத்து வாகனங்கள் வேலை நிறுத்தம் செய்யும் நாட்களில், தங்கள் வீடுகளுக்குச் செல்ல முடியாமல் தவித்த, பரிதாபத்துக்குரிய என் ஊரைச் சேர்ந்த சிலரைப் பேருந்து நிறுத்தங்களிலிருந்து என் காரில் அழைத்துச் செல்லும் வாய்ப்புக் கிடைத்ததை நினைத்து மிகவும் மகிழ்ச்சியடைந்துள்ளேன். நாடக அரங்கில் அருகருகே அமர்ந்து ரசிக்கமுடியாமல் தவித்த ஜோடியை இணைத்துவைக்க என் இருக்கையைத் தானம் செய்துள்ளேன். பயணத்தின்போது, உயரத்தில் உள்ள உடைமைகள் வைக்கும் இடம் எட்டாததால் தன் பெட்டிகளைத் தூக்கி வைக்கச் சிரமப்பட்ட இளம் பெண்ணுக்கு உதவி செய்துள்ளேன். இவைபோன்ற சேவைகளை மற்றவர்களைக் காட்டிலும் நான் அடிக்கடி செய்ய நேர்ந்ததற்குக் காரணம் இத்தகைய சந்தர்ப்பங்கள் வாய்த்தபோது அவற்றைத் தவறவிடாமல் பயன்படுத்திக்கொள்ள அதிகக் கவனம் செலுத்தினேன் என்பதுதான். மேலும், அப்படி செய்தபோது எனக்கு அதிகமான திருப்தி கிடைத்ததையும் உணர்ந்தேன்.

என்னை எல்லாரும் தாராள மனமுடையவர் என்பார்கள். நான் அப்படித்தான் இருந்தேன். நான் நிறைய தர்மம் செய்திருக்கிறேன். வெளிப்படையாக மட்டுமல்லாமல் தனிப்பட்ட முறையிலும். ஆனாலும் ஒரு பொருளோ, குறிப்பிட்ட தொகையோ என்னைவிட்டுப் போக நேர்ந்த போது அதற்காகக் கஷ்டப்பட்டதில்லை. மாறாக அதிலிருந்து தொடர்ந்து திருப்திகள் கிடைத்துவந்தன. இத்தகைய தர்மங்கள் செய்தபின் அவற்றால் பலன் எதுவும் இல்லை என்ற எண்ணமும், செய்ந்நன்றி மறத்தல் நிகழக்கூடும் என்ற எண்ணமும் சில நேரங்களில் என் மனதில் ஒருவித சோகத்தைத் தோற்றுவிக்கும். ஆனால் அதில்

கிடைக்கும் திருப்தியையும் எவ்விதத்திலும் குறைவாகக் கருதமுடியாது. தர்மம் செய்வதைப் பெரிதும் விரும்பினேன். என்றாலும் அதைச்செய்யும்படி என்னை வற்புறுத்துவதுதான் பிடிக்காது. பண விஷயத்தில் கறாராக இருப்பதில் எனக்கு அறவே விருப்பமில்லை. எனவே அதில் எனக்கு எரிச்சல் ஏற்படும். என் தர்மச் செயல்களுக்கு இறுதி முடிவு எடுப்பவன் நானாகத்தான் இருக்க வேண்டும்.

இவையெல்லாம் என் இயல்புகளின் சின்னச் சின்ன அம்சங்கள் என்றாலும் என் வாழ்க்கையில், குறிப்பாக என் பணியில் நான் தொடர்ந்து பெற்று வந்த திருப்திகளை நீங்கள் புரிந்துகொள்ள உதவும். உதாரணமாக, குற்றஞ்சாட்டப்பட்ட ஒருவர் சார்பில் வெறுமனே நீதிக்காகவோ அல்லது அவர்மீது உள்ள பரிதாபத்தாலோ நான் பணம் பெறாமல் வாதாடுவதாக வைத்துக்கொள்வோம். நீதிமன்ற வளாகத்தில், என்னைச் சந்திக்கும் அவருடைய மனைவி, அவர்களுக்காக நான் செய்த உதவிக்கு ஈடாக எதுவுமே இருக்க முடியாது என்பார். நான் அவரிடம் இது இயல்பானதுதான், இதே அளவுக்கு வேறு யாராவது கூடச் செய்திருக்க முடியும் என்று கூறுவேன். எதிர்வரும் கஷ்டமான நாட்களைச் சமாளிக்க அவர்களுக்குப் பண உதவி செய்யவும் என்னால் முடியும். அதன்பின், உணர்ச்சிப் பிரவாகத்துக்கு அணைபோடவும், அதனைக் கட்டுக்குள் கொண்டுவரவும் மட்டுமின்றி, அந்த ஏழைப் பெண்ணின் கையை முத்தமிட்டுப் பிரியவும் எனக்கு வாய்ப்பு இருந்தது. நண்பரே, இப்படியெல்லாம் நடந்தால்தான் ஆசைகள் மட்டுமே கொண்ட சாதாரண மனிதன் என்ற நிலையிலிருந்து எழும்பி மேன்மை நிலையை எட்டமுடியும். அத்தகைய மேன்மை நிலையைத் தருவதைத்தான் கைம்மாறு கருதாத நற்செயலாக நினைக்க முடியும் என்பதை மறந்துவிடாதீர்கள்.

இத்தகைய உயர்நிலைகளைப் பற்றிப் பேசுவதை நிறுத்திக் கொள்வோம். உயர்நிலையைப் பற்றி நான் என்ன சொல்ல வருகிறேன் என்பது உங்களுக்கு இப்பொழுது புரிந்திருக்கும். நான் உங்களிடம் பேசிய இத்தகைய உயர்நிலைகளில் மட்டும்தான் என்னால் வாழ முடியும். உயர்நிலைகளைத்தவிர வேறு எந்த நிலையும் எனக்கு வசதியாக இல்லை என்று உணர்ந்திருக்கிறேன். என் அன்றாட வாழ்விலும் நான் உயர் நிலையில் இருப்பதையே விரும்புகிறேன். பூமிக்கு அடியில் செல்லும் மெட்ரோவை விடப் பேருந்தையே விரும்புவேன். டாக்சிகளைவிடத் திறந்த வெளி ஊர்திகள் பிடிக்கும். கட்டடத்தின் தாழ்த்தளத்தை விட மொட்டை மாடி பிடிக்கும். சாகச விமானப் பிரியராக நான் இருப்பதற்குக் காரணம், நம் தலை இருப்பது அந்தத் திறந்த வெளியில்தான். படகுகளில் கூட நான் மேல் தளத்தில் அமர்ந்தே பயணம் செய்வேன். மலைகளில் இருந்து பார்க்கும்போதுகூட, பள்ளத்தாக்குகளைத் தவிர்த்துவிட்டுச் சமவெளிகளையும் கணவாய்களையும் மட்டுமே பார்ப்பேன். முடிந்த அளவு கடல் அரிப்பால் ஏற்பட்ட சமவெளியை விரும்பும் நபராக இருந்தேன். ஏதாவது ஒரு கைத்தொழிலைத் தேர்ந்தெடுத்தாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு, கூரை வேய்பவர் அல்லது கடைசல் வேலைக்காரர் – இவர்களில் யாராக வாழ விருப்பம் என்று கேட்டிருந்தால் நிச்சயமாக நான் கூரைகளில் வேலைசெய்வதையே தேர்ந்தெடுத்திருப்பேன். அதனால் ஏற்படக்கூடிய மயக்கம் வரும் பிரச்சினையும் எனக்குப் பழகிப்போயிருக்கும். நிலக்கரிச் சுரங்கங்கள், கப்பலின் கீழ்த்தளங்கள், சுரங்கப்பாதைகள், குகைகள், குழிகள் – இவையெல்லாம் எனக்கு அச்சத்தை உண்டாக்கும். செய்தித்தாள்களில் முதல் பக்கத்தை அடைத்துக் கொள்ளும் குகை ஆராய்ச்சியாளர்கள்மீது எனக்கு அதிகப்படியான வெறுப்பு உண்டு. அவர்களுடைய நடவடிக்கைகளைக் கண்டு எரிச்சல் ஏற்படும். பாறையிடுக்கிலுள்ள சிறுபொந்தில் தலை சிக்கிக்கொள்ளும் ஆபத்து இருக்க, தரைமட்டத்திலிருந்து 2000 அடிகீழே செல்வது என்னும் இலக்கை எட்ட முயற்சி செய்வது (இதை வடிகுழாய் என்று இந்த முட்டாள்கள் அழைப்பார்கள்) என்னைப் பொறுத்தவரை, வக்கிரமும் மனப்பிறழ்வும் கொண்டவர்களின் சாதனையாகவே கருதமுடிகிறது. இதனுள் ஏதோ ஒரு குற்றச்செயல் அடங்கியிருக்கவேண்டும் என்று நினைப்பேன்.

மாறாக, கடல் மட்டத்துக்கு மேல் ஐந்நூறு அல்லது அறுநூறு அடி உயரத்தில் இயற்கையாக அமைந்த பால்கனி எனக்கு உகந்த இடமாக இருந்தது. குறிப்பாக, நான் தனியாக இருக்க நேர்ந்தால், இந்த மக்கள் கூட்டத்திலிருந்து விலகி உயரமான இடத்தில் நின்றவாறு நன்றாக சுவாசிக்க அதுதான் ஏதுவான இடமாகும். நல்ல சூரிய ஒளியில் தெளிவாகத் தெரியும் கடலை நோக்கியபடி அமைந்திருக்கும் அந்தப் பால்கனிதான் எனக்கு ஏற்ற இடமாகும். பிரசங்கங்கள், முக்கியமான போதனைகள், அக்கினி அதிசயங்கள் – இவையெல்லாம் உயரமான இடங்களில் ஏன் நிகழ்ந்தன என்று அப்போதுதான் எளிதாக விளங்கியது. என்னைப் பொறுத்தவரை, யாரும் குகையிலோ சிறைக்கொட்டடியிலோ அமர்ந்து தியானம் செய்ததில்லை. அவை கண்ணுக்கெட்டிய தூரம் பார்க்க வாய்ப்பளிக்கும் ஒரு கோபுரத்தில் அமைந்திருந்தாலொழிய அவ்வாறு செய்திருக்கமாட்டார்கள். இல்லையெனில், அவர்கள் அப்படியே சீரழிந்து போயிருப்பார்கள். இறைப்பணி செய்யச் சென்ற ஒருவர் அதனைச் செய்ய மறுத்ததற்குக் காரணம் புரிந்தது. அவர் அறை அவர் விரும்பியபடி அகண்ட சமவெளியை நோக்காமல், ஒரு சுவரை பார்த்தவாறு இருந்ததாம். என் விஷயத்தில், அவ்வாறு சீரழிந்துபோய் வாழும் சூழல் அமையவில்லை என்பதை நீங்கள் உறுதியாக நம்பலாம். எந்த நேரத்திலும், தனியாக இருந்தாலும் மற்றவர் மத்தியில் இருந்தாலும் உயரமான இடத்துக்குச் சென்று எல்லாருக்கும் தெரியும்விதமாக வாணவேடிக்கை காட்டுவேன். எல்லாரிடமிருந்தும் எனக்கு மகிழ்ச்சியான வரவேற்பு கிடைக்கும். இவ்வாறாக, நான் என் வாழ்க்கையில் ஓரளவுக்காவது இன்பத்தை அனுபவித்ததோடு உன்னதங்களை அடைவதிலும் ஓரளவு நிறைவை எட்டியிருக்கிறேன்.

நான் செய்துவந்த பணி, உயர்நிலைகளில் இருப்பதற்கான என் வேட்கையைத் திருப்திகரமாகப் பூர்த்திசெய்துவந்தது. அப்பணி என் அருகில் இருப்பவன்மீது எவ்விதக் கசப்புணர்வும் இல்லாமல் பார்த்துக்கொண்டது. இதன் மூலம் அவனுக்கு நான் எவ்வகையிலும் கடன்படாமல் அவனே எனக்குக் கடன்பட்டவனாக இருந்தான். மேலும், என் பணி என்னை நீதிபதிக்கும் மேல் அமரச் செய்ததோடு அந்த நீதிபதியையும் நான் எடைபோட உதவி செய்தது. அதே போல் குற்றஞ்சாட்டப்பட்டவனுக்கு மேலான நிலையில் என்னை வைப்பதன் மூலம் அவன் எனக்கு நன்றிக்கடன்பட்டவனாக இருக்குமாறு பணித்தது. நண்பரே! இத்தகைய நிலைமையைக் கொஞ்சம் கவனமாக யோசித்துப்பாருங்கள். நான் எவ்விதத் தண்டனையையும் அனுபவிக்காமல் வாழ்ந்து வந்தேன். எந்தத் தீர்ப்பிலும் எனக்குத் தொடர்பு இல்லை. நீதிமன்ற நாடகத்தில் எனக்கு எவ்வித முக்கிய வேடமும் இல்லை. தேவாலயங்களின் உயர்ந்த மாடங்களில் தெய்வச் சிலைகளை வைத்திருப்பார்கள். அவற்றை அவ்வப்பொழுது ஏதாவதொரு இயக்கமுறையில் கீழிறக்கிச் செயல் ஒன்றை நிகழ்த்திக்காட்டி அதன் பொருளை விளங்கச்செய்வார்கள். அவற்றைப் போலவேதான் நானும் இருந்தேன். என்ன இருந்தாலும், உயர்வான இடத்தில் இருந்து வாழ்வதுதானே அதிக மக்கள் பார்ப்பதற்கும் வணங்குவதற்கும் ஏற்ற ஒரே வழியாக இருந்து வருகிறது.

மேலும், என்னிடம் இருந்த நல்ல குற்றவாளிகளில் சிலர், எல்லோரும் பார்க்க வேண்டும் என்பதற்காகவும் எல்லாருடைய கவனத்தையும் ஈர்ப்பதற்காகவும் விருப்பப்பட்டே கொலை கூடச் செய்தனர். சிறையைவிட்டு வெளியேவந்தபின் தாங்கள் எதிர்கொண்ட வருத்தத்துக்குரிய சூழ்நிலையினைச் செய்தித்தாள்களில் வாசித்தனர். அநேகமாக அவர்களுக்கு ஒருவகையான பரிதாபத்துக்குரிய ஆறுதலையே அது அளித்திருக்கக்கூடும். ஏனெனில், பலரைப் போல் நீண்ட நாட்களுக்குத் தங்கள் அடையாளத்தை மறைத்துவாழ முடியாமல் அவர்கள் பொறுமையிழந்தனர். ஒருவகையில், இத்தகைய பொறுமையின்மையே அவர்களைக் கொடுஞ்செயல்களைச் செய்யவும் தூண்டியது. பிரபலமாக வேண்டுமென்றால், தன்னுடைய குடியிருப்புப் பொறுப்பாளரைக் கொன்றாலே போதும். துரதிர்ஷ்டவசமாக, அப்படி கிடைக்கும் பெயர் தற்காலிகமானதுதான். கத்திக்குத்தைப் பெறத் தகுதியான பொறுப்பாளர்கள் அந்த அளவுக்கு அதிகமாக இருக்கிறார்கள்; கத்திக்குத்துக்கும்

ஆளாகிறார்கள். சமூகத்தில், குற்றம் முக்கியத்துவம் பெறுவதென்பது தொடர்கதை; நிலையானதும்கூட. ஆனால் குற்றவாளிக்கு மட்டும் அங்குத் தற்காலிகமான இடம்தான் கிடைக்கும். விரைவிலேயே அவனுக்குப் பதிலாக வேறொருவன் வந்துவிடுவான். அதாவது, இத்தகைய குறுகியகால வெற்றியைப் பெற அந்தக் குற்றவாளிகள் அதிகமான காலத்தை விலையாகக் கொடுக்க வேண்டியுள்ளது. விளம்பரம் கிடைக்கும் என ஏங்கும் அந்தப் பரிதாபத்துக்குரியவர்களுக்காக வாதாடிக்கொண்டிருக்கும் எனக்கோ, அதே இடத்தில், அதே நேரத்தில் குறைந்த செலவில் புகழ் கிடைத்துவிடுகிறது. எனவே அவர்கள் மிகக்குறைந்த கட்டணம் செலுத்தும் விதமாக நான் சில போற்றத்தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டேன். ஏனெனில் ஒருவகையில் எனக்குக் கிடைக்கும் புகழுக்காக அவர்கள் பணம் செலவழிக்கிறார்கள். எனவே அவர்களுக்கு நான் ஏதேனும் கடன் பட்டிருக்கிறேன் என்ற உணர்வு தோன்றினால் அதைப் போக்க என் சீற்றம், திறன், அவர்கள் மேல் கொண்ட பரிவு இவையெல்லாம் சேர்ந்து எனக்கு உதவின. நீதிபதிகள் தண்டனையளித்தனர். குற்றஞ்சாட்டப்பட்டவர்களோ அதற்குப் பிராயச்சித்தம் தேடினர். ஆனால் நானோ, அனைத்துக் கடமைகளிலிருந்தும் விடுபட்டு, தீர்ப்புக்கும் தண்டனைக்கும் அப்பாற்பட்டு, இறைவனின் ஏதேன் தோட்டத்து அப்பழுக்கற்ற ஒளியில் சுதந்திரமாகக் கோலோச்சி நின்றேன்.

நீங்களே சொல்லுங்கள். எனக்கும் வாழ்க்கைக்கும் நேரடித் தொடர்பிருந்தால், அது ஏதேன் தோட்டத்தைப் போல் சொர்க்கம் தானே? எனக்கு அமைந்தது அத்தகைய வாழ்க்கைதான். வாழும் முறையை நான் ஒருபோதும் கற்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அப்படி பார்த்தால் பிறவியிலேயே எனக்கு எல்லாம் தெரிந்திருந்தது. சிலரிடம் ஒரு பிரச்சினை உண்டு. மற்றவர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டியிருக்கும், அல்லது குறைந்தபட்சம் அவர்களோடு உடன்பட வேண்டியிருக்கும். என்னைப் பொறுத்தவரை, இந்த உடன்பாடு ஏற்கெனவே எட்டப்பட்டுவிட்டது. தேவையானால், பழக்கப்பட்டவர்போல் நடந்துகொள்ளவும், சில நேரத்தில் மௌனம் காக்கவும் தெரிந்துகொண்டிருந்தேன். கறாராக நடந்துகொள்வதும், சகஜமாக நடந்துகொள்வதும் எனக்குக் கைவந்த கலை. எனக்கு எல்லாருடனும் நட்புறவு இருந்தது. என் புகழும் பெருகி இருக்கவே சமுதாயத்தில் எண்ணற்ற வெற்றிகளைக் குவித்துவந்தேன். தோற்றத்திலும் அப்படியொன்றும் மோசமாகத் தெரியமாட்டேன். நான் ஓயாமல் நடனமாடுபவன் போல் இருப்பேன். அதே நேரம் அடக்கமான கற்றறிந்த நபர் போலவும் இருப்பேன். அது அவ்வளவு சாத்தியம் இல்லையென்ற போதிலும், என்னால் ஒரே நேரத்தில் பெண்களின் நட்பைப் பெறவும் நீதித்துறையில் வெற்றிபெறவும் முடிந்தது. விளையாட்டுகளிலும் நுண்கலைகளிலும் ஆர்வம் காட்டிவந்தேன். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால் . . . வேண்டாம், நான் இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன்; இல்லையென்றால் நான் தற்பெருமை பேசுவதாக நீங்கள் நினைக்கக்கூடும். ஆனால் என்னைக் குறித்துக் கொஞ்சம் கற்பனை செய்துபாருங்கள். வலிமை மிகுந்தவன், நல்ல ஆரோக்கியத்துடன் பல திறமைகளைத் தாராளமாகப் பெற்றவன்; உடலாலும் உள்ளத்தாலும் செம்மையாகச் செயல்படக் கூடியவன்; பணக்காரனும் இல்லை, ஏழையும் இல்லை; நிம்மதியாகத் தூங்குபவன்; தன்னைக் குறித்து முழுமையான திருப்தியடைந்தவன்; மகிழ்ச்சிகரமான சமூக நல்லுணர்வைத் தவிர வேறு விதமாக எதையும் வெளிக்காட்டாதவன்; இத்தனை சிறப்புகளுடைய நான் எவ்வளவு தன்னடக்கத்துடன் பேசினாலும் என் வாழ்க்கை வெற்றிகரமானதுதான் என்பதை ஏற்றுக்கொள்வீர்கள்தானே !

உண்மையில் என்னைவிட இயல்பாக வாழ்ந்த மனிதர்கள் மிகவும் குறைவாகவே இருந்தனர். வாழ்க்கையுடன் எனக்கு எவ்விதமான பிணக்கும் இல்லை. அடிமுதல் நுனிவரை அதனுடன் அப்படியே இணைந்திருந்தேன். வாழ்க்கையின் முரண்கள், கட்டுப்பாடுகள், மேன்மை என எதையும் புறந்தள்ளாமல்

ஏற்றுக்கொண்டேன். குறிப்பாக சதை – ஜடப்பொருள் – சுருக்கமாகச் சொல்லப்போனால் மனித உடல், தனிமையில் வாடும் அல்லது காதலில் கட்டுண்டிருக்கும் மனிதரைப் பெரும்பாலும் நிலைகுலைய வைக்கும் அல்லது அச்சுறுத்தும். ஆனால், என்னைப் பொறுத்தவரை, அப்படியன்று. என்னைத் தன் கைப்பாவையாக ஆட்டிப் படைக்காமல், எப்போதும் ஒரு சீரான மகிழ்ச்சியை அது அளித்து வந்தது. என் உடல்தான் என் சொத்து. என்னிடம் உள்ள சகஜத்தன்மைக்கு அதுதான் காரணம். இதுபோன்ற ஆரவாரமற்ற ஆளுமை, தங்கள் வாழ்க்கைக்குச் சில நேரங்களில் பயனுடையதாக இருந்ததைப் பலர் ஏற்றுக்கொண்டுள்ளனர். என்னை நாடிப் பலரும் வர இதுதான் காரணம். மேலும் என்னை ஏற்கெனவே சந்தித்துப் பழகியதைப் போன்றும் அவர்கள் உணர்ந்தனர். வாழ்க்கை, வாழ்க்கையில் சந்தித்த மனிதர்கள், வாழ்க்கை அளித்த கொடைகள் என இவையெல்லாம் என்னைத் தேடி வந்த வண்ணம் இருந்தன. இத்தகைய பேறுகளை நான் பெருமிதத்துடனும் மகிழ்ச்சியுடனும் ஏற்றுக்கொண்டேன். உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால், இவ்வளவு முழுமையும் எளிமையும் நிறைந்த மனிதனாக இருந்ததால், ஒருவகையில் அதீத ஆற்றல் பெற்ற மனிதனாக என்னை உணர்ந்தேன்.

நான் கௌரவமான, அதே சமயம் சாதாரண குடும்பத்தில் பிறந்தவன். என் அப்பா ஓர் இராணுவ அதிகாரியாகப் பணியாற்றி வந்தார். இருந்தாலும் சில நாட்களில் என்னை அரச குமாரனாகவோ எரியும் புதராக வெளிப்பட்ட இறைவனாகவோ உணர்ந்தேன்; இதை நான் தாழ்மையுடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஒன்றை மட்டும் மறந்துவிடாதீர்கள். மற்றவர்களைக் காட்டிலும் அதிகமான அறிவுத்திறனுடன் இருந்தேன் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. இங்கு அதைப் பற்றிப் பேச வரவில்லை. மேலும், இக்கருத்தில் நான் கொண்டுள்ள உறுதிக்கு எவ்வித முக்கியத்துவமும் இல்லை. ஏனெனில், இதே உறுதி பல மூடர்களிடமும் காணப்படுகிறது. ஒரு விஷயத்தைக் கூற எனக்குக் கொஞ்சம் தயக்கமாகத்தான் இருக்கிறது. நான் நினைத்தவை எல்லாம் நிறைவேறியதால் என்னைப் பிரத்யேக அருள்பெற்ற ஒருவனாக உணர்ந்தேன். அதாவது நீடித்த, நிலையான வெற்றியைப் பெறும் பாக்கியம் பெற்றவனாகக் கருதினேன். பார்க்கப்போனால், இப்படி எண்ணுவதுகூட என் தன்னடக்கத்தால் விளைந்ததுதான். இதுபோன்ற வெற்றிகள் என் திறமைகளின் விளைவாகக் கிடைத்தவை என்று நான் ஏற்கவில்லை. இத்தகைய அதீத, பன்முகத் திறமைகள் ஒரே மனிதனிடம் குவிந்திருக்கக் குருட்டு அதிர்ஷ்டம் மட்டுமே காரணம் எனவும் நான் நினைப்பதில்லை. என் வாழ்க்கையை மகிழ்ச்சியாக அனுபவித்து வந்தேன். ஒருவகையில் இத்தகைய அருமையான வாழ்க்கையைப் பெற ஏதோ ஓர் அதீத சக்திதான் எனக்கு உதவியது என நம்பவேண்டியதாயிற்று. மேலும் எனக்கென்று மதம் எதுவும் கிடையாது என்று நான் சொல்லும்போது இக்கருத்து எவ்வளவு அசாதாரணமானது என்பது உங்களுக்கு நன்றாகப் புரிந்திருக்கும். சாதாரணமோ அசாதாரணமோ அன்றாட வாழ்விலிருந்து என்னை விடுவித்துக்கொண்டு உயரத்தில் ஏறிச் சஞ்சரிக்க அக்கருத்து உதவியது. அந்தக் குறிப்பிட்ட காலகட்டத்தில் அப்படித்தான் உயரத்தில் பறந்துகொண்டிருந்தேன் என்று சொல்லலாம். உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் அத்தகைய காலம் வராதா என்று இன்றும் ஏங்கிக் கொண்டிருக்கிறேன். அந்தக் குறிப்பிட்ட இரவுவரை நான் அப்படித்தான் உயரத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தேன். இல்லை, இல்லை; அது வேறு கதை. அதை மறந்தாக வேண்டும். ஒருவேளை, நான் அதற்கு அதிக முக்கியத்துவம் தருகிறேனோ? நான் எல்லாவற்றையும் சகஜமாக அணுகிவந்தது உண்மைதான். ஆனால் எதிலும் எனக்குத் திருப்தியில்லை. கிடைக்கும் ஒவ்வொரு சுகமும் மற்றுமொரு சுகத்தைத் தேடச் செய்தது. இவ்வாறு சுகத்தை மாறிமாறி அனுபவித்துக் கொண்டிருந்தேன். வாழ்க்கையின் மீதும், பெண்களின் மீதும் கொண்ட மயக்கத்தினால் இரவு முழுவதும் ஓயாமல் ஆடிய அனுபவமும் உண்டு. அப்படி ஆடிக்கொண்டிருந்தபோது, இரவில் நீண்ட நேரம் கடந்த பின், மதுவால் ஏற்படும் லேசான மயக்கம், எல்லைமீற வரும் புத்துணர்வு, சுற்றி இருப்பவர்களிடையே காணப்பட்ட பயங்கரமான தன்னிலை மறக்கும் போக்கு இவை அனைத்தும்

*சேர்ந்து எனக்குக் களைப்பையும், அதே சமயம் திருப்தியையும் ஏற்படுத்தும். அப்பொழுது என் களைப்பின் விளிம்பில், ஒரே நொடிக்குள், மனித வாழ்வின் இரகசியமும் உலகத்தின் இரகசியமும் தெரிந்துவிட்டதைப் போல் இருக்கும். ஆனால் அந்தக் களைப்பு மறுநாளே மறைந்துவிடும். அதனுடன் அந்த இரகசியமும் மறந்துபோகும். நான் மீண்டும் துள்ளியெழுவேன். இப்படி கேட்டதெல்லாம் கிடைத்துவிட்டாலும் திருப்தி என்பதே ஏற்படாமல் எப்போது நிறுத்துவது என்று தெரியாமல் தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தேன். என் ஓட்டம் அந்தக் குறிப்பிட்ட நாள்வரை நீடித்தது. இன்னும் குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால் நான் உற்சாகமாகக் கொண்டாடிய அந்தக் குறிப்பிட்ட இரவுவரை நீடித்தது. அதாவது இசை ஓய்ந்து, விளக்குகள் அணைந்த அந்த இரவுப்பொழுது வரை. சரி, நம் நண்பன், 'ஆதி மனிதனை'க் கூப்பிடட்டுமா? அவனுக்கு நன்றி கூறும் விதமாகத் தலை அசையுங்கள். அத்துடன் என்னோடு சேர்ந்து மது அருந்துங்கள். எனக்கு உங்கள் அனுசரணை தேவைப்படுகிறது.*

*நான் இப்படிப் பேசுவது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும் என்பது புரிகிறது. உங்களுக்கு ஏதாவது ஒரு நேரத்தில் திடீரென்று ஆறுதல், உதவி, நட்பு – இவையெல்லாம் தேவைப்பட்டிருக்கும் இல்லையா? ஆம். நிச்சயமாக இருக்கும். கிடைத்த ஆறுதலில் திருப்தியடைய நான் பழகிவிட்டேன். ஆறுதல், எளிதில் கிடைக்கக்கூடியது. ஆனால் அதில் எவ்வித எதிர்பார்ப்பும் இருக்காது. "என் ஆறுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்" என்று சொல்லும் போது உள் மனதில் ஒலிக்கும் வாசகம், "இப்பொழுது மற்ற விஷயங்களைக் கவனிப்போம்" என்பதாகும். அவ்வுணர்வு நிர்வாகக்குழுக் கூட்டம் ஒன்றின் தலைவருக்கு ஏற்படுவது போன்றதாகும். பெரும் இழப்புகளின் முடிவில் மலிவாகக் கிடைக்கக்கூடியது. நட்பு அவ்வளவு எளிதில் கிடைத்துவிடாது. அதைப் பெற நீண்ட காலமாகும். அதிகமான சிரமம் இருக்கும். ஆனால் பெற்றுவிட்ட பிறகு, அதிலிருந்து விடுபட முடியாது; சமாளித்துத்தான் ஆக வேண்டும். எனினும் ஒவ்வோர் இரவிலும் நண்பர்கள் உங்களைத் தொலைபேசியில் தொடர்புகொண்டு பேசுவதைக் கடமையாக வைத்திருப்பார்கள் என்று நினைக்காதீர்கள். மேலும் நீங்கள் தற்கொலைசெய்துகொள்ளலாம் என முடிவு செய்து வைத்திருப்பது அந்தக் குறிப்பிட்ட இரவுதானா என்று தெரிந்துகொள்ள அவர்கள் விரும்பமாட்டார்கள். "உங்களுக்குப் பேச்சுத்துணை தேவைப்படுகிறதா, வெளியே போய்வரும் மனநிலையில் இருக்கிறீர்களா" என்றெல்லாம் விசாரிப்பார்கள் என்றும் நினைத்துவிடாதீர்கள். அப்படி செய்யமாட்டார்கள். கொஞ்சம் பொறுங்கள். அவர்கள் எப்பொழுது தொலைபேசியில் அழைப்பார்கள் தெரியுமா? அவர்கள் அழைக்கும்போது நீங்கள் தனிமையில் இல்லாமல் துணையோடு அற்புதமாகப் பொழுதைக் கழித்துக்கொண்டிருப்பீர்கள். தற்கொலையைப் பொறுத்தவரை, அதைச் செய்யுமாறு உங்களை அவர்கள் தூண்டக்கூட வாய்ப்புள்ளது. அவர்கள் பார்வையில், அதற்கான காரணம் உங்களிடம்தான் உள்ளது. இறைவா! நண்பர்கள் நம்மை மிக உயர்ந்த இடத்தில் ஏற்றி வைக்காமல் இருந்தால் போதும். நம்மை நேசிப்பதைக் கடமையாகக் கொண்ட மற்றவர்களைப் பார்ப்போம். நான் குறிப்பிட வருவது உற்றார் உறவினரைத்தான். என்ன ஒரு சொற்பிரயோகம்!அது வேறு கதை. இப்படிப்பட்டவர்களிடம் சரியான சொற்கள் இருக்கும். அவை ஒருவித 'துப்பாக்கிக் குண்டுகள்'. அவர்களது தொலைபேசி அழைப்புகள் துப்பாக்கியால் சுடுவதைப்போல் இருக்கும். குறி பார்த்து அடித்து விடுவார்கள். சரியான துரோகிகள்!*

*என்ன கேட்டீர்கள்? எந்த இரவு? அதுவா? அதைப் பற்றிச் சொல்கிறேன். கொஞ்சம் பொறுமையாக இருங்கள். நான் இப்பொழுது பேசிக்கொண்டிருப்பது ஒரு வகையில், அந்த நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரைக் குறித்துதான். இங்கே கவனியுங்கள். ஒரு நபரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவருடைய நண்பரைச் சிறையில் அடைத்து விட்டார்களாம். தான் நேசித்த அந்த நண்பருக்கு மறுக்கப்பட்ட ஒரு வசதியைத் தானும் அனுபவிக்கக்கூடாது என்பதற்காக இரவு நேரத்தில் தரையில்*

படுத்து உறங்குவாராம். உங்களைக் கேட்கிறேன். நமக்காக யார் தரையில் படுத்துக்கொள்வார்கள் என நினைக்கிறீர்கள்? என்னாலேயே அப்படி முடியுமா? ஒன்றைத் தெரிந்துகொள்ளுங்கள். நான் அப்படி செய்ய விரும்புகிறேன்; செய்வேன். ஆம், எல்லாராலும் ஒருநாள் அப்படி செய்ய முடியும். அதுதான் மேன்மையை அடையும் வழி. ஆனால், அது எளிதானதல்ல. ஏனெனில் நட்பைப் பொறுத்தவரை ஞாபக மறதிகளுக்கு வாய்ப்புண்டு என்பதோடு ஓரளவு வலிமையும் அற்றது. தான் விரும்புவதை நட்பால் நிறைவேற்ற முடியாது. ஒருவேளை அந்த விருப்பம் போதுமான அளவு இருக்காதோ? நாம்தான் வாழ்க்கையை போதுமான அளவு நேசிக்கவில்லையோ எனத் தோன்றுகிறது. ஒன்றைக் கவனித்தீர்களா? மரணம் மட்டுமே நம்மிடம் உள்ள உணர்வுகளுக்கு உயிரூட்டுகிறது. அண்மையில் நம்மைவிட்டுப் பிரிந்த நண்பர்களை எந்த அளவிற்கு நேசிக்கிறோம் தெரியுமா? மண்ணுக்கடியில் புதைந்து இனிப் பேச முடியாத நிலையில் கிடக்கும் நம் ஆசான்களுக்கு எத்தனை முறை அஞ்சலி செலுத்துகிறோம்! அந்த நேரத்தில் அஞ்சலி செலுத்தும் உணர்வு நம்மிடையே இயற்கையாக எழுகிறது. இத்தகைய மரியாதையைத் தங்களது வாழ்நாள் முழுவதும் நம்மிடம் அவர்கள் எதிர்பார்த்திருக்கலாம். ஏன் நாம் இறந்தவர்களிடம் அதிகப்படியாக நியாயமாகவும் தாராளமாகவும் நடந்துகொள்கிறோம் தெரியுமா? காரணம், வேறு ஒன்றுமில்லை. அவர்களிடம் நமக்கு எவ்வித நிர்ப்பந்தமுமில்லை. அவர்கள் நமக்கு முழுச் சுதந்திரம் அளிக்கிறார்கள். சாவகாசமாக, மது விருந்து, விரும்பும் மங்கையுடன் சந்திப்பு – இவற்றுக்கிடையில் நம் விருப்பப்படி நேரம் ஒதுக்கி அவர்களுக்கு அஞ்சலி செலுத்திக்கொள்ளலாம். அதாவது, நமக்குக் கிடைக்கும் ஓய்வு நேரத்தில் அதைக் கவனித்துக்கொள்ளலாம். அவர்கள் ஏதாவது ஒன்றைச் செய்யுமாறு நம்மை நிர்ப்பந்திக்கிறார்கள் என்றால் அது அவர்களை நினைவுகூர வேண்டிய செயல் மட்டுமே. ஆனால் நமக்கோ ஞாபக சக்தி குறைவு. நமக்குப் பல நண்பர்கள் இருந்தாலும் அண்மையில் இறந்தவரிடம்தான் அதிகமான பற்று வைப்போம். அவர்தான் நமக்கு அதிகமான துக்கத்தைத் தருவார். நம் உணர்வுகள்மீதும் நம்மைக் குறித்தும் நமக்கே ஒரு வியப்பு உண்டாகும். நம் உணர்வுகளை மட்டுமின்றி நம்மையே நாம் நேசிக்கிறோம்.

இப்படித்தான் என்னிடம் ஒரு நண்பன் இருந்தான். அவனை முடிந்தவரை தவிர்த்துவிடுவது வழக்கம். காரணம், அவன் எனக்கு எரிச்சல் ஏற்படுத்தி வந்தான். மேலும் அவன் நியாயவாதி போல் நடந்துகொண்டான். ஆனால் அவன் மரணத்தை நெருங்கிக்கொண்டிருந்தபோது, ஒருநாள் கூடத் தவறாமல் அவனருகில் இருந்து நான் பார்த்துக்கொண்டேன். பதற்றம் வேண்டாம்! என்னைக் குறித்துத் திருப்தியடைந்தவனாய் என் கைகளைப் பற்றியபடியே இறந்துபோனான். அடுத்ததாக, என்னை அடைய முயன்று தோற்றுப்போனாள் ஒரு பெண். நல்லவேளையாக அவள் இளம்வயதிலேயே இறக்க நேர்ந்தது. உடனடியாக அவளுக்கு என் இதயத்தில் எவ்வளவு அருமையான இடம் கிடைத்துவிட்டது தெரியுமா! மேலும், அது தற்கொலை என்றாகிவிட்டால் கேட்கவும் வேண்டுமா, அப்பப்பா! என்னவொரு சுவையான உணர்ச்சிப் பிரவாகம்? தொலைபேசி ஒலிக்கிறது. மனதில் உணர்வுகள் பொங்கிவழிகின்றன. வலிந்து அமையும் சுருக்கமான வாக்கியங்கள். இருந்தாலும் உட்பொருள் நிறைந்தவை. அடக்கிவைத்திருக்கும் சோகம். ஆம், சொல்லப்போனால், அதில் கொஞ்சம் சுயவிமர்சனமும் கலந்திருந்தது.

நண்பரே, ஒன்றை மறந்துவிடாதீர்கள். மனிதன் என்பவன் அப்படித்தான்! அவனுக்கு இரண்டு முகங்கள். தன்னை நேசிக்காமல் பிறரை அவனால் நேசிக்க முடியாது. தற்செயலாக நீங்கள் வசிக்கும் கட்டடத்தில் மரணம் ஒன்று நிகழ்ந்துவிடுகிறது என்று வைத்துக்கொள்வோம். அப்பொழுது உங்கள் அருகில் வசிப்பவர்கள் நடந்துகொள்வதைக் கவனித்துப்பாருங்கள். வழக்கம் போல் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருக்கும் நேரத்தில், குடியிருப்புப் பொறுப்பாளர் இறந்துபோனால் என்ன ஆகிறது? உடனடியாகப் படுக்கையைவிட்டு எழுந்துகொள்கிறார்கள்; படபடக்கிறார்கள். விசாரித்துத் தகவல்களைத்

தெரிந்துகொள்கிறார்கள்; அனுதாபத்தைப் பகிர்ந்துகொள்கிறார்கள். புதிதாக ஒருவர் இறந்துவிட்டார். பிறகென்ன, காட்சி தொடங்கிவிடுகிறது. என்ன செய்வது? அவர்களுக்குச் சோகம் தேவைப்படுகிறது. அது அவர்களைக் கொஞ்சம் உயர்ந்த இடத்தில் ஏற்றி வைக்கக்கூடிய உணர்வு. அவர்களைப் பொறுத்தவரை, பசியைத் தூண்டக்கூடியதோர் ஊக்க பானம் போன்றது. அது சரி, உங்களிடம் குடியிருப்புப் பொறுப்பாளர் ஒருவரைப் பற்றிப் பேசுவது தற்செயலானதன்று. எனக்குத் தெரிந்த ஒருவன் இருந்தான். அவனுக்கும் குடியிருப்பைக் கவனிக்கும் வேலைதான். உண்மையில் நல்ல குணம் எதுவும் இல்லாதவன். தீமையின் மொத்த உருவம். பகைமையுணர்வு கொண்ட ஓர் அற்பப்பதர். பரமசாதுவால் கூடப் பொறுத்துக்கொள்ள இயலாத நடத்தையுடையவன். அவனிடம் நான் பேசுவதையும் நிறுத்தியிருந்தேன். ஆனால் என்ன செய்வது? அவன் உயிருடன் இருந்தவரை எனக்கு வழக்கமாகக் கிடைத்துவந்த நிம்மதியைக் கெடுத்துவந்தான். எனினும், அவன் இறந்தபோது அவனது சவ அடக்கத்துக்குச் சென்று வந்தேன். ஏன் தெரியுமா?

அவனது இறுதிச் சடங்குக்கு முந்தைய இரண்டு நாட்கள் சுவாரஸ்யம் நிறைந்தவையாகும். அந்தப் பொறுப்பாளனின் மனைவி உடல் நலமில்லாமல் இருந்தாள். தன் வீட்டில் இருந்த ஒற்றை அறையில் படுத்திருந்தாள். அவள் அருகில், மரத்தாலான மேடையின் மீது சவப்பெட்டி வைக்கப்பட்டிருந்தது. வழக்கமாக இறந்துபோன அவன்தான் தபால்களை எடுத்துக்கொண்டுவந்து தருவான். ஆனால் அன்றைய தினமோ, நம் தபாலை நாமே போய் எடுத்துக்கொண்டாக வேண்டிய நிலை. நாங்கள் உள்ளே நுழையும்போது “வணக்கம் மேடம்” என்றோம். அங்குள்ள சவப்பெட்டியில் இருந்த தன் கணவனைச் சுட்டிக்காட்டி, அவனைப் பற்றிப் புகழ்ச்சியாக அவள் பேசுவதைக் கேட்டுவிட்டு எங்கள் தபாலை எடுத்து வந்தோம். அது அவ்வளவு சௌகரியமாக இல்லை அல்லவா? இருந்தாலும், பினாயில் நெடியுடன் இருந்த அந்த அறைக்கு அங்கிருந்த அனைவரும் சென்று வந்தனர். அந்தக் குடியிருப்பில் வாடகைக்கு இருந்தவர்கள் தங்கள் வேலைக்காரர்களை அனுப்பாமல், எதிர்பாராது கிடைத்த வாய்ப்பைத் தாங்களே பயன்படுத்திக்கொண்டனர். வேலைக்காரர்களும் சந்தடியின்றி வந்துசென்றனர். சவஅடக்க நாளன்று, அந்த அறையின் வாசல் கதவை விடச் சவப்பெட்டி பெரியதாக இருந்தது. இதைக் கண்ட பொறுப்பாளரின் மனைவி, படுக்கையில் இருந்தபடி, “என் கணவர் எவ்வளவு உயரமாய் இருக்கிறார்!” என்று பெருமையாகவும் சோகமாகவும் ஆச்சரியப்பட்டாள். இறுதிச் சடங்குகளைக் கவனிப்பவர், “மேடம், கவலைப்படாதீர்கள். நிற்கவைத்து வெளியே கொண்டுபோய்விடலாம்” என்று ஆறுதலாகக் கூறினார். அவ்வாறே அந்தப் பெட்டியை நிற்கவைத்துத் தூக்கி வந்து பிறகு படுக்க வைத்தோம். நான் ஒருவன் மட்டுமே கல்லறைவரை சென்று சவப்பெட்டியின் மீது மலர்களைத் தூவினேன். கேளிக்கை விடுதியில் காவலாளியாக இருந்து ஓய்வுபெற்றவனும் என்னுடன் வந்திருந்தான். இறந்தவனுடன் இரவில் இவன் நாள்தோறும் பெர்நோ எனும் பானத்தை அருந்தி வந்தவன் என்று தெரிந்துகொண்டேன். அந்தச் சவப்பெட்டியின் ஆடம்பரம் என்னை வியப்பில் ஆழ்த்தியது. அதன்பின் இறந்தவனின் மனைவியைப் பார்க்கப் போனேன். சோகம் தோய்ந்த முகத்துடன் அவள் கூறும் நன்றியை ஏற்றுக்கொள்ளவே அங்குச் சென்றேன். இதற்கெல்லாம் என்ன காரணம் என்று சொல்லுங்கள் பார்க்கலாம். வேறு எதுவும் இல்லை. உணவுக்கும் முன் அருந்தும் உற்சாகபானம் போன்ற உணர்வுதான் அது.

எங்கள் வழக்குரைஞர்கள் கூட்டமைப்பில் நீண்ட காலமாக உறுப்பினராக இருந்தவரின் சவ அடக்கத்திலும் இதேபோல் நடந்து கொண்டேன். யாரும் கண்டுகொள்ளாத அந்த நீதிமன்ற ஊழியருடன் நான் எப்பொழுதும் கைக்குலுக்குவதுண்டு. தவிர, நான் வேலை செய்த இடத்தில், எல்லாருடைய கைகளையும் ஒருமுறைக்கு இருமுறை கூடக் குலுக்கும் வழக்கம் என்னிடம் இருந்தது. நட்புறவுடன் கூடிய இந்த எளிமை என் வளர்ச்சிக்குத் தேவையான புகழை அதிகச் சிரமமின்றிப் பெற உதவியது. அந்த

ஊழியரின் சவ அடக்கத்தில் வழக்குரைஞர் கூட்டமைப்பின் தலைவர் கலந்துகொள்ளவில்லை. ஆனால் நானோ அங்கு இருந்தேன். நான் பயணம் ஒன்றை மேற்கொள்ளவிருந்த முந்தைய நாள் அப்படி சென்றேன் என்பதால் அது எல்லாருடைய கவனத்தையும் ஈர்த்தது. சரியாகச் சொன்னால், நான் அங்கு இருப்பது எல்லாருடைய கண்ணிலும் படும்; அத்தகைய நடவடிக்கை எனக்குச் சாதகமாகப் பேசப்படும் என்பதையெல்லாம் நான் அறிந்திருந்தேன். இப்பொழுது புரிகிறதா? அன்று கொட்டிய பனிக்கட்டிகள்கூட நான் அங்குச் செல்லத் தடையாக இருந்திருக்கமுடியாது.

என்ன சொன்னீர்கள்? அந்த விஷயத்துக்கு வருகிறேன். அவசரப்படாதீர்கள். மேலும் நான் இங்குதானே இருக்கிறேன். ஆனால் அதற்கும் முன், என் குடியிருப்புப் பொறுப்பாளரின் மனைவியைப் பற்றிச் சொல்லியாக வேண்டும். தன் கணவனுக்காகச் சிலுவை, கனமான ஓக்மரப்பெட்டி, வெள்ளிக் கைப்பிடிகள் என அவ்வளவு பணம் செலவழித்து உணர்ச்சிகளைக் கொட்டித் தீர்த்த அவள், ஒரு மாதம் கழிந்ததும் நல்ல குரல்வளம் கொண்ட பகட்டான பேர்வழி ஒருவனுடன் சேர்ந்து வாழத் தொடங்கினாள். அவன் அவளை அடிக்கடி அடிப்பான். கூக்குரல்கள் வெளியிலும் கேட்கும். சிறிது நேரத்திலேயே ஜன்னலைத் திறந்துவைத்துத் தனக்குப் பிடித்தமான, “பெண்களே எவ்வளவு அழகு நீங்கள்!” என்ற பாடலைப் பாடுவான். அருகில் வசிப்பவர்கள், “இருந்தாலும் இப்படியா?” என்று பேசிக்கொள்வார்கள். நீங்களே சொல்லுங்கள். “இருந்தாலும் இப்படியா” என்பதன் மூலம் இவர்கள் என்ன சொல்ல வருகிறார்கள்? அந்த ஜோடி நடந்துகொள்வதை வெளியிலிருந்து பார்க்கும்போது அவர்கள் வேறுவிதமாகத் தெரிந்தனர். எப்படியும் அவர்களிடையே நேசம் இருந்ததா இல்லையா என்று தெளிவாகத் தெரியவில்லை. குரலும் கைகளும் ஓய்ந்துபோகவே ஒருநாள் அந்தப் பகட்டுப் பேர்வழி ஓடிப்போய்விட்டான். பிறகு, அந்த விசுவாசமான பெண்மணி மீண்டும் தன் இறந்துபோன பழைய கணவனின் புகழைப் பாட ஆரம்பித்துவிட்டாள். இது மட்டுமா? எனக்குத் தெரிந்த வேறு சிலர் இருக்கிறார்கள். அவர்கள் விஷயத்தில், வெளித்தோற்றம் அவர்களுக்குச் சாதகமாக இருந்தது. ஆனால் அவர்கள் தொடர்ந்து நேசிப்பவர்களோ நேர்மையானவர்களோ கிடையாது. எனக்குத் தெரிந்த வேறு ஒருவன் இருந்தான். அலட்சியப் போக்கைக் கடைப்பிடிக்கும் பெண் ஒருத்திக்காகத் தன் இருபது வருட வாழ்க்கையையே அர்ப்பணித்தவன். அவளுக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்திருந்தான். நண்பர்கள், தான் பார்க்கும் வேலை, இவற்றோடு தன் வாழ்வின் கண்ணியத்தைக் கூட அவன் தியாகம் செய்திருந்தான். இறுதியில், ஒருநாள் இரவு அவளை ஒருபோதும் தான் நேசித்ததில்லை என்று கண்டுபிடித்தான். பெரும்பாலான மனிதர்களைப் போல் அவனுக்கும் வாழ்க்கையில் சலிப்பு ஏற்பட்டிருக்கவேண்டும்; அவ்வளவு தான். எனவே அதிலிருந்து விடுபட முழுவதும் சிக்கல்களும் சம்பவங்களும் நிறைந்த வாழ்க்கை ஒன்றை அவன் உருவாக்கிக்கொண்டான் என்று தெரிகிறது. வாழ்க்கையில் எதிர்பாராதது ஏதோ ஒன்று நடந்தாக வேண்டும். அதுதான் பெரும்பாலான மனித உறவுகளுக்கு அளிக்கப்படும் விளக்கமாகும். ஆம், ஏதாவது எதிர்பாராதது நடந்தாக வேண்டும். அது பற்றற்ற அடிமைத்தனமாக இருக்கலாம். போராக அல்லது மரணமாகக் கூட இருக்கலாம். எனவே, எதிர்பாராமல் நிகழும் சவ அடக்கங்கள் வாழ்க!

எனக்கோ அந்தப் பிரச்சினை கூடக் கிடையாது. வாழ்க்கையில் எனக்குச் சலிப்பு ஏற்படவில்லை. ஏனெனில் எனக்கு ராஜவாழ்க்கை அமைந்திருந்தது. உங்களிடம் ஏற்கெனவே குறிப்பிட்ட அந்த மாலைப்பொழுதில், என்னிடம் கொஞ்சம் கூடச் சலிப்பு இல்லை. ஏதாவதுஎதிர்பாராதது நடந்தாக வேண்டும் என்று நான் உண்மையிலேயே விரும்பவில்லை. இருந்தாலும், இதைக் கவனியுங்கள். அது இலையுதிர்காலத்து அழகான மாலைப் பொழுது. நகரத்தில் மட்டும் கதகதப்பு மீதமிருக்க சேன் நதி அமைந்துள்ள அப்பகுதியில் ஏற்கெனவே ஈரப்பதம் வந்திருந்தது. இரவு நெருங்கிக்கொண்டிருந்தது. மேற்கில் வானம் தெளிவாக இருந்தாலும் மேகங்கள் திரண்டுகொண்டிருந்தன. சாலை விளக்குகள்

மங்கியபடி எரிந்துகொண்டிருந்தன. இடது கரையில் உள்ள சாலைகளைக் கடந்து ‘போந்தெஸார்’ என்னும் பாலத்தை நோக்கி நடந்துகொண்டிருந்தேன். மூடியிருந்த பழைய புத்தகக்கடைகளுக்கிடையே ஒளிரும் நதியைப் பார்க்க முடிந்தது. சாலைகளில் மக்கள் கூட்டம் அதிகம் இல்லை. பாரீஸ் நகரத்தில் இரவு உணவு அதற்குள் பரிமாறப்பட்டுவிட்டது. கோடையை அப்போதும் நினைவூட்டிக் கொண்டிருந்த தூசிபடிந்த மஞ்சள் நிறப் பூக்களின் மேல் நடந்துகொண்டிருந்தேன். சாலைவிளக்குக் கம்பங்கள் ஒன்றிலிருந்து அடுத்ததை நோக்கி நான் நடந்தபோது, வானத்தில் கொஞ்சம் கொஞ்சமாக நட்சத்திரக்கூட்டம் தோன்றி மறைந்தது. மீண்டும் திரும்பியிருந்த அமைதி, அந்த இரவின் மென்மை, சந்தடியில்லா பாரீஸ் என எல்லாவற்றையும் சுவைத்துக்கொண்டிருந்தேன்; மகிழ்ச்சியாக இருந்தது. அந்த நாள் இனிமையாகக் கழிந்தது. ஏனெனில், பார்வையற்ற ஒருவனுக்கு உதவிசெய்ய முடிந்தது. நான் எதிர்பார்த்தபடி ஒருவனுக்குத் தண்டனைக் குறைப்பும் கிடைத்தது. என் வாடிக்கையாளருடன் நட்பாகக் கைக்குலுக்கினேன். தாராளமான உதவிகள் சிலவற்றைச் செய்தேன். பிறகு, பிற்பகலில் சில நண்பர்களுடன் உரையாடினேன். அப்பொழுது, ஆளும் வர்க்கத்தினரின் கல்மனதைப் பற்றியும் நம் அறிவுஜீவிகளின் வெளிவேடத்தைப் பற்றியும் அற்புதமாகப் பேசினேன்.

இரவு சாய்ந்துவிட்டதால் நதி சரியாகத் தெரியவில்லை. அதைப் பார்க்கலாம் என்று வெறிச்சோடிக் கிடந்த ‘போந்தெஸார்’ என்னும் பாலத்தின் மீது ஏறினேன். வேர்கலான் பூங்காவுக்கு எதிரில் எனக்குக் கீழ் அந்தப் பகுதிமுழுவதும் தெரிந்தது. என்னுள் பெரிய சக்தி ஒன்று எழுந்தது. எப்படிச் சொல்வது என்று தெரியவில்லை, அதாவது, அனைத்தையும் செய்துமுடித்துவிட்ட திருப்தி என் இதயத்தைக் குதூகலிக்கச் செய்வதை உணர்ந்தேன். நான் கம்பீரமாக நிமிர்ந்து நின்று ஒரு சிகரெட் பற்ற வைத்தேன். அது மனம் திருப்தியடைந்ததற்காகப் புகைக்கும் சிகரெட். அதே நேரத்தில், எனக்குப் பின்னாலிருந்து சிரிப்பொலி ஒன்று கேட்டது. துணுக்குற்றுச் சட்டெனத் திரும்பிப்பார்த்தேன். அங்கு யாரும் இல்லை. சில அடிகள் எடுத்து வைத்துப் பக்கச்சுவர்வரை போய்ப் பார்த்தேன். அங்கே ஓடமோ படகோ எதுவும் இல்லை. நான் திரும்பிப் பழைய இடத்தை நோக்கி நடந்தேன். மீண்டும் என் பின்புறம் சிரிப்புச் சத்தம் கேட்டது. ஆனால் அந்தச் சிரிப்பொலி வெகுதூரத்தில் ஏதோ ஆற்றில் இறங்குவது போல் கேட்டது. நான் அந்த இடத்திலேயே அசைவற்று நின்றேன். சிரிப்பொலி கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துகொண்டே வந்தது. அது என் பின்புறத்திலிருந்து வந்ததை இன்னமும் தெளிவாகக் கேட்க முடிந்தது. தண்ணீரிலிருந்துதான் அந்தச் சத்தம் வந்தது என்பது உறுதியானது. அதே நேரத்தில் என் இதயம் வேகமாகத் துடிப்பதை உணர்ந்தேன். பொறுங்கள், ஒரு விஷயத்தைத் தெளிவாக்கிவிடுகிறேன். அந்தச் சிரிப்பில் புதிரொன்றும் இல்லை. அது ஒரு இயல்பான நல்ல சிரிப்புதான். ஏறக்குறைய நட்பு பாராட்டும் சிரிப்பு. அது நிலைமையைச் சரிசெய்வதாக இருந்தது. அதன் பிறகு எனக்கு எதுவும் கேட்கவில்லை. நான் மீண்டும் சாலைக்கு வந்து சேர்ந்தேன். தொஃபீன் தெருவுக்குச் சென்று தேவையே இல்லாமல் சில சிகரெட்டுகளை வாங்கினேன். எனக்குத் தலை சுற்றியது. மூச்சு விடவும் சிரமமாக இருந்தது. அன்று இரவு நண்பன் ஒருவனைத் தொலைபேசியில் அழைத்தேன். அவன் வீட்டில் இல்லை. தனியாக வெளியே செல்லத் தயங்கினேன். அந்த நேரத்தில் திடீரென என் ஜன்னலுக்கு வெளியே யாரோ சிரிக்கும் சத்தம் கேட்டது. ஜன்னல்களைத் திறந்தேன். அங்கிருந்த நடைபாதையில் சில இளைஞர்கள் அரட்டையடித்துவிட்டு அப்பொழுதுதான் உற்சாகமாகக் கலைந்து சென்றுகொண்டிருந்தனர். சலிப்புடன் தோள்களைக் குலுக்கிவிட்டு ஜன்னல்களை மூடினேன். மேலும், நான் கவனிக்க வேண்டிய வழக்கு ஒன்று பாக்கி இருந்தது. ஒரு கிளாஸ் தண்ணீர் குடிக்கலாம் என்று குளியலறைக்குள் நுழைந்தேன். கண்ணாடியில் என் பிம்பம் சிரித்தபடித் தெரிந்தது. ஆனால் எனக்கென்னமோ என் சிரிப்பு இரட்டிப்பாகத் தோன்றியது.

என்ன கேட்டீர்கள்? மன்னிக்க வேண்டும். வேறு எதையோ நினைத்துக் கொண்டிருந்தேன். நான்

உங்களை நிச்சயமாக நாளைக்குச் சந்திக்கிறேன். ஆமாம், நாளைக்குத்தான். இல்லை, முடியாது. என்னால் இதற்கும் மேல் இங்கு இருக்க முடியாது. மேலும், அதோ ஓர் உருவம் தெரிகிறதா? கரடி மாதிரி இருக்கிறானே அவன்தான், தன் வழக்கு விஷயமாகப் பேச வேண்டும் என்று என்னை அழைத்திருக்கிறான். நிச்சயமாக அவன் ஒரு நேர்மையான ஆசாமிதான். காவல்துறையினர் வெறுமனே அவனுக்குத் தொந்தரவு தர வேண்டும் என்ற எண்ணத்துடன் கடுமையாக அலைக்கழித்து வருகிறார்கள். அவனைப் பார்த்தால் ஒரு கொலைகாரன் என்று சொல்வீர்களா? அகத்தின் அழகு முகத்தில் தெரியும், மறந்துவிடாதீர்கள். அதே போல் அவன் கொள்ளையடிப்பதிலும் ஈடுபடுகிறான். மறைந்து வாழும் இந்த மனிதன் கலைப்பொருட்களைக் கடத்துவதிலும் வல்லவன். என்ன ஆச்சரியமாக இருக்கிறதா? ஹாலந்து நாட்டில் எல்லாருமே ஓவியங்களிலும் துலீப் மலர்களிலும் நாட்டமுடையவர்கள். எளிமையான தோற்றத்தில் இருக்கும் இந்த மனிதன் பிரபலமான ஓவியம் ஒன்றைத் திருடியவன். அது எந்த ஓவியம்? அதைப் பற்றி நான் உங்களுக்குச் சொல்வதில் தவறில்லை. என் திறமை குறித்து நீங்கள் வியப்படைய வேண்டாம். நான் தண்டித்துக் கொள்ளும் நீதிபதியாக இருந்தாலும் இந்த இடத்தில் எனக்கென்று வேறு ஒரு பொழுதுபோக்கும் இருக்கிறது. அதாவது, இங்குள்ள நல்ல மனிதர்களுக்குச் சட்ட ஆலோசனை வழங்கி வருகிறேன். இந்த நாட்டின் சட்டங்களைப் படித்து முடித்த நான், பட்டங்கள் எதுவும் தேவைப்படாத இந்தப் பகுதியில் எனக்கென்று வாடிக்கையாளர்களைப் பிடித்துவிட்டேன். அது அவ்வளவு சுலபம் இல்லை என்றாலும் நான் நம்பிக்கையை ஏற்படுத்தி விடுவேன். என்ன சொல்கிறீர்கள்? நான் சொல்வது சரிதானே? என் சிரிப்பில் அழகுடன் நேர்மையும் இருக்கும். நான் கைக்குலுக்கும்போது முழுப்பலமும் அதில் தெரியும். இவையெல்லாம்தான் என் துருப்புச்சீட்டுகள். மேலும் சில கஷ்டமான வழக்குகளை முதலில் விருப்பத்தின் பேரிலும் பிறகு அந்த வழக்கின் மீதுள்ள முழுஈடுபாட்டின் காரணமாகவும் தீர்த்து வைத்துள்ளேன். ஒன்றைக் கவனித்தீர்களா? எப்பொழுதும் பாலியல் தரகர்களும் திருடர்களும் பெரும்பாலும் தண்டிக்கப்படுகின்றனர். கண்ணியமானவர்களோ தங்களைத் தொடர்ந்து நிரபராதிகள் என்று நினைத்துக்கொள்கின்றனர். அந்தக் கருத்தைப் பற்றித்தான் இங்குச் சொல்ல வருகிறேன். குறிப்பாக, அவர்களிடம் தாங்கள் நிரபராதிகள் என்று நினைத்துக்கொள்ளும் அந்த எண்ணத்தை நாம் தவிர்த்தாக வேண்டும். இல்லையென்றால் அது நகைப்புக்குரியதாகிவிடும்.



நண்பரே, என் கதையைக் கேட்பதில் இவ்வளவு ஆர்வம் காட்டுவதற்காக நான் உங்களுக்கு நன்றி சொல்லியாக வேண்டும். மேலும், என் கதையில் அப்படி எதுவும் விசித்திரமாக இல்லை. நீங்கள் தொடர்ந்து ஆர்வமாகக் கேட்பதால், உங்களுக்குச் சொல்கிறேன். அந்தச் சிரிப்பு சிறிது காலம் நினைவில் இருந்தது. பிறகு அது மறந்து போனது. அவ்வப்பொழுது எனக்குள்ளேயே அந்தச் சிரிப்பு ஒலிப்பதைப் போல் உணர்வேன். ஆனால் பெரும்பாலான நேரங்களில் எந்தச் சிரமமுமில்லாமல் நான் வேறு எதையாவது சிந்தித்துக் கொண்டிருப்பேன்.

இருந்தாலும், இங்கே ஓர் உண்மையை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். அதன் பிறகு பாரீஸ் நகர நடைபாதைகளில் என் காலடி படவே இல்லை. அந்தப் பக்கமாக காரிலோ பேருந்திலோ பயணம் செய்ய நேரும்போது, ஒருவிதமான நிசப்தம் என்னுள் ஏற்படுவதை உணர்ந்தேன். நான் அதற்காகக் காத்திருந்தேன் என்று நினைக்கிறேன். இவ்வாறே நான் சேன் நதியைக் கடந்துவந்தேன். எனக்கு எதுவும் நேரவில்லை. நான் மீண்டும் படபடப்பின்றிச் சுவாசித்தேன். ஆனால் அப்போது, எனக்கு உடலில் சில அசௌகரியங்கள் இருந்தன. குறிப்பிடும்படியாக ஒன்றுமில்லை. வேண்டுமானால் ஒருவிதமான சோர்வு என்று வைத்துக் கொள்ளுங்கள். இயல்பான நிலைக்குத் திரும்பச் சிரமப்பட்டுக் கொண்டிருந்தேன். மருத்துவர்களைப் போய்ப் பார்த்தேன். அவர்கள் சில ஊக்கமருந்துகள் தந்தனர். அவற்றால் புத்துணர்வு பெற்றேன். பிறகு மீண்டும் சோர்வடைந்தேன். வாழ்க்கை எனக்குச் சுமூகமாக அமையவில்லை. உடல் சோர்வாக இருக்கும்போது உள்ளம் ஏக்கத்தில் இருக்கிறது. என் வாழ்க்கையை எப்படி வாழ்வது என்பதை நான் பிறவியிலேயே கற்றிருந்தேன். அதில் ஒரு பகுதியை மறந்துவிட்டது போல் தோன்றியது. ஆம், அந்தக் குறிப்பிட்ட நேரத்தில்தான் எல்லாமே தொடங்கியது என்று நினைக்கிறேன்.

ஆனால், இன்றைய மாலைப்பொழுதிலும் நான் முழு ஆரோக்கியத்துடன் இல்லை. வாக்கியங்களை அமைக்கக்கூடக் கஷ்டப்படுகிறேன். பேச்சும்கூட அவ்வளவு நன்றாக இல்லை. என் பேச்சில் வழக்கமான உறுதியில்லை. ஒருவேளை இதற்குப் பருவநிலையும் காரணமாக இருக்கலாம். சுவாசிக்கச் சிரமமாக இருக்கிறது. காற்றின் கனம் மார்பில் இறங்குகிறது. நாம் கொஞ்சம் வெளியே போய் நகரத்தில் சிறிது தூரம் நடந்துவிட்டு வரலாமா? உங்களுக்கு இடையூறு எதுவும் இல்லையே? நன்றி.

இந்தக் கால்வாய்களைப் பார்த்தீர்களா? அந்தி சாயும் நேரத்தில் எவ்வளவு அழகாக இருக்கின்றன? தேங்கி நிற்கும் நீரின் நாற்றம், கால்வாய்களில் அழுகிப்போகும் சருகுகளின் நெடி, மலர்கள் நிறைந்த ஓடத்திலிருந்து எழும் வாடை – இவையெல்லாம் எனக்குப் பிடித்தவையாகும். இல்லை இல்லை, என் ரசனையில் ஆரோக்கியமற்ற தன்மை என்று எதுவும் இல்லை. என்னை நம்புங்கள். சொல்லப்போனால், இவற்றையெல்லாம் நான் மனதார விரும்புகிறேன். உண்மையில் வலிந்து தான் இந்தக் கால்வாய்களை நான் ரசிக்கிறேன். உலகிலேயே எனக்குப் பிடித்த இடம் எது தெரியுமா? சிசிலி மலைப்பகுதி. குறிப்பாக, சூரிய ஒளியில் உயரத்தில் நின்று எட்னா எரிமலையின் உச்சியிலிருந்து தெரியும் காட்சிகளை ரசிக்கப் பிடிக்கும். ஒரே நிபந்தனை. தீவும் கடலும் நன்றாகத் தெரியவேண்டும். ஜாவா தீவும் பிடித்த இடம் என்றாலும் கடற்காற்று வீசும் நேரம் மட்டுமே அங்கு இருக்கத் தோன்றும். உண்மையில் என் இளம்வயதில் அங்குச் சென்றிருக்கிறேன். பொதுவாக, எனக்கு எல்லாத் தீவுகளையும் பிடிக்கும். ஏனெனில் உயரமான இடத்திலிருந்து கொண்டு அவற்றை எளிதாக நம் பார்வைக்குள் கொண்டுவந்துவிடலாம்.

அங்கே இருப்பது ஓர் அழகான வீடு, இல்லையா? அங்கே மேலே தெரியும் இரண்டு தலைகள் நீக்ரோ அடிமைகளைக் குறிப்பவையாகும். அது கடை ஒன்றின் விளம்பரப்பலகை. ஒரு காலத்தில் அந்த வீடு

அடிமைகளை விற்றவருக்குச் சொந்தமானது என்று புரிகிறது. அந்தக் காலகட்டத்தில் அவர்களிடம் ஒளிவு மறைவு என்று எதுவும் கிடையாது. பணபலம் மிகுந்திருந்த அவர்கள், "இங்கே பார்! நான் வசதிபடைத்தவன், அடிமைகளை வைத்துத் தொழில் செய்கிறேன், கருப்பர்களை விற்பனை செய்கிறேன்" என்று வெளிப்படையாக அறிவித்தனர். இன்று யாராவது அத்தொழிலைச் செய்வதாகப் பகிரங்கமாக அறிவித்துக்கொள்வார்களா? சிந்தித்துப் பாருங்கள். அமளியே உண்டாகிவிடும்! பாரீசில் வசிக்கும் என் தோழர்களின் குரல் இங்குவரை கேட்கிறது. இந்த விஷயத்தில் அவர்கள் பிடிவாதமாக இருப்பதால் இதற்காக இரண்டு அல்லது மூன்று ஊர்வலங்களை நடத்தவும் தயங்கமாட்டார்கள். இன்னும் அதிகமாகக்கூட நடத்தலாம். யோசித்துப்பார்த்தால், நானும் என் கையெழுத்தை அவர்கள் நடத்தும் இயக்கத்தில் இணைக்க வாய்ப்புள்ளது. அடிமைத்தனமா? கூடவே கூடாது. நாம் அதற்கு எதிரானவர்கள். அதே அடிமைத்தனம் நம் வீட்டிலோ அல்லது நம் தொழிற்சாலைகளிலோ ஏற்படுத்திக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் நேர்ந்துவிட்டால், அது இயல்பானது. ஆனால் அத்தகைய அடிமைத்தனத்தைக் குறித்துப் பெருமை பேசுவதைத்தான் எவ்விதத்திலும் ஏற்க முடியாது.

யாரையும் அடக்கியாளாமலும் அடங்கிப் போகாமலும் நம்மால் வாழ முடியாது என்று எனக்கு நன்றாகத் தெரியும். ஒவ்வொரு மனிதனுக்கும் எப்படித் தூய்மையான காற்று தேவைப்படுகிறதோ அப்படியே சில அடிமைகளும் தேவைப்படுகின்றனர். அதிகாரம் செய்வது சுவாசிப்பதைப் போன்றது. இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்கிறீர்களா? மிகவும் தாழ்ந்த நிலையில் உள்ளவனும் எப்படியோ சுவாசித்துவிடுகிறான். சமுதாயத்தின் அடித்தட்டு மனிதனுக்குக் கூட மனைவியும் குழந்தையும் இருக்கிறார்கள். ஒருவேளை திருமணம் ஆகாமல் இருந்தால் அவனிடம் நாயாவது ஒன்று இருக்கும். மொத்தத்தில், கோபப்பட நமக்கு யாராவது ஒருவர் தேவைப்படுகிறார். முக்கியமாக அந்த நபர் எதிர்த்துப் பேசாமல் இருக்கவேண்டும். "அப்பாவிடம் ஒவ்வொன்றுக்கும் எதிர்த்துப் பேசிக் கொண்டிருக்கக் கூடாது". இந்தப் பல்லவி உங்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். ஒருவகையில் பார்த்தால், இது வினோதமானது. நாம் நேசிக்கும் ஒருவரிடம் எதிர்த்துப் பேசாமல் வேறு யாரிடம் அப்படி பேச முடியும்? வேறொரு கோணத்தில் பார்த்தால், இக்கருத்து ஏற்புடையதுதான். யாராவது ஒருவரின் பேச்சுதான் ஓங்கியிருக்க வேண்டும். இல்லையென்றால், ஒவ்வொன்றிலும் எதிர்வாதம் இருந்துகொண்டே இருக்கும். அதற்கு முடிவே இருக்காது. இதற்கு நேர் மாறாக, அதிகாரமானது என்பது எல்லாவற்றையும் முடித்துவைத்துவிடும். இதைப் புரிந்து கொள்ள நீண்ட காலம் தேவைப்பட்டது. ஆனால் ஒருவழியாகப் புரிந்து கொண்டோம். நம் பண்டைய ஐரோப்பாவை எடுத்துக்கொள்ளுங்கள். இறுதியாக அது சரியான பாதையில் தன் தத்துவ விசாரணையை நடத்துவதை நீங்கள் கவனித்திருப்பீர்கள். அப்பாவித்தனமாகக் கழிந்த அந்தக் காலம் போல், "என் கருத்து இதுதான். உங்களுக்கு இதில் ஏதாவது ஆட்சேபணை இருந்தால் சொல்லுங்கள்" என்று கேட்டுக் கொண்டிருப்பதில்லை. நாம் இப்பொழுது தெளிவடைந்து விட்டோம். உரையாடலுக்குப் பதிலாக அறிக்கை வருகிறது. அதில், "இதுதான் நடைமுறை. நீங்கள் வேண்டுமானாலும் அதைப்பற்றி விவாதித்துக் கொள்ளலாம். எங்களுக்குக் கவலையில்லை. ஆனால், இன்னும் சில ஆண்டுகளுக்குள் காவல்துறை வரும். நான் சொன்னதுதான் சரி என்பதை அது உங்களுக்குப் புரியவைக்கும்" என்று சொல்கிறோம்.

அட, என்ன ஒரு தெளிவான உலகம்! இங்கு இப்பொழுது எல்லாமே தெளிவாக இருக்கிறது. நாம் யார் என்று நமக்குப் புரிகிறது. நம்மால் என்ன முடியும் என்றும் நமக்குத் தெரிகிறது. என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். உதாரணத்தை மாற்றத்தான் இப்படி சொல்கிறேன், பேசும் விஷயத்தை மாற்ற அல்ல. என்னிடம் வேலை செய்பவர் புன்னகையோடு எனக்குப் பணிவிடை செய்வதையே நான் விரும்புவேன். என் வேலைக்காரி சோகமாக முகத்தை வைத்திருந்தால் அன்றையப் பொழுது எனக்கு வீணாகிவிடும்.

சந்தோஷமாய் இல்லாமல் இருக்க அவளுக்கு உரிமையுண்டு என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் எனக்குச் சேவையாற்றும்போது அழுது வடியாமல் மலர்ந்த முகத்துடன் வேலை செய்தால் நல்லது என நினைத்துக்கொள்வேன். உண்மையில், அது எனக்குத்தான் நல்லது. எனினும் என் வாதத்தை அபாரமானதாகக் கருதமுடியாவிட்டாலும் முற்றிலுமாக முட்டாள்தனமானது என்றும் சொல்லிவிட முடியாது. அதே போல், சீன உணவகங்களில் சாப்பிட நான் எப்பொழுதும் தயங்குவேன். ஏன் தெரியுமா? ஆசியாவைச் சேர்ந்தவர்கள் வெள்ளைக்காரர்களிடம் தங்கள் முகத்தில் ஒருவித ஏளனத்தோடு மௌனம் சாதிப்பார்கள். மேலும் பரிமாறும் போது அவர்கள் முகத்தில் அந்த ஏளனம் இயல்பாகத் தெரியும். இப்படி முகத்தை வைத்திருந்தால் எவ்வாறு வறுத்த கோழியைச் சுவைக்கமுடியும்? குறிப்பாக, அவர்களைப் பார்த்தபின் நாம் செய்வதெல்லாம் சரி என்று எப்படி நினைக்கமுடியும்?

இது நமக்குள் இருக்கட்டும். அடிமைத்தனம் – அதுவும் புன்னகையோடு கலந்துவரும் அடிமைத்தனம் – தவிர்க்க இயலாத ஒன்று. ஆனால் அதனை நாம் அங்கீகரிக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அடிமைகளை வைத்துக்கொள்ளாமல் வாழ இயலாதவர், தன்னிடம் உள்ளவர்களைச் 'சுதந்திர மனிதர்கள்' என்றாவது அழைப்பது நல்லது இல்லையா? கொள்கைக்காகவும் அவர்களைச் சோகத்தில் தள்ளாமல் இருப்பதற்காகவும் இவ்வாறு அழைக்கலாம். இந்த ஆறுதலை அவர்களுக்கு அளிக்க நாம் கடமைப் பட்டுள்ளோம் இல்லையா? அப்படிச் செய்யும் போது, அவர்கள் தொடர்ந்து முகமலர்ச்சியுடன் நடந்துகொள்வார்கள். நம் மனச்சாட்சிக்கும் எந்தப் பாதிப்பும் நேராது. இல்லையென்றால், நம் இயல்பை மீண்டும் ஒருமுறை சிந்தித்துப்பார்க்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுவோம். நாம் சோகத்தின் விளிம்புக்குச் சென்றுவிடுவோம். சாதாரணமானவர்களாகக்கூட மாறிவிடுவோம். எது வேண்டுமானாலும் நடக்கலாம். மேலும் அவர்களுக்குப் 'பணி அடையாளக்குறி' கிடையாது. ஒவ்வொருவரும் தங்களது பணி அடையாளக் குறியைப் பற்றிப் பேச ஆரம்பித்துவிட்டால் அது நகைப்புக்குரியதாகிவிடும். அதாவது முகவரி அட்டைகளைக் கொஞ்சம் கற்பனைசெய்துபாருங்கள். துய்போன் என்ற பெயருக்குப் பக்கத்தில் 'பதற்றமான சிந்தனையாளர்' என்று இருக்கலாம். 'கிருத்துவப் பண்ணையார்' அல்லது 'துரோகத்தில் திளைக்கும் மனித நேயர்' என்று இருக்கலாம். இப்படி நிறையப் பேர் இருக்க வாய்ப்புள்ளது. அப்படி இருந்தால் அது நரகமாகிவிடும். ஆம், நரகம் இப்படித்தான் இருக்க வேண்டும். விளம்பரப்பலகைகள் நிறைந்த தெருக்களில் யாரும் தன்னைப் பற்றிய விளக்கங்களைத் தர முடியாத நிலையில் இருப்பர். எல்லாருக்கும் நிரந்தரமாக முத்திரை குத்தப்பட்டுவிடும். மறுபரிசீலனைக்கு இடமிருக்காது.

இப்போது உங்களையே எடுத்துக் கொள்வோம். உங்களைக் குறிக்கும் அடையாளக்குறி எதுவாக இருக்கும் என்று கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். நீங்கள் எதுவும் சொல்லாமல் இருக்கிறீர்கள். போகட்டும். பதிலை எனக்குப் பொறுமையாகச் சொல்லுங்கள். ஆனால், என் அடையாளக்குறி எனக்குத் தெரியும். 'இரட்டை முகம் கொண்டவன்', அதற்கும் மேல், 'நம்பாதீர்கள்' என்னும் விளம்பர முழக்கம். என் முகவரி அட்டையில், "ழான் பத்தீஸ்த் கிலெமான்ஸ், நாடக நடிகர்" என்று இருக்கும். இதைக் கேளுங்கள். நான் உங்களிடம் குறிப்பிட்ட அந்த இரவுக்குப் பிறகு விரைவிலேயே நான் ஒன்றைக் கண்டுபிடித்தேன். பார்வையற்ற ஒருவர் சாலையைக் கடக்க உதவிசெய்து அடுத்த நடைபாதையில் அவரை விட்டுவிட்டு விடைபெற்ற நான் தொப்பியைக் கழற்றி அவருக்கு வணக்கம் செலுத்தினேன். இப்படி தொப்பியைக் கழற்றியது அவருக்காக அல்ல. காரணம், அவரால் அதைப் பார்க்க முடியாது. அப்படி என்றால் யாருக்காக அதைச் செய்தேன்? பொதுமக்களுக்காக. நடித்து முடிந்ததும் பாராட்டுகளை ஏற்கும் முறை. அது சரியாகத்தானே இருக்கும்? அதே காலகட்டத்தில், வேறு ஒருநாள், காரில் வந்த ஒருவருக்கு நான் உதவி செய்தேன். அதற்காக அவர் எனக்கு நன்றி தெரிவித்தபோது, வேறு யாராக இருந்தாலும் இதைச் செய்திருக்க முடியாது என்று அவரிடம் கூறினேன். நான்சொல்லவந்தது, 'வேறு யாராக இருந்தாலும்

இதைச் செய்திருப்பார்கள்' என்பதுதான். ஆனால் அப்படி துரதிர்ஷ்டவசமாக வாய்தவறிச் சொன்னது என் மனதில் ஆழமாய்ப் பதிந்துவிட்டது. தன்னடக்கத்தில் நிச்சயமாக யாரும் என்னை வெல்ல முடியாது.

எப்பொழுதும் நான் தற்பெருமையைப் பெரிதும் விரும்பினேன் என்ற உண்மையினைத் தாழ்மையுடன் ஏற்றுக்கொள்கிறேன். நான், நான், நான், நான். . . என் வாழ்க்கை முழுவதும் இதே பல்லவிதான். நான் உச்சரிக்கும் ஒவ்வொரு விஷயத்திலும் அது எதிரொலிக்கும். தற்பெருமை இல்லாமல் என்னால் பேசவே முடியாது. குறிப்பாக எனக்கேயுரிய முறையில் இலை மறை காயாக என்னை விளம்பரம் செய்வேன். அதன் சூட்சுமம் எனக்கு மட்டுமே தெரியும். நான் எப்பொழுதுமே சுதந்திரமானவனாகவும் வலிமை பெற்றவனாகவும் வாழ்ந்து வந்தது உண்மைதான். எனக்குச் சமமாக யாரையும் நான் ஏற்றுக் கொண்டதில்லை. இதன் காரணமாகத்தான் அவர்களுக்கு எந்தவிதத்திலும் நான் கட்டுப்பட்டவனாக இல்லை என்று உணர்ந்தேன். உங்களிடம் ஏற்கெனவே சொன்னதைப்போல் மற்றவர்களை விட அறிவுக்கூர்மை பெற்றவனாக என்னைக் கருதினேன். அது மட்டுமல்ல, அவர்களை விட அதிகமாக உணர்ச்சிவயப்படுபவனாகவும் அதிகமான திறமை படைத்தவனாகவும் உணர்ந்தேன். அதாவது, துப்பாக்கி சுடுவதில் தேர்ந்தவன், கார் ஓட்டுவதில் நிகரற்றவன், சிறந்த காதலன் என எதிலும் நான் சோடைபோனதில்லை. எனக்குத் திறமைக் குறைவு என்று நானே கருதும் துறைகளை எடுத்துக்கொள்வோம். உதாரணமாக, டென்னிஸில் நான் சுமாராக ஆடக்கூடியவன். பயிற்சி செய்ய நேரம் மட்டும் கிடைத்தால் பெரிய ஆட்டக்காரர்களை எல்லாம் தோற்கடித்துவிடலாம் என்ற எண்ணம் எனக்கு அடிக்கடி ஏற்படும். எல்லாவற்றிலும் உயர்ந்திருப்பதான மனோபாவம் என்னிடம் இருந்தது. என் பெருந்தன்மை, பெருமிதம் ஆகியவற்றுக்கு இதுதான் காரணம். மற்றவர்களுக்கு ஏதாவது உதவி செய்ய நேர்ந்தால், அவர்களுக்காகப் பரிதாபப்பட்டு, எவ்விதக் கட்டுபாடுமின்றிப் பெருமித உணர்வுடன் செயல்படுவேன். அதனால் ஏற்படும் முழுப் பெருமையும் எனக்கு வந்து சேரும். என் சுயமதிப்பும் ஒரு படி உயரும்.

நான் உங்களிடம் குறிப்பிட்ட அந்த இரவுக்குப் பிந்தைய காலகட்டத்தில் எனக்குத் தெரியவந்த பல விஷயங்களில், நான் கண்டுபிடித்த இந்த உண்மைகளும் அடங்கும். இவை அனைத்தையும் திடீரென்றோ தீர்க்கமாகவோ நான் கண்டுபிடித்துவிடவில்லை. முதலில் எல்லாவற்றையும் நினைவுக்குக் கொண்டுவர வேண்டியிருந்தது. நாளடைவில் எனக்குச் சில விஷயங்கள் தெளிவாகத் தெரிய ஆரம்பித்தன. ஏற்கெனவே அறிந்திருந்த சிலவற்றின் பொருள் ஓரளவு விளங்கியது. அதுவரையில் என்னிடம் அசாதாரண ஞாபகமறதி குடிகொண்டிருந்தது. குறிப்பாக, என் உறுதிமொழிகள் உட்பட எல்லாவற்றையும் மறந்துவிடுவேன். இவற்றையெல்லாம் நான் பொருட்படுத்தவில்லை. சூழ்நிலைகள் கட்டாயப்படுத்தியதால் போர், தற்கொலை, நேசம், வறுமை என எல்லாவற்றின் மீதும் மேலோட்டமாகவாவது மரியாதை நிமித்தமாகக் கவனம் செலுத்தினேன் என்பது உண்மைதான். சில நேரம், என் அன்றாட வாழ்க்கைக்குத் தொடர்பில்லாத விஷயத்தில் அதிக ஆர்வம் கொண்டவனாய்க் காட்டிக்கொண்டேன். உண்மையில், என் தனிப்பட்ட சுதந்திரத்துக்குப் பங்கம் ஏற்படாதவரை நான் அதில் ஈடுபடமாட்டேன். அதைப் பற்றி நான் உங்களிடம் எப்படி சொல்வேன்? என்மீது விழும் எதுவும் நிற்பதில்லை. அனைத்தும் தாமரை இலைத் தண்ணீராக விலகி விடும்.

நியாயமாகப் பார்த்தால் சில நேரங்களில் என் மறதி போற்றுதலுக்குரியதாகவும் அமைந்தது. சிலர் சார்ந்துள்ள மதத்தை நீங்கள் கவனித்திருக்கக் கூடும். உண்மையில் எல்லாக் குற்றங்களையும் அவர்களுடைய மதம் மன்னித்துவிடும். ஆனால் ஒருபோதும் அவற்றை மறக்காது. மன்னிக்கக்கூடிய அளவு நான் நல்லவனில்லை. ஆனால் ஒருவழியாக நான் அவர்களை மறந்துவிடுவேன். இதன் காரணமாகத்தான் அதுவரை நான் வெறுப்பதாக நினைத்துக்கொண்டிருக்கும் ஒருவன், என்னை அடுத்தமுறை சந்திக்க

நேரும்போது முக மலர்ச்சியோடு வணக்கம் செலுத்துவேன். அப்பொழுது அவன் என்னைப் பார்த்து ஆச்சரியத்தில் ஆழ்ந்து போவான். அவனுடைய இயல்புக்கு ஏற்ப, என் குணத்தின் மேன்மையைப் போற்றுவான் அல்லது என் பலவீனத்தை ஏளனம் செய்வான். அப்படி நான் நடந்துகொள்வதற்குக் காரணம் வேறு ஒன்றுமில்லை. அவன் பெயரைக் கூட மறந்திருப்பேன். என்னிடமுள்ள மறதி பல சமயங்களில் என்னை அக்கறையற்றவனாகவும், நன்றிகெட்டவனாகவும் மாற்றுவதற்குக் காரணமாகி இருக்கிறது. ஆனால், இக்குறைதான் சில சமயங்களில் என்னைப் பெருந்தன்மை கொண்டவனாக ஆக்குவதற்கும் காரணமாகிறது.

எனவே, நான்– நான்– நான் எனும் இந்தத் தொடர்ச்சியைத் தவிர ஒரு நாளுக்கும் அடுத்த நாளுக்கும் வேறு எந்தத் தொடர்ச்சியும் இல்லாமல் நான் வாழ்ந்து வந்தேன். ஒவ்வொரு நாளும், அடுத்த நாள் பற்றிய கவலையின்றிப் பெண்களுடன் பழகினேன். நன்மையோ தீமையோ அன்றோடு போய்விடும். இப்படி ஒவ்வொரு நாளையும் நாயைப் போல் கழித்துவந்தேன். எனினும், என்னைப் பொறுத்தவரை என்றும்போல் நிலைமாறாமல் உறுதியாக வாழ்ந்துவந்தேன். இவ்வாறாக, வாழ்க்கையோடு ஒட்டாமல், வாய்ப்பேச்சை வைத்துக்கொண்டே என் வாழ்க்கைப் பயணத்தைத் தொடர்ந்தேன். ஒருபோதும் எதார்த்தமாக வாழவில்லை. வாசிக்கப்படாத நூல்கள், நேசிக்கப்படாத நண்பர்கள், சுற்றிப் பார்க்காத நகரங்கள், சுகிக்கப்படாத பெண்கள், சலிப்பு அல்லது ஞாபக மறதி – இவற்றில் ஏதோ ஒன்றின் காரணமாக இவ்வாறெல்லாம் வாழ்ந்து வந்தேன். பிறகு சில மனிதர்கள் வந்தனர். என்னை அப்படியே பற்றிக்கொள்ள விரும்பினர். ஆனால் எந்தப் பலனுமில்லை. துரதிர்ஷ்டம்தான் அவர்களுக்கு மிஞ்சியது. ஏனெனில், என்னைப் பொறுத்தவரை நான் அவர்களை மறந்துவிட்டேன். என்னைத் தவிர வேறு எதையும் நான் நினைவில் வைத்துக்கொண்டதில்லை.

எனினும் கொஞ்சம் கொஞ்சமாக எனக்குப் பழைய நினைவுகள் வந்தன. பார்க்கப்போனால் நான்தான் அவற்றை நோக்கிச் சென்றேன் என்றும் சொல்லலாம். நினைவுகள் எனக்காகக் காத்திருப்பதைக் கண்டு கொண்டேன். அதைப் பற்றி உங்களிடம் பேசுவதற்கும் முன்பாக இந்தத் தேடலின் போது கிடைத்த சில அனுபவங்களைச் சொல்ல விரும்புகிறேன். அவை உங்களுக்கு நிச்சயம் உதவியாக இருக்கும் என்று எனக்குத் தெரியும். சொல்லட்டுமா?

ஒருநாள் கார் ஓட்டிக்கொண்டிருந்தேன். சாலைச் சந்திப்பில் பச்சை விளக்கு எரிந்த பிறகும், என் வாகனத்தை நகர்த்த ஒரு நொடிதான் தாமதமானது. பின்னால் நின்றிருந்த பொறுமைக்குப் பேர்போன என் தோழர்கள் உடனடியாகத் தங்கள் வாகனத்திலிருந்தபடியே ஒலி எழுப்பத்தொடங்கினர். அந்த நேரத்தில், அதே போன்றதொரு சூழ்நிலையில் கிடைத்த வேறு அனுபவம் ஒன்று எனக்குத் திடீரென நினைவுக்கு வந்தது. மெலிந்த தேகமுடைய குள்ளமான ஆசாமி ஒருவன் மோட்டார் சைக்கிளில் வந்தான். அகலமான கண்ணாடி, கோல்ப் பேண்ட் ஆகியவற்றை அணிந்திருந்தான். என்னைக் கடந்துசென்று என் வண்டிக்கு எதிரில் வந்து நின்றுகொண்டான். அந்த நேரம் சிவப்பு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. வண்டியை நிறுத்தியபோது வண்டியின் இயக்கத்தையும் அவன் நிறுத்திவிட்டான். மீண்டும் அதை இயக்க எவ்வளவு முயற்சி செய்தும் அவனால் முடியவில்லை. பச்சை விளக்கு வந்ததும், என் வழக்கமான பணிவுடன், அந்தக் குள்ளமான ஆசாமியிடம், நான் போக வசதியாக அவனது வண்டியைத் தள்ளி நிறுத்தும்படிக் கேட்டேன். பிரச்சினை செய்யும் தன் வாகனத்தின் மீது அந்த ஆசாமிக்கு மேலும் எரிச்சல் ஏற்பட்டது. பாரீஸில் கடைப்பிடிக்கப்படும் மரியாதையோடு அவன் என்னைப் பார்த்து எங்காவது போய் முட்டிக்கொள்ளும்படிச் சொன்னான். மீண்டும் ஒருமுறை பணிவாக அவனிடம் கேட்டுப் பார்த்தேன். ஆனால் இம்முறை என் குரலில் பொறுமையின்மையின் தொனி லேசாக வெளிப்பட்டது. நான் எக்கேடாவது கெட்டுப்போகட்டும் என்பது போல் மற்றவர்கள் நடந்துகொண்டனர். இந்த நேரத்தில், என்

பின்னால் நின்றிருந்தவர்களின் வாகனங்கள் சில ஒலி எழுப்ப ஆரம்பித்தன. இப்போது, என் எதிரில் நிற்பவனிடம் மரியாதையாக நடந்துகொள்ளுமாறு சற்றே கடுமையாகச் சொல்லிவிட்டுப் போக்குவரத்துக்கு இடைஞ்சலாக இருப்பதை யோசித்துப் பார்க்கும்படிக் கேட்டுக்கொண்டேன். ஆனால் எல்லாரும் பார்த்திருக்கத் தன் மோட்டார் சைக்கிள் செய்த சண்டித்தனத்தால் அந்த முரட்டு ஆசாமியின் எரிச்சல் மேலும் அதிகமானது. அவனுக்கே உரிய மொழியில், உதை வேண்டுமானால் தாராளமாகத் தருவதாகக் கூறினான். இத்தகைய குதர்க்கம் என்னைக் கடுங்கோபத்துக்கு ஆளாக்கியது. அளவுக்கு அதிகமாகப் பேசிய அந்த ஆளை அடித்துத் துவைத்துவிடுவது என்ற முடிவுடன் காரைவிட்டு இறங்கினேன். நான் கோழையாக இருந்ததாக நினைக்கவில்லை. போகட்டும், வேறு எப்படித்தான் நினைக்க முடியும்? என் எதிரியை விட உயரமாகவே இருந்தேன். என் உடல்வலிமையும் எப்பொழுதும் எனக்கு ஒத்துழைத்துள்ளது. இப்பொழுது நினைத்தாலும், அவன் எனக்குக் கொடுக்க வந்த அடியை யாரிடமாவது வாங்கியிருப்பான்; கொடுத்திருக்கமாட்டான் என்றே தோன்றுகிறது. சாலையில் என் காலடி படவும் அங்குக் கும்பல் கூடவும் சரியாக இருந்தது. அந்தக் கூட்டத்திலிருந்த ஒருவன் வேகமாக என்னை நோக்கி வந்தான். நான் மிகவும் மோசமானவன் என்றும் காரில் வந்திருக்கும் என்னைவிட மோட்டார் சைக்கிளில் வந்திருக்கும் அந்த ஆசாமி வசதி குறைவானவனென்றும், அவனை நான் தாக்க முயல்வது ஒரு மோசமான செயல் என்றும் அவன் வாதிட்டான். எனவே அப்படிப்பட்ட ஒருவனை அடிப்பதைப் பார்த்துக்கொண்டிருக்கமுடியாது என்றும் சொன்னான். நியாயம் கேட்ட அந்த வீரன் பக்கம் திரும்பினேன். உண்மையில் அவன் முகத்தைக்கூட நான் பார்க்கவில்லை. அதற்குள்ளாக, அதாவது ஏறக்குறைய நான் தலையைத் திருப்பிய அதே நேரத்தில் அந்த மோட்டார் சைக்கிள் மீண்டும் புறப்பட ஆயத்தமானது. சுதாரிப்பதற்குள் என் காதோடு கன்னத்தில் பலத்த அடி விழுந்தது. என்ன நடந்தது என்று யோசிப்பதற்குள் மோட்டார் சைக்கிள் பறந்துவிட்டது. குழப்பத்தில், எந்திரகதியில் நியாயம் பேசிய அந்த வீரனை நோக்கி நடந்தேன். அதற்குள் அதிக அளவில் சேர்ந்துவிட்ட வாகனங்கள் கோபமாக ஒலி எழுப்பத் தொடங்கிவிட்டன. பச்சை விளக்கும் வந்துவிட்டது. என்னிடம் வம்பிழுத்த முட்டாளை அறைவதற்குப் பதிலாக, குழப்பம் தெளியாத நிலையில் அமைதியாக என் காருக்குத் திரும்பினேன். என் வாகனம் அவனைக் கடந்து சென்ற போது, அந்தப் பைத்தியக்காரன் என்னைப் பார்த்து 'பாவப்பட்ட ஜீவன்' என்று முணுமுணுத்தபடி வணக்கம் செலுத்திச் சென்றது இன்றும் என் காதில் ஒலிக்கிறது.

இது ஒரு சாதாரண சம்பவம் என்று நீங்கள் சொல்லக்கூடும். ஆனால் அதை மறக்க எனக்கு நீண்ட காலமானதுதான் முக்கியம். இருந்தாலும் என்னிடம் சில நியாயங்கள் உள்ளன. அடிவாங்கியபோதும் எதிர்த்துத் தாக்க வழியில்லாமல் விட்டுவிட்டதற்காக என்னை யாரும் கோழை என்று மட்டும் குற்றஞ்சாட்ட முடியாது. எதுவும் புரியாத நிலையில், நாலாபுறமும் கேள்விஎழுந்தபோது எல்லாம் குழப்பமாக இருந்தன. முத்தாய்ப்பாக அந்த வாகனங்கள் எழுப்பிய ஒலி என்னைத் திக்குமுக்காட வைத்தது. இந்தச் சம்பவத்தால் நான் சோகமாகவே இருந்தேன். என் பெருமைக்குப் பங்கம் ஏற்படும்படி நடந்துகொண்டேன் என நான் கருதியதே அதற்குக் காரணம். அங்குக் கூடியிருந்தவர்கள் ஏளனமாக என்னைப் பார்த்துக்கொண்டிருக்க, எவ்வித உணர்ச்சியையும் வெளிப்படுத்தாமல் என் காரில் நான் ஏறிய காட்சியை நினைத்துப் பார்க்கிறேன். அந்தக் கும்பல் மேலும் உற்சாகம் அடைந்ததற்குக் காரணம், நான் எடுப்பான நீல நிற கோட் அணிந்திருந்ததுதான் என்பதும் நினைவுக்கு வருகிறது. இப்படியெல்லாம் நடந்திருந்தாலும், என்னைப் பார்த்து அந்த ஆசாமி 'பாவப்பட்ட ஜீவன்' என்று பரிதாபப்பட்டது என் காதில் ஒலித்துக்கொண்டே இருந்தது. அப்படி அவன் சொன்னது நியாயமாகவும் தோன்றியது. எது எப்படியோ, பொதுமக்கள் முன்னிலையில் என் மதிப்புக் குலைந்தது. சில சந்தர்ப்பச் சூழ்நிலைகளால் அப்படி நிகழ்ந்துவிட்டது என்றாலும் சூழ்நிலைகள் எதுவும் புதிதில்லையே. எல்லாம் முடிந்த பிறகு, நான் என்ன செய்திருக்க வேண்டும் என்று தெளிவாகத் தெரிந்தது. நியாயம் பேச வந்த அந்த வீரனை ஒரே

அடியில் கீழே தள்ளியிருக்கவேண்டும். என் காருக்குத் திரும்பியதும் என்னை அடித்த அந்தக் குரங்குப் பயலைத் துரத்தி, அவனைக் கடந்து சென்று, அவன் வண்டியைச் சாலையோரத்தில் தள்ளிவிட்டு, அவனைத் தனியே இழுத்துவந்து அவனுக்குப் போதுமான அளவு உதை கொடுத்திருக்க வேண்டும். இப்படியெல்லாம் கற்பனை செய்து பார்த்தேன். இங்குமங்கும் சில வித்தியாசங்களுடன் இந்தச் சிறிய கற்பனைக் காட்சியை என் கற்பனைத் திரையில் நூறுமுறை ஓடவிட்டுப் பார்த்திருப்பேன். ஆனால் காலம் கடந்துவிட்டது. இப்படி பல நாட்களாகப் பழிவாங்க வேண்டும் என்ற இந்தக் கசப்பான மனநிலையை அசைபோட்டபடியே இருந்தேன்.

அட, மீண்டும் மழை பெய்ய ஆரம்பித்துவிட்டது. பரவாயில்லை, இந்தக் கட்டட வாசலில் ஒதுங்கிக்கொள்வோமா?அது சரி, எதைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன்? ஆ, அதுதான். கௌரவம் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அந்தச் சம்பவத்தை நிதானமாக நினைத்துப்பார்க்கும்போது அதன் பொருள் விளங்குகிறது. சுருங்கச் சொன்னால், எதார்த்தத்துக்கு முன் என் கனவுக்கோட்டை தகர்ந்துள்ளது. தனிப்பட்ட முறையிலும் என் தொழிலிலும் மதிக்கத்தக்கதொரு முழுமையான மனிதனாக இருக்க வேண்டும் என்று நான் கனவு கண்டிருக்கிறேன். இப்பொழுது அது தெளிவாகத் தெரிகிறது. அதாவது பிரபல குத்துச்சண்டை வீரர் செர்தான் பாதி, தளபதி தெகோல் பாதி என்று வைத்துக்கொள்ளுங்கள். ஆக, எல்லா விஷயத்திலும் நான் ஆதிக்கம் செலுத்த விரும்பினேன். இதனால்தான் என் வெளித்தோற்றத்தில் கவனம் செலுத்திவந்தேன். என் அறிவுத்திறனைவிட என் உடல் திறனை வெளிக்காட்டுவதில் உறுதியாய் இருந்தேன். ஆனால், எந்தவித எதிர்த்தாக்குதலும் செய்யாமல் பொதுமக்கள் முன்னிலையில் நான் அடிவாங்கிய பிறகு என்னைப் பற்றிய அத்தகைய அழகான பிம்பத்தைத் தொடர்ந்து பாதுகாக்க இயலவில்லை. நான் நினைத்துக்கொண்டிருப்பதைப் போல் உண்மைக்கும் அறிவுக்கும் நான் மிகவும் நெருக்கமானவன் என்பதில் எவ்வித ஐயமும் இல்லையென்றால் எவ்வாறு அந்தச் சம்பவம் என்னைப் பாதிக்கும்? அதைப் பார்த்தவர்களே இந்நேரம் அதை மறந்துபோய் இருப்பார்கள். முதலில், ஒன்றுமில்லாத விஷயத்துக்காகக் கோபப்பட்டது தவறு. அதே போல், கோபம் வந்த பிறகு சமயோசிதமாகச் சமாளிக்க எனக்குத் தெரியவில்லை. இதனால் என் கோபத்தின் விளைவுகளை எதிர்கொள்ள முடியாமல் போனது. அதற்குப் பதிலாகப் பழிவாங்கவே விரும்பினேன். அவனை அடித்துத் துவைத்து வெற்றிபெறத் துடித்தேன். எனவே, என் உண்மையான விருப்பம், அறிவில் அல்லது விட்டுக்கொடுக்கும் பண்பில் இந்த உலகிலேயே உயர்ந்தவனாக இருக்க வேண்டும் என்பதல்ல; மாறாக, நான் நினைத்த ஆளை அடிக்க வேண்டும் என்று விரும்பியுள்ளேன் என்பதுதான். அதாவது, இயல்பாகவே நான் பலம்படைத்தவனாக இருக்க வேண்டும் என்பதைத்தான் பெரிதும் விரும்பியிருக்கிறேன்.அறிவுள்ள மனிதன் ஒவ்வொருவனும் தான் ஒரு பெரிய 'தாதா'வாக இருந்து, பலத்தை மட்டும் வைத்துச் சமுதாயத்தை ஆள வேண்டும் என்றே கனவு காண்கிறான் என்கிற உண்மை உங்களுக்குத்தான் தெரியுமே. அத்தகைய கனவு, நனவாவது எளிது என்று துப்பறியும் நாவல்கள் நம்ப வைக்கும். அது அப்படியொன்றும் எளிதானதல்ல என்பதால் அரசியலை நம்ப வேண்டியுள்ளது. அதிலும், இருப்பதிலேயே கொடூரமான கட்சியாகப் பார்த்து நாம் சேருகிறோம். எல்லாரையும் அடக்கியாள முடியவில்லையென்றால் நம்மை நாமே அவமதித்துக் கொள்வதால் என்ன பயன்? அடக்குமுறைக்கான பல கனவுகள் எனக்குள் இருப்பதை இந்தச் சம்பவம் மூலமாகக் கண்டுபிடித்தேன்.

தாங்கள் இழைத்த குற்றத்தால் எனக்கு எவ்விதத் தீங்கும் நேராதவரை குற்றவாளியின் பக்கம், அதாவது குற்றஞ்சாட்டப்பட்டவரின் பக்கம் நான் இருந்ததாக உணர்ந்தேன். அவர்கள் மீதிருக்கும் குற்றச்சாட்டு என்னைச் சிறப்பாக வாதாட வைத்தது. ஏனெனில், அதனால் எனக்கு எவ்விதப் பாதிப்புமில்லை. நான் அச்சுறுத்தலுக்கு ஆளானபோது, நீதிபதியாக மாறியதோடு நில்லாமல் அதையும் தாண்டி ஒருபடி மேலே

சென்றேன். சட்டங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டு, தவறு செய்தவனை வீழ்த்தி மண்டியிட வைக்கக் கூடிய சக்தியாக மாறிஇருப்பினும் நீதிக்காகப் போராடுபவன் என்றும் விதவைகளுக்கும் அனாதைகளுக்கும் வாதாடப் பிறந்தவன் என்றும் தீவிரமாக நம்பிக்கொண்டிருப்பதைத் தொடர்வது மிகவும் கடினமாக இருந்தது.

என் நினைவைக் கிளறியபோது விரைவிலேயே மேலும் ஒன்றைக் கண்டுபிடித்தேன். மழை வலுக்கிறது, நமக்கு நேரமும் இருக்கிறது. எனவே இதையும் உங்களுடன் பகிர்ந்துகொள்ளட்டுமா? மழையில் நனையாமலிருக்க அந்தப் பெஞ்சின்மீது உட்காரலாம். பைப் புகைப்பவர்கள் பல நூற்றாண்டுக் காலமாக இந்த மழை, இதே கால்வாய்மீது விழுவதைப் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். நான் உங்களுக்குச் சொல்ல இருப்பது சற்றே கடினமானதாக இருக்கும். இம்முறை ஒரு பெண்ணைப் பற்றிய சம்பவம். முதலிலேயே ஒன்றைத் தெளிவுப்படுத்திவிடுகிறேன். பெண்கள் விஷயத்தில் எனக்கு எப்பொழுதுமே வெற்றிதான். அதுவும் அதிகச் சிரமமின்றி வெற்றி பெற்றுவிடுவேன். வெற்றி என்று நான் குறிப்பிடுவது, என்னால் அவர்களுக்குக் கிடைக்கும் இன்பமோ அவர்கள் மூலம் எனக்குக் கிடைக்கும் இன்பமோ அல்ல. வெறுமனே வெற்றி அவ்வளவுதான். ஏறக்குறைய நினைத்தபோதெல்லாம் நினைத்ததை முடித்து வந்தேன். ஏதோ ஒரு வசீகரம் என்னிடம் இருந்ததாகத் தெரிகிறது. கொஞ்சம் யோசித்துப்பாருங்கள். வசீகரம் என்பது என்ன? சுற்றிவளைத்துக் கேட்டாலும் “சரி” என்ற பதிலைப் பிறரிடமிருந்து பெறும் திறமை. அந்தக் காலகட்டத்தில் நான் அப்படித்தான் இருந்தேன். இது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதுதானே? போகட்டும். இப்பொழுது இருக்கும் என் முகத்தைப் பார்த்தாலும் அது அப்படித்தான் என்று சொல்லும்படியாகத்தான் இருக்கும். குறிப்பிட்ட வயதுக்குப் பிறகு தன் முகத்துக்கு ஒவ்வொரு மனிதனும் பொறுப்பேற்றாக வேண்டும். ஆனால் என்ன பயன்? அதுதான் உண்மை. எனக்கு வசீகரம் இருந்ததாக மற்றவர்கள் கருதினர். அதை நான் பயன்படுத்திக்கொண்டேன்.

எனினும், அந்த விஷயத்தில் என்னிடம் தவறான எண்ணம் எதுவுமில்லை. நான் நேர்மையாக நடந்துகொண்டேன். ஏறக்குறைய அப்படித்தான் இருந்தேன் என்றும் சொல்லலாம். பெண்களுடன் நான் கொண்டிருந்த தொடர்பு, பலரும் கூறுவதைப் போல், இயற்கையாகவும் எளிதானதாகவும் தாராளமானதாகவும் இருந்தது. என்னிடம் தந்திரம் எதுவுமில்லை. அப்படியே இருந்தாலும் அதையும் அவர்கள் புகழ்ந்து கொண்டாடும்படியாக நான் பேசும் பேச்சுமுறை மாற்றிவிடும். பொதுவாக எல்லோரும் கருதுவது போல் நான் அவர்களைக் காதலித்தேன்தான்; ஆனால் உண்மையில் அவர்களைக் காதலிக்கவில்லை. பெண்கள்மீது வெறுப்புகொள்வதை நான் எப்பொழுதும் அநாகரிகம் என்றும் முட்டாள்தனம் என்றும் கருதி வந்தேன். எனக்குத் தெரிந்த ஏறக்குறைய எல்லாப் பெண்களையும் என்னைவிட உயர்வாகவே மதித்து வந்துள்ளேன். அத்தகைய உயர்நிலையில் அவர்களை வைத்திருந்தபோதும் பெரும்பாலும் நான் அவர்களுக்குப் பயன்பட்டதைவிட அவர்களைத்தான் நான் நன்கு பயன்படுத்திக்கொண்டேன். எப்படித் தெரியுமா?

உண்மையான காதல் தன்னிகரற்றது என்று எல்லாருக்கும் தெரியும். ஒரு நூற்றாண்டில், ஏறக்குறைய இரண்டு அல்லது மூன்றுமுறை அது வரும். மற்ற காலங்களில் அது ஒரு வார்த்தை ஜாலமாக அல்லது சலிப்புக்கு மறு பெயராக இருந்துவிடும். எப்படி பார்த்தாலும் ஏமாற்றிக் கைவிடப்பட்ட போர்ச்சுக்கீசிய அருட்சகோதரி அளவுக்கு உருகும் மனம் என்னிடமில்லை. (17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மரியானா அல்கோஃபொராடோ என்ற அருட்சகோதரியைக் காதலித்துக் கைவிட்ட பிரெஞ்சுப் படைவீரர் நோயல் புத்தோனுக்கு எழுதியதாகக் கூறப்படும் கடிதங்கள் புகழ்பெற்றவை) அந்தக் கைவிட்டவனைப் போல் கல் நெஞ்சமும் எனக்கில்லை. நான் முற்றிலும் மாறானவன். என் மனதில் பரிதாப உணர்வு அதிகமிருந்தது. எதற்கும் எளிதில் கண்ணீர் சிந்திவிடுவேன். என்னிடம் உள்ள ஒரே பிரச்சினை, என் பரிதாபமெல்லாம்

என்னைச் சார்ந்ததாகவே இருக்கும். மேலும் எனக்கு ஏற்படும் துயரம்கூட, என்னைப் பற்றியதாக மட்டுமே இருக்கும். நான் காதலித்ததே கிடையாது என்பதும் உண்மையில்லை. என் வாழ்விலும் ஒருமுறை பெரிய காதல் ஒன்று உருவாகியுள்ளது. ஆனால் அந்தக் காதலிலும் நான் காதலிக்கப்படுபவனாகத்தான் இருந்துள்ளேன். அந்தக் கோணத்தில் பார்த்தால், இளம் வயதுக்கேயுரிய தவிர்க்கமுடியாத சில பிரச்சினைகளைக் கடந்தபின், விரைவாகவே இயல்பு நிலைக்குத் திரும்பினேன். என் காதல் வாழ்க்கையில் இன்ப வேட்கை மட்டுமே ஆட்சி செலுத்தியது. சுகம் அனுபவிக்கவும் வெற்றிகொள்ளவும் தோதானவற்றை மட்டுமே தேடிக் கொண்டிருந்தேன். இவ்விஷயத்தில் என் தோற்றம் எனக்கு மிகவும் உதவியாக இருந்தது. இயற்கையும் எனக்குத் தாராளம் காட்டியிருந்தது. அதற்காக நான் மிகவும் பெருமையடைந்தது மட்டுமல்ல திருப்தியும் அடைந்தேன். அவை உடல் சுகத்தால் விளைந்ததா அல்லது மரியாதையால் கிடைத்ததா என்று சொல்லத் தெரியவில்லை. விடுங்கள். நான் மேலும் தற்பெருமை பேசுவதாகச் சொல்வீர்கள். அதை நான் மறுக்கமாட்டேன். அத்துடன், உண்மையான விஷயத்துக்காகப் பெருமை பேசினால் அதைத் தற்பெருமை என்றும் கருதமுடியாது.

என் புலனின்ப வேட்கையை மட்டும் எடுத்துக்கொண்டால், எந்த அளவுக்கு அது உண்மையாக இருந்தது என்று புரியும். பத்து நிமிடம் மட்டுமே நீடிக்கக்கூடிய சுகத்துக்காக நான் என் அப்பாவையும் அம்மாவையும்கூட இழக்கத் துணிவேன். அது பற்றிப் பின்னர் வருத்தமடைய நேர்ந்தாலும் கூட! ஆமாம், நான் சொல்வது உண்மைதான். குறிப்பாகப் பத்து நிமிடச் சுகத்துக்காக அப்படி செய்வேன். அதுவும் அத்தகைய சுகம் அன்றோடு முடிந்துவிடும் என்று உறுதியாகத் தெரிந்தாலும் கூட! எனக்கென்று சில கொள்கைகள் இருந்தன என்பது உண்மைதான். உதாரணமாக, நண்பனின் மனைவி புனிதமானவள். எனவே, மிகவும் நேர்மையான முறையில் சிலநாட்களுக்கு முன்னதாகவே அப்பெண்ணின் கணவனுடனான நட்பை முறித்துக்கொள்வேன். இச்செயலைப் புலனின்ப வேட்கை என்று நான் அழைப்பது தவறாகக் கூட இருக்கலாம். புலனின்ப வேட்கை ஒன்றும் வெறுக்கக்கூடியதல்ல. அதைத் தவறு என்று சொல்லும் அளவுக்குப் போகவேண்டாம். ‘குறைபாடு’ என்னும் சொல்லைப் பயன்படுத்துவோம். காதலில் உடல் சுகத்தை மட்டுமே பார்க்கும் ஒருவகையான பிறவிக்குறைபாடு. ஒருவகையில் அந்தக் குறைபாடு வசதியாக இருந்தது. எதையும் எளிதில் மறந்துவிடும் என் இயல்புடன் இணைந்து நான் சுதந்திரமாக இருக்க அது உதவியது. அதே நேரத்தில், கட்டுப்பாடுகள் எதுவுமின்றி விலகி நிற்கும் தோற்றத்தையும் எனக்கு அது அளித்திருந்தது. அதன்மூலம் புதிய வாய்ப்புகளையும் அந்தக் குறைபாடு வழங்கியிருந்தது. இவ்வாறு நான் காதலில் திளைக்காமல் புலன் இன்பத்தில் மட்டும் குறியாக இருந்த காரணத்தால் காதல் சார்ந்த கற்பனைக்குக் கருப்பொருளானேன். நம் பெண் நண்பர்கள் நெப்போலியன் போனாபார்த்தைப் போன்றவர்கள். யாரும் வெற்றி பெறாத ஒன்றில், தாம் வென்றுவிட முடியும் என்று நினைப்பவர்கள்.

இந்தப் பரிவர்த்தனையில், என் புலனின்ப வேட்கையைத் தவிர வேறு ஒரு விஷயத்திலும் எனக்குத் திருப்தி ஏற்பட்டது. கேளிக்கை மேல் கொண்டிருந்த ஆர்வம்தான் அது. நான் சந்தித்த பெண்களில் என்னுடன் இத்தகைய கேளிக்கையில் பங்கு பெற்றவர்களைப் பிடிக்கும். அதில்ஓரளவு அப்பாவித்தனம் இருந்தாலும் கூட! வாழ்வில் சலிப்பு ஏற்படுவதை என்னால் பொறுத்துக்கொள்ள முடியாது. எனவே கேளிக்கைகளில் மட்டுமே ஏன் முழுக் கவனம் செலுத்தி வந்தேன் என்று இப்போது புரிகிறதா? நட்புவட்டம் எவ்வளவு அறிவார்ந்ததாக இருந்தாலும் விரைவில் அது என்னைச் சலிப்படையச் செய்துவிடும். மாறாக, நான் விரும்பிய பெண்களோ என்னை ஒருபோதும் அப்படி சலிப்படையச் செய்ததில்லை. இதைக் கூற எனக்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. அழகான துணை நடிகையை முதன்முறையாகச் சந்திக்கும் வாய்ப்புக்காகப் பத்துமுறை ஐன்ஸ்டீனைச் சந்திக்கும் வாய்ப்பையும் இழக்கத்

தயாராவேன். எனினும் அந்த நடிகையுடனான பத்தாவது சந்திப்பின் முடிவில் ஐன்ஸ்டீன்மீதும், ஆழ்ந்த வாசிப்பின் மீதும் எனக்கு ஏக்கம் ஏற்படும். சுருக்கமாகச் சொன்னால், என் சிற்றின்பங்களுக்கிடையே கிடைக்கும் ஓய்வுநேரத்தில் மட்டுமே முக்கிய பிரச்சினைகளைப் பற்றிக் கவலைப்படுவேன். நடைபாதையில் என் நண்பர்களுடன் மும்முரமான விவாதத்தில் ஈடுபட்டிருக்கும்போது கவர்ச்சியான பெண் ஒருத்தி பாதையைக் கடந்து செல்ல நேர்ந்தால் நான் பேச வந்த முக்கியமான விஷயம் மறந்துபோகும். இப்படி எத்தனை முறை நடந்திருக்கிறது தெரியுமா?

இவ்வாறாக, என் கேளிக்கை தொடர்ந்தது. விரைவாக நாம் இலக்கை எட்டுவதைப் பெண்கள் விரும்புவதில்லை. முதலில் உரையாடல் இருக்க வேண்டும்; அவர்கள் மொழியில் சொல்வதென்றால் அதிகமான அக்கறை காட்ட வேண்டும். வழக்குரைஞராக இருப்பதால், பேசுவது எனக்கு இயல்பான விஷயமாகும். இராணுவச் சேவையின்போது, அமெச்சூர் நடிகனாக இருந்த அனுபவம் இருப்பதால் முகபாவனைகளை மாற்றுவதிலும் சிரமமில்லை. நான் அடிக்கடி வேடங்களை மாற்றுவதுண்டு. ஆனால் அது ஒரே நாடகத்துக்குள் நிகழும். உதாரணமாக, " இனம் தெரியாத ஈர்ப்பு" என்று கூறுவேன். "ஏதோ ஒன்று உன்னிடம் உள்ளது" என்பேன். "நான் காதல் வயப்படுவேன் என்று எதிர்பார்க்கவில்லை". "காதலில் எனக்கு அலுப்புக்கூடத் தட்டிவிட்டது . . . " இப்படி நான் பயன்படுத்துவது எல்லாம் பழைய பல்லவிதான் என்றாலும் அது நல்ல பலனைத் தந்தது. "வேறு எந்தப் பெண்ணும் அளித்திருக்க முடியாத இனங்காணா இன்பம் இது. இது தற்காலிகமாகவும் இருக்கலாம்; கிடைக்காமலும் போகலாம். ஏனெனில் இந்த விஷயத்தில் யாராலும் உத்திரவாதம் தர முடியாது. ஆனால் இது தன்னிகரற்றதாகும்" என்றும் கூறுவேன். இவை எல்லாவற்றுக்கும் மேலாக, ஒரு சிறிய உரையைச் சிறப்பான முறையில் தயார் செய்து வைத்திருந்தேன். அதற்கு எப்பொழுதும் நல்ல வரவேற்பு இருந்தது. நீங்களும் அதை விரும்புவீர்கள் என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். விரக்தியும் சோகமும் கலந்த அப்பேச்சின் முக்கிய அம்சம் இதுதான்:– "நான் ஒன்றும் இல்லாதவன். என்மேல் ஆசை வைப்பதில் பயனில்லை. என் வாழ்க்கை வேறு எங்கேயோ உள்ளது, நித்தம் அனுபவிக்கும் இந்த இன்பத்தில் இல்லை. ஒருகாலத்தில் எந்தப் பொருளையும்விட இந்த இன்பத்தை மட்டுமே நான் விரும்பியிருக்கலாம். ஆனால் என்ன செய்வது? காலம் கடந்துவிட்டது". ஆனால் காலம் கடந்து போனதற்கான காரணங்கள் எவை எனும் இரகசியத்தைச் சொல்வதில்லை. ஏனெனில், புதிரை அவிழ்க்காமலேயே கட்டிலுக்குப் போவது நல்லது என்று தெரிந்துவைத்திருந்தேன். ஒரு வகையில் நான் சொல்வதையெல்லாம் உண்மை என்றும் நம்பினேன். அதாவது, என் பாத்திரத்தோடு ஒன்றிப்போய்விடுவேன். என்னுடன் பழகியவர்களும் உற்சாகமாக நடித்துக்கொண்டிருந்ததில் வியப்பில்லை. என்னுடன் பழகிய பெண்களில், எளிதில் உணர்ச்சிவயப்படக்கூடியவர்கள் என்னைப் புரிந்துகொள்ள முயன்றனர். ஆனால் அவர்களின் முயற்சிக்கு எவ்விதப் பலனும் கிட்டாமல் போகவே சோகத்தில் ஆழ்ந்தனர். மற்றவர்களைப் பொறுத்தவரை, விதிகளுக்கு உட்பட்டு நான் செயல்படும் திறமை, செயலில் இறங்கும்முன் அதைக் குறித்துப் பேசத் தெரிந்த சாதுர்யம் ஆகியவை என்னிடம் இருந்ததைக் கண்டு திருப்தியடைந்தனர். எனவே எதார்த்தங்களைப் பற்றிக் கவலைப்படாமல் அடுத்த கட்டத்தை நோக்கி முன்னேறினர். இதனால் இரு நிலைகளில், எனக்கு வெற்றி கிடைத்தது. அவர்கள்மீது நான் கொண்டிருந்த ஆசை மட்டுமின்றி, ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் எனக்குள்ள தனித் திறமைகளைச் சரிபார்த்துக்கொள்வதன் மூலம் என் சுயத்திற்கும் திருப்தி கிடைத்தது.

பெண்களில் சிலர் எனக்குக் குறைவான சுகத்தையே தந்தனர் என்றாலும் அவ்வப்பொழுது அவர்களுடனான தொடர்பைப் புதுப்பித்துக் கொண்டே இருப்பேன். அப்படி செய்யக் காரணம், பிரிவுத்துயரால் விளையும் வினோதமான ஆசை மட்டுமல்ல அதன் தொடர்ச்சியாகத் திடீரென மனதில் மீண்டும் எழும் கிளர்ச்சியும்தான். இத்துடன் எங்களிடையே உள்ள தொடர்பு நீட்டிப்பை

உறுதிபடுத்திக்கொள்ளவும் அதைப் பலப்படுத்தும் ஆற்றல் என் கையில்தான் உள்ளது என்பதைத் தெளிந்து அறியவும் அது உதவியது. சிலநேரங்களில் என்னைத் தவிர வேறு யாருக்கும் தன்னை ஒப்படைக்கமாட்டேன் எனப் பெண் ஒருத்தியைச் சத்தியம் செய்யவைக்கும் அளவுக்கும் சென்றுவிடுவேன். இந்த விஷயத்தில் எனக்குள்ள சஞ்சலங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கவே இவ்வாறு உறுதிமொழி ஒன்றைப் பெற்றுக்கொள்வேன். இந்தச் சஞ்சலம் மனதினாலோ கற்பனையினாலோ விளைந்தது அல்ல. உண்மையில், இதற்குக் காரணம் என் மனதில் அதீதமான பெருமிதவுணர்வு ஆழமாக வேரூன்றியிருந்ததுதான். எனவே, என்னையும் அறியாமல் எனக்கென்று இருந்த பெண் வேறு ஒருவனுக்கு உடைமையாகக்கூடும் என்ற சாத்தியக்கூற்றினைக் கற்பனைசெய்துபார்க்க மிகவும் சிரமப்படுவேன். ஆனால் பெண்கள் என்னிடம் செய்து தரும் இந்தச் சத்தியம் எனக்கு முழுச் சுதந்திரம் அளித்த அதே நேரம் அவர்களைக் கட்டுப்பாட்டுக்குள் இருக்குமாறும் செய்தது. அவர்கள் வேறு யாருக்கும் உடைமையாகப் போவதில்லை என்று தெரிந்தபின் அவர்களைப் பிரிவது குறித்து நான் முடிவெடுக்கலாம். இல்லையென்றால் என்னால் அதை அறவே செய்ய முடியாது. இதன்மூலம் அவர்கள் விஷயத்தில் எனக்கு இருந்த சஞ்சலம் முற்றிலுமாக நீங்கியதோடு என் ஆதிக்கத்தை நீண்ட நாட்கள் நிலைநிறுத்த முடிந்தது. விசித்திரமாக இருக்கிறது இல்லையா? அது அப்படித்தான். சிலர் “என்னை விரும்பு!” என்று கத்துவார்கள், வேறு சிலர் “என்னை விரும்பாதே!” என்பார்கள். ஆனால் ஒரு குறிப்பிட்ட சாரார் இருக்கிறார்கள். அவர்கள்தான் மிகவும் மோசமானவர்கள். அவர்கள் பரிதாபமானவர்கள். “என்னை விரும்பவேண்டாம். ஆனால் என்னிடம் விசுவாசமாக இரு போதும்!” என்பார்கள்.

பெண்களுடனான தொடர்பு குறித்து நிச்சயமாக ஒரு முடிவுக்கு வர இயலாது என்பதால் புதிதாய்ச் சந்திக்கும் ஒவ்வொருவரிடமும் மீண்டும் ஒருமுறை இந்தச் சோதனையைச் செய்தாக வேண்டும். இப்படி மீண்டும் மீண்டும் சோதனையில் ஈடுபட நேரும்போது நமக்குச் சில பழக்கங்கள் ஏற்பட்டுவிடும்; இதனால் யோசிக்காமலேயே இயல்பாகப் பேச்சு வரும். அதைத் தொடர்ந்து அனிச்சையாகச் செயல்படுவோம். இவ்வாறாக, இறுதியில் ஒருநாள் விருப்பமில்லாத ஒருத்தியை ஏற்றுக்கொள்ளும் நிலையில் நாம் இருப்பது தெரியவரும். சிலரைப் பொறுத்தவரையாவது, பிறருக்காகத் தான் விரும்பாத ஒன்றினை ஏற்றுக்கொள்ளாததுதான் மிகவும் மனவருத்தம் அளிக்கக்கூடியதாக இருக்கும்.

இறுதியில் எனக்கு இதுதான் நடந்தது. அந்தப் பெண் யார் என்று உங்களிடம் சொல்வதில் பயனில்லை. ஒன்றை மட்டும் சொல்கிறேன். என்னை முற்றிலுமாகச் சலனப்படுத்தாமல், அவளது மௌனமான, ஆர்வம் நிறைந்த பார்வையால் கவர்ந்துவிட்டாள். உண்மையில் எல்லாரும் எதிர்பார்ப்பதைப் போல் அது ஒரு சாதாரண அனுபவம்தான். ஆனால் என்னிடம் எந்தச் சபலமும் இல்லாததால் அந்தப் பெண்ணை விரைவில் மறந்துவிட்டதுடன் அதன் பின்னர் சந்திக்கவே இல்லை. அவள் எதையும் பொருட்படுத்தவில்லை என்று நினைத்தேன். தன் பங்குக்கு அவளும் ஏதாவது நினைக்கக்கூடும் என்று என்னால் கற்பனை செய்ய இயலவில்லை. மேலும் என்னைப் பொறுத்தவரை, அமைதியான அவளது தோற்றம் மற்றவர்களிடமிருந்து அவளை வேறுபடுத்திக் காட்டியது. எனினும், சில வாரங்களுக்குப்பின் என்னிடம் உள்ள குறைபாடுகளை யாரோ ஒருவரிடம் அவள் சொன்னதாகக் கேள்விப்பட்டேன். அப்போது சற்றே ஏமாற்றப்பட்டதாக நான் உணர்ந்தேன். நான் நினைத்த அளவு அவள் அமைதியானவள் இல்லை. மேலும் அவளுக்கும் மதிப்பீடுகள் செய்யத் தெரிந்திருக்கிறது. அதைப் பற்றிக் கவலையில்லை என்று தோள்களைக் குலுக்கிச் சிரிப்பதுபோல் பாசாங்கு செய்து மழுப்பினேன். உண்மையிலேயே சிரித்தேன் என்றுதான் சொல்லவேண்டும். நிச்சயமாக அந்தச் சம்பவம் மிகவும் சாதாரணமானதுதான். இது தன்னடக்கம் தலையானதாகக் கருதப்படும் ஒரு விஷயம் என்று எடுத்துக்கொண்டால், அது பாலுணர்வும் அது தொடர்பான எதிர்பாராத அம்சங்களில்தான் என்றுதானே நினைக்கிறீர்கள்?

அதுதான் இல்லை. தனிமையாக இருப்பதில்கூட யாருக்கு அதிக அனுகூலம் என்று நிரூபிக்க முயன்று கொண்டிருந்தோம். எதையும் பொருட்படுத்தாமல் தோள்களைக் குலுக்கிக்கொண்டேன் என்றாலும், உண்மையில் நான் எடுத்த நடவடிக்கைதான் என்ன? சிறிது காலத்துக்குப்பின் அந்தப் பெண்ணைச் சந்தித்தேன். அவளை வசீகரிக்கத் தேவையான அனைத்தையும் செய்து மீண்டும் என் வசம் கொண்டுவந்தேன். அது எனக்கொன்றும் கடினமாக இல்லை. காரணம், பெண்களும் தோல்வியில் முடங்கிக்கிடக்க விரும்பமாட்டார்கள். அந்த நொடியிலிருந்து, என்னையும் அறியாமல் எல்லா வகையிலும் அவளைத் துன்புறுத்த ஆரம்பித்தேன். அவளைக் கைவிடுவதும் பிறகு ஏற்றுக்கொள்வதுமாக இருந்தேன். உரிய காலம், இடம் ஆகியவற்றைப் பொருட்படுத்தாமல் என் ஆசைக்கு அவளை இணங்கக் கட்டாயப்படுத்தினேன். நான் அவளை எல்லா விஷயங்களிலும் கடுமையாக நடத்தினேன். நான் நடந்துகொண்ட விதம், சிறைக் காப்பாளர் தன்வசமுள்ள கைதி ஒருவரிடம் நடந்துகொள்வதைப்போல் இருந்தது. எனினும், தன்னை அடிமைப்படுத்திய என்னை ஒருநாள் உரத்த குரலில் அவள் புகழ்ந்தாள். அந்த உறவு அன்றுதான் முடிவுக்கு வந்தது. வலியும் நிர்ப்பந்தமும் கலந்த சுகத்தின் முடிவில், மோசமான அலங்கோல நிலையில் அப்பொழுது அவள் இருந்தாள். அன்றுமுதல் அவளை நான் மறந்துவிட்டேன்.

பெருந்தன்மையாக நீங்கள் மௌனம் சாதித்தாலும், உங்கள் கருத்தை ஏற்றுக்கொள்கிறேன். அந்தச் சம்பவம் பெருமைக்குரியது இல்லை என்பது உண்மைதான். ஆனால் உங்கள் வாழ்க்கையைச் சற்றே திரும்பிப்பாருங்கள். நினைவுப் பெட்டகத்தில் நன்றாகத் தேடிப்பார்த்தால் இது போன்றதொரு சம்பவம் கிடைக்கும். அதைப் பின்னர் என்னிடம் சொல்லுங்கள். என் விஷயத்தில், அந்தச் சாதாரண சம்பவம் நினைவுக்கு வந்தபோது, நான் மீண்டும் சிரிக்க ஆரம்பித்தேன். ஆனால் அது வேறுவிதமான சிரிப்பு. அந்த போந்தேஸார் என்னும் பாலத்தின்மீது கேட்டதைப் போன்றதொரு சிரிப்பு. என் உரையாடல் குறித்தும் என் வாதங்களை நினைத்தும் சிரித்தேன். ஒருவகையில், பெண்களிடம் நான் நிகழ்த்திய உரையாடல்களைவிட நீதிமன்ற வாதங்களை நினைத்தே அதிகம் சிரித்தேன். பெண்களிடம் பேசும்போது குறைவாகவே பொய் சொல்வேன். பேச்சில் நழுவல்கள் எதுவுமின்றி என் உள்மனது தெளிவாக இருக்கும். உதாரணமாக, காதலிக்கும் செயல் ஒரு வாக்குமூலம் போன்றது. அதில் சுயநலம் ஓங்கி ஒலிக்கும், தற்பெருமை தலைவிரித்தாடும் அல்லது உண்மையான தாராளக் குணம் தானாக வெளிப்படும். முடிவாக, என்னுடைய வாழ்க்கையில் நடந்த மற்ற நிகழ்ச்சிகளோடு ஒப்பிடும்போது, அந்த வருந்தத்தக்க சம்பவத்தில் நான் நினைத்ததைவிடவும் அதிக நேர்மையுடன் இருந்துள்ளேன். ஏனெனில் நான் யார் என்பதையும் எப்படியும் என்னால் வாழ முடியும் என்பதையும் சொல்லிவிட்டேன். தங்கள் வழக்குகளை வாதாடும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்துள்ள என் வாடிக்கையாளர்கள் குற்றமற்றவர்கள் என்பது பற்றியும் நீதி, நியாயம் பற்றியும் நீட்டிப் பேசுவேன். அத்தகைய என் பேச்சுக்கு மதிப்பு இருந்தது. எனவே என் தோற்றம் எப்படி இருந்தாலும் உங்களிடம் கூறியது போல் நான் நடந்துகொண்டிருந்தபோதிலும், என் தனிப்பட்ட வாழ்க்கைமீது அதைவிட அதிக மரியாதை இருந்தது. மற்றவர்களுடன் எனக்கு இருக்கும் நட்புறவைப் பார்க்கும்போது என் இயல்பின் உண்மைத் தன்மையைப் பற்றித் தவறான முடிவுக்கு என்னால் வர முடியவில்லை. சுருக்கமாகச் சொன்னால், தன்னுடைய சொந்த திருப்தியைப் பொறுத்தவரை எந்த மனிதனும் பொய்யாக நடந்துகொள்ளமாட்டான். இந்தக் கூற்றை நான் எங்காவது வாசித்திருக்கிறேனா அல்லது நானே சிந்தித்தேனா என்று தெரியவில்லை.

மேற்கண்டவாறு பெண் ஒருத்தியை நிரந்தரமாகப் பிரிய நேரும்போது எனக்குச் சங்கடம் ஏற்படும். அதற்கான காரணத்தை ஆராய்ந்து பார்த்தால் என் இளகிய மனத்தின்மீது பழி சுமத்தமுடியவில்லை. இதே சங்கடம்தான் ஒரே நேரத்தில் ஏராளமான பெண்களுடன் என்னைத் தொடர்பு வைத்துக்கொள்ளும்படியும் தூண்டியது. அத்தகைய பெண்களில் ஒருத்தி, எங்கள் காதலின் முக்கிய

கட்டத்திற்காகக் காத்திருந்து களைத்துப் போய் என்னைவிட்டுப் பிரியப்போவதாகச் சொன்னாள். அப்பொழுது இந்த இளகிய மனம் என்னை இயக்கவில்லை. நான்தான் உடனே முன்வந்து விட்டுக்கொடுத்தேன். சாதுர்யமாகப் பேச ஆரம்பித்தேன். வெறுமனே தோற்றத்தில் மட்டுமே பாசத்தையும் பலவீனத்தையும் வெளிப்படுத்துகிற நான், உண்மையான பாசத்தையும் பலவீனத்தையும் அவளிடம் தூண்ட முயற்சி செய்தேன். இதற்குக் காரணம், என் காதலை மறுத்ததால் ஏற்பட்ட பதற்றம் மட்டுமல்ல, பெண் ஒருத்தியின் நெருக்கத்தை இழக்க நேரிடுமே என்ற அச்சமும்தான். உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால், நிச்சயமாக நான் துன்பத்தில் இருப்பதாகவே சில நேரங்களில் உணர்ந்தேன். ஆனால், என்மீது விரக்தியில் இருந்த அந்தப் பெண் என்னைவிட்டுப் பிரிந்து சென்றால் போதும். உண்மையில் எளிதாக அவளை என்னால் மறக்க முடியும். மீண்டும் என்னுடன் சேர முடிவுசெய்து என் அருகில் வந்தபின்னர் ஒருத்தியை மறந்தேனே அதே போல்! எனவே, அவள் என்னைக் கைவிடக்கூடிய ஆபத்து இருந்தபோது, காதலோ என் பரந்த மனப்பான்மையோ என்னை இயக்கவில்லை. மாறாக, நான் காதலிக்கப்பட வேண்டும் என்ற ஆசையும் எனக்கு உரியதைப் பெற்றுவிட வேண்டும் என்ற வேட்கையும்தான் என்னை இயக்கின. என்னைப் பொறுத்தவரை, அதைத் தர அவள் கடமைப்பட்டவள். எதிர்பார்த்தபடியே நான் காதலிக்கப்பட்டேன்; ஆனால் உடனே அவளை மறந்தேன். என் வாழ்வில் மீண்டும் பிரகாசிக்கத் தொடங்கினேன். மிகவும் உற்சாகமாக இருந்த நான் எல்லோரும் விரும்பக்கூடிய மனிதனானேன்.

மேலும், ஒரு பெண்ணின் தொடர்பை மறுபடியும் பெற்றவுடன் அதன் பாரத்தை என்னால் உணர முடிந்தது. எரிச்சல் உண்டாகும் நேரங்களில், எனக்கு விருப்பமான அப்பெண்ணின் மரணம் மட்டுமே பொருத்தமான தீர்வாக இருக்க முடியும் என்று நினைத்துக்கொள்வேன். அத்தகைய மரணம், எங்களிடையே உள்ள உறவின் தன்மையைத் தெளிவாக்கிவிடும். அதே சமயம், அந்த உறவுக்கான நிர்ப்பந்தத்தையும் அது தகர்த்துவிடும். எனினும் வேறு எந்த வழியிலும் சாத்தியமில்லாத சுதந்திரம் ஒன்றை அனுபவிப்பதற்காக எல்லோரும் சாக வேண்டும் என்றோ ஒருபடி மேலே போய், இந்தப் பூமியே மனிதர்கள் இல்லாத இடமாக மாறிவிட வேண்டும் என்றோ நாம் எதிர்பார்க்க முடியாது. இத்தகைய எண்ணத்துக்கு என் இரக்கக் குணமும் மனிதாபிமானமும் எதிரானவையாகும்.

இதுபோன்ற சம்பவங்களில் எனக்கு அவ்வப்பொழுது உண்டானது நன்றி உணர்வு மட்டுமே. எல்லாம் நல்லவிதமாக நடந்து கொண்டிருக்கும்போது அமைதியை மட்டுமல்ல, நினைத்தபடி அவர்களைச் சந்திக்கவும் பிரியவுமான சுதந்திரத்தையும் பெண்கள் எனக்குத் தந்திருந்தனர். ஒருத்தியின் படுக்கையைவிட்டு வெளியேறிய அடுத்த சில நிமிடங்களில் வேறு ஒரு பெண்ணிடத்தில் அதிகமான தாராளத்துடனும் சந்தோஷத்துடனும் நடந்துகொண்டேன். இச்செயல், ஏதோ நான் பழகும் பெண்களுள் யாரோ ஒருத்தியிடம் கடன்பட்டு, அதனை மற்ற எல்லாருக்கும் பகிர்ந்தளிப்பது போல் அமைந்தது. என் உணர்வுகளில் குழப்பம் வெளிப்படையாகத் தெரிந்தபோதிலும் எனக்குத் தெளிவான பலன் கிடைத்தது. என்மீது பற்றுவைத்துள்ள அனைவரையும் நான் விரும்பிய நேரத்தில் பயன்படுத்திக்கொள்ளுமாறு எளிதில் அணுகக்கூடிய தூரத்தில் வைத்திருந்தேன். நானே ஒப்புக்கொள்வதைப் போல், இந்த உலகில் என்மீது ஆசை வைத்துள்ள அத்தனை பேரிடமும் அல்லது அதிகபட்சம் எத்தனை பேர் என்னை விரும்புவார்களோ அவர்கள் அனைவரிடமும் சில அம்சங்களை எதிர்பார்க்கிறேன். என்னுடனான உறவு இறுதிவரைப் பற்றற்றதாக இருக்கவேண்டும். தங்கள் தனிப்பட்ட வாழ்க்கையைத் துறந்து நான் எந்த நேரம் கூப்பிட்டாலும் எனக்கு அவர்கள் இணங்க வேண்டும். அதாவது, அவர்கள்மீது என் கருணை மழை பொழியும் வரை குழந்தைப் பேறு இல்லாமல் காத்துக்கிடக்கவேண்டும். இப்படியெல்லாம் நடந்தால்தான் நான் மகிழ்ச்சியாக வாழ முடியும். சுருக்கமாகச் சொன்னால், நான் மகிழ்ச்சியாக வாழ வேண்டுமென்றால்,

நான் தேர்ந்தெடுக்கும் பெண்களுக்குத் தனிப்பட்ட வாழ்க்கை என்பதே இருக்கக் கூடாது. அவ்வப்பொழுது அவர்களுக்கு வாழ்க்கையில் கிடைக்கும் எந்தச் சந்தோஷமும் என் சந்தோஷத்தைச் சார்ந்தே இருக்கவேண்டும்.

என்னை நம்புங்கள். இதை உங்களிடம் சொல்வதால் எனக்கு எவ்வித மன நிறைவும் கிடைக்காது. அது ஒரு காலம். என் பங்களிப்பு எதுவுமில்லாமல் எல்லாவற்றையும் பெற விரும்புவேன். ஏராளமானவர்களை எனக்குச் சேவை செய்யும்படி வைத்துவிடுவேன். எனக்குத் தேவைப்படும் நாள் ஒன்றில் பயன்படுத்த ஏதுவாகக் குளிர்ப்பதனப்பெட்டியில் வைப்பதைபோல் அவர்களைப் பாதுகாத்து ஒதுக்கிவைப்பேன். இத்தகைய காலகட்டத்தை நினைத்துப் பார்க்கும்போது ஒருவிதமான வினோத உணர்வு ஏற்படுகிறது. அதை எப்படி அழைப்பது என்று தெரியவில்லை. ஒருவேளை, அதைத்தான் வெட்கக்கேடானது என்று அழைக்கிறோமா? வெட்கக்கேடானதென்றால் அது கொஞ்சமாவது உறுத்தாதா? உறுத்துமல்லவா? அப்படியென்றால் அதுவாகத்தான் இருக்கும்; இல்லையென்றால் கௌவரத்தைக் குலைக்கும் உணர்வாகவோ நகைப்புக்குரிய வேறு உணர்வாகவோ இருக்கலாம். எப்படி பார்த்தாலும், என் நினைவுப் பெட்டகத்தின் மையத்தில் உள்ள அந்தக் குறிப்பிட்ட சம்பவம் நடந்தது முதல், இந்த உணர்வு என்னைவிட்டு அகலவேயில்லை என்றே தோன்றுகிறது. தொடர்பில்லாத பல விஷயங்களைப் பேசியிருந்தாலும், அச்சம்பவத்தை விவரிக்காமல் இனியும் நான் தள்ளிப்போட மாட்டேன். எனினும் நான் புதிதாய்ச் சிலவற்றைச் சொல்ல முயன்றதை ஏற்றுக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

அட, மழையும் நின்றுவிட்டதே! தயவு செய்து என் வீடு வரை நீங்கள் வர வேண்டும். எனக்குப் பெரும் சோர்வு ஏற்பட்டுள்ளது. அது உங்களிடம் அதிகம் பேசியதால் அல்ல. இன்னும் உங்களுக்குச் சொல்ல வேண்டியது இருக்கிறதே என்ற எண்ணம்தான் காரணம். அந்தச் சம்பவத்தைப் பற்றிப் பேசுவோம். நான் முக்கியமாகக் கண்டுபிடித்ததைச் சில வார்த்தைகளில் சொல்லிவிடலாம். மேலும், அதிகமாகப் பேசிக்கொண்டிருப்பதில் என்ன பயன்? சிலை முழுமையாகத் தெரியவேண்டுமென்றால் அதன்மேல் அமர்ந்துள்ள புறாக்கள் பறந்துசென்றுவிட வேண்டும். அதேபோல் சுயரூபம் தெரிய வேண்டுமென்றால் அலங்கார வார்த்தைகளுக்கு அங்கு இடமில்லை. ஆகவே இதைக் கேளுங்கள். நவம்பர் மாதத்தின் அந்தக் குறிப்பிட்ட இரவின்போது, அதாவது என் பின்புறம் சிரிப்பொலி கேட்டதாக நினைத்தேனே, அதற்கு இரண்டு அல்லது மூன்று வருடங்களுக்கும்முன் நடந்ததைச் சொல்லுகிறேன். அப்பொழுது நேரம் இரவு ஒருமணி. நான் போன்ரொயால் என்னும் பாலம் வழியாக நதியின் இடது கரைக்கு, அதாவது என் வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருக்கிறேன். லேசாக மழைபெய்துகொண்டிருந்தது; தூறல் என்றே சொல்லலாம். தெருவில் நடமாடிக்கொண்டிருந்த சிலரையும் அத்தூறல் கலைத்தது. சற்றுமுன்தான் நான் தொடர்பு வைத்திருந்த ஒரு பெண்ணிடமிருந்து வெளியேறியிருந்தேன். அவள் ஏற்கெனவே தூங்கியிருப்பாள். அத்தகைய சூழலில் காலாற நடப்பது சுகமாக இருந்தது. சற்றே மரத்துப்போனதைப் போல் இருந்த என் உடல் அமைதியடைந்து, அந்த நேரத்தில் விழுந்து கொண்டிருந்த தூறலைப்போல் என் உடலில் இரத்தம் இதமாகப் பாய்ந்துகொண்டிருப்பதை உணர்ந்தேன். பாலத்தின்மீது நின்றிருந்த உருவம் ஒன்று தடுப்புச்சுவர் பக்கமாகச் சாய்ந்து அந்த நதியை முறைத்துப் பார்ப்பது போல் தோன்றியது. அந்த உருவத்தின் பின்பக்கமாக நான் கடந்துசென்றேன். அந்த உருவத்தை நெருங்கிப் பார்த்தபோது, மெலிந்த தேகமுடைய பெண் ஒருத்தி கருப்பு உடையில் நின்றிருந்தது தெரிந்தது. அவளது கருங்கூந்தலுக்கும் கோட் காலருக்கும் இடையில் நனைந்து ஈரமாக இருந்த கழுத்தின் பின்பகுதி என்னைச் சலனமடையச் செய்தது. சில நொடிகள் தயங்கியபின், தொடர்ந்து நடந்தேன். பாலத்தின் முடிவில், நான் வசித்துவந்த சேன்மிஷேல் பகுதியை நோக்கிச் செல்லும் சாலையில் இறங்கி நடக்க ஆரம்பித்தேன். சுமார் ஐம்பது மீட்டர் தூரம் போயிருப்பேன். இருள் கவிந்த அந்த அமைதியான சூழலில் எங்களுக்கிடையே இருந்த தூரத்தையும் மீறி,

*யாரோ ஒருவர் தண்ணீரில் விழும் சத்தம் எனக்குத் தெளிவாகக் கேட்டது. அங்கேயே நின்றுவிட்டேன். ஆனால் திரும்பிப் பார்க்கவில்லை. ஏறக்குறைய அதே நேரம் அலறல் சத்தம் கேட்டது. பலமுறை ஒலித்த அந்தச் சத்தமும் நதியின் ஆழத்தை நோக்கி இறங்குவதாகவே இருந்தது. பிறகு திடீரென்று அந்தச் சத்தம் நின்றுபோனது. அதைத் தொடர்ந்து நிலவிய நிசப்தம், உறைந்துபோன இரவில் முடிவற்றதாக எனக்குத் தோன்றியது. ஓட வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் என்னால் ஓர் அடி கூட நகர முடியவில்லை. உடல் நடுங்கியது. குளிரும் அதிர்ச்சியும்தான் காரணம் என்று நினைத்தேன். நான் விரைவாகச் செயல்பட வேண்டும் என்று எனக்குள் சொல்லிக்கொண்டேன். தாக்குப்பிடிக்க முடியாத அளவு பலவீனம் என்னை ஆட்கொண்டதை உணர்ந்தேன். அப்பொழுது என்ன நினைத்தேன் என்று நினைவில் இல்லை. "வெகுநாட்களுக்கும்முன். . . வெகுதூரத்தில் நடந்தது. . . " அல்லது இதுபோன்ற வேறு ஏதோ ஒன்றின் காரணமாக அது மறந்துவிட்டது. அசையாமல் நின்றிருந்த நான், தொடர்ந்து கவனிக்கலானேன். பிறகு, மழையில் நடந்தபடி அந்த இடத்தைவிட்டு மெல்ல விலகினேன். நான் யாரிடமும் அதைப் பற்றிப் பேசவில்லை.*

*இதோ என் வீடு, நான் தங்கியிருக்குமிடம் வந்துவிட்டது! நாளை சந்திக்கலாம் அல்லவா? உங்கள் வசதிப்படிச் செய்வோம். மார்கென் தீவுக்கு நானே உங்களை அழைத்துச் செல்கிறேன். நீங்கள் அங்கு ஸைதொர்ஸேயைக் காணலாம். மெக்சிக்கோ சிட்டியில் நாளைக் காலை பதினொரு மணிக்கு நாம் சந்திக்கலாம். என்ன? அந்தப் பெண்ணா? ஓ! அதுவா? எனக்குத் தெரியாது. உண்மையில் எனக்குத் தெரியாது. அடுத்த நாள் மட்டுமல்ல அதற்கடுத்து வந்த நாட்களிலும் நான் செய்தித்தாள்களை வாசிக்கவில்லை.*



இது ஒரு பொம்மை நகரம் போல் தெரிகிறதா? இங்கு ரம்மியமான இயற்கைக் காட்சிகளுக்குப் பஞ்சமில்லை. உங்களை இந்தத் தீவுக்கு நான் அழைத்து வந்தது இயற்கைக் காட்சிகளைக் காட்டுவதற்காக அல்ல. இங்குள்ளவர்களின் தலையலங்காரம், மரக்காலணிகள், மீனவர்களின் அலங்கரிக்கப்பட்ட வீடுகள், அவற்றில் வார்னிஷ் வாடை சூழ அவர்கள் புகைத்துக்கொண்டிருக்கும் காட்சி, – இவற்றையெல்லாம் யார் வேண்டுமானாலும் உங்களுக்குக் காட்டலாம். மாறாக, இங்குள்ள முக்கியமான விஷயத்தை என்னைப் போல் சிலரால்தான் காட்ட முடியும்.

இதோ தடுப்பணை வந்துவிட்டது. இங்கிருக்கும் அழகான வீடுகளில் இருந்து முடிந்தவரை விலகிச் செல்ல இதை ஒட்டியே தொடர்ந்து செல்ல வேண்டும். கொஞ்சம் உட்காரலாமா? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? மோசமான சூழலில் அமைந்துள்ள இயற்கைக் காட்சிகளில் இதுதான் மிகவும் அழகானது. நான் சொல்வது சரியா? இடதுபுறம் உள்ள அந்தச் சாம்பல் குவியலைப் பாருங்கள். இங்கு இதை மணல் குன்று என்றழைக்கிறார்கள். அதோ, நம் வலது புறம் சாம்பல் நிற அணைக்கட்டு. நாம் நின்றிருக்கும் உயிரோட்டமில்லாத கடற்கரை, நம் எதிரில் நீர்த்துப்போன சலவைசோப்புத் திரவம் போன்ற கடல், நிறமற்ற நீரைப் பிரதிபலிக்கும் அகண்ட வானம் இவற்றை எல்லாம் கவனித்தீர்களா? உண்மையில் இது ஜீவனற்ற நகரமாக இருக்கிறது. சரிதானே? எல்லாமே படுக்கை வாக்கில், தட்டையாய், எவ்வித மேடு பள்ளமும் இல்லாமல். நிறமற்ற வெளி, உயிரற்ற சூழல்! இது அண்டமெங்கும் நிலவும் நிர்மூலம், நிரந்தர வெறுமை ஆகியவற்றின் பகிரங்கக் காட்சி இல்லையா? மனிதர்கள் யாரும் இல்லை. ஆம், எந்த உயிரினமும் இல்லை! தனிமையில் விடப்பட்டு இறுதியில் நீங்களும் நானும்தான் இவ்வுலகைப் பார்த்துக்கொண்டிருக்கிறோம். வானத்தில் உயிரோட்டம் உள்ளதா? நீங்கள் கூறுவது சரிதான். வானம் திரண்டு உட்குவிகிறது. பின், காற்றுப்பாதையைத் திறந்து மேகக் கதவுகளை மூடுகிறது. அதோ புறாக்களைப் பார்த்தீர்களா! ஹாலந்து நாட்டின் வானத்தைக் கவனித்தீர்களா? இது இலட்சக்கணக்கான புறாக்களால் நிறைந்ததாகும். அதிகமான உயரத்தில் இருப்பதால் புறாக்கள் நம் கண்களுக்குத் தெரியவில்லை. சிறகுகளை அசைத்தபடி அவை வானத்தை நோக்கி ஏறுகின்றன. அதே வேகத்தில் இறங்கவும் செய்கின்றன. இவ்வாறு இங்கும் அங்குமாகக் காற்றின் திசைக்கேற்றபடிச் செல்லும் சாம்பல்நிறச் சிறகுகளின் அடர்த்தியால் அந்த வானமெனும் சொர்க்கவெளி நிறைந்திருப்பதைப் பார்த்தீர்களா? ஆண்டு முழுவதும் புறாக்கள் அங்கே காத்திருக்கும். பூமிக்கும் மேல் அவை வட்டமடித்தபடிக் கீழே பார்க்கும். அவை இறங்கி வர விரும்பும். ஆனால் கடலையும் கால்வாய்களையும் தவிர இங்கு வேறு என்ன இருக்கிறது? விளம்பரப் பலகைகள் கொண்ட கூரைகள்தான் உள்ளன. புறாக்கள் வந்து உட்காருவதற்கென்று எந்த இடமுமில்லை.

நான் என்ன சொல்ல வருகிறேன் என்று உங்களுக்குப் புரியவில்லை, அப்படித்தானே? நான் சோர்வாக இருப்பது உண்மைதான். ஒப்புக்கொள்கிறேன். நான் சொல்லவரும் செய்தியை மறந்து போகிறேன். என் பேச்சு மிகவும் தெளிவாக இருக்கிறது என்று நண்பர்கள் சிலாகிப்பது வழக்கம். அந்தத் தெளிவு இப்பொழுது மறைந்துவிட்டது. நான் “என் நண்பர்கள்” என்று குறிப்பிடுவது ஒரு சம்பிரதாயத்துக்காக மட்டும்தான். எனக்கு இப்பொழுது நண்பர்களே கிடையாது. என்னுடன் இருப்பவர்கள் எல்லாம் குற்றத்துக்கு உடந்தையானவர்கள். பார்க்கப்போனால் அவர்களின் எண்ணிக்கை கூடிவிட்டது. மனித இனமே அவர்களால் ஆனதுதான். அந்த மனித இனத்தில் நீங்கள்தான் முதல் பிரதிநிதி. எப்போதும் எதிரில் இருப்பவர்தான் முதல் பிரதிநிதி. எனக்கு நண்பர்களே கிடையாது என்பதை எப்படி தெரிந்துகொண்டேன்? அது மிகவும் எளிது. அதை என்றைக்குக் கண்டுபிடித்தேன் தெரியுமா? ஒருநாள், தற்கொலை செய்து அவர்களிடம் நாடகமாடிப் பார்க்கலாம் என்று முடிவு செய்தேன். இதன்மூலம்

அவர்களை ஏதோ ஒருவகையில் தண்டிக்க எண்ணினேன். ஆனால் யாரைத் தண்டிப்பது? என் முடிவு சிலருக்கு ஆச்சரியத்தை வேண்டுமானால் ஏற்படுத்தக்கூடும். யாரும் தாங்கள் தண்டிக்கப்பட்டதாக உணரமாட்டார்கள். அன்றுதான் எனக்கு நண்பர்கள் என யாரும் அதுவரை இருந்ததில்லை என்று புரிந்துகொண்டேன். அப்படியே சில நண்பர்கள் இருந்திருந்தாலும் அவர்களால் எனக்கு எந்தப் பயனுமில்லை. எனவே, நான் தற்கொலை செய்துகொண்ட பிறகு அவர்கள் முகத்தில் ஏற்படும் மாற்றங்களைப் பார்க்க முடியுமென்றால் இந்த விளையாட்டில் ஒரு பயன் உண்டு. ஆனால் இந்த உலகம் இருண்மையானது. பொதுவாகச் சவப்பெட்டி, கனமாகவும் பிணத்தை மூடும் துணி மொத்தமாகவும் இருக்கும். ஆன்மாவின் கண்களை மறந்து விட்டேன் என்பது உண்மைதான். ஆன்மா என ஒன்றிருந்து அதற்குக் கண்களும் இருந்தால்! ஆனால் ஒன்றைப் புரிந்துகொள்ளுங்கள். ஆன்மாவைப் பற்றி உறுதியாக நமக்கு எதுவும் தெரியாது, நம்மால் எதுவும் சொல்லவும் முடியாது; முடியுமென்றால் ஏதாவதொரு வழியாவது கிடைத்திருக்கும். நாமும் நம் நடவடிக்கைகளில் கவனமாக இருப்போம். உங்கள் மரணத்தால் மட்டுமே உங்கள் நியாயங்கள், உங்கள் நேர்மை, உங்கள் துயரத்தின் ஆழம் ஆகியவைமீது மக்களுக்கு நம்பிக்கை ஏற்படும். நீங்கள் உயிரோடு இருக்கும்வரை, உங்கள்மீது சந்தேகம்தான் நீடிக்கும். அவ்வாறு சந்தேகப்பட அவர்களுக்கு உரிமையுண்டு. தாங்கள் நம்பத் தயங்குவதை நம்பும்படிச் செய்து அதன்மூலம் அவர்களை வியப்படையச் செய்வதில் அர்த்தம் உண்டு. இதுதான் இந்த தற்கொலைக் காட்சியில் கிடைக்கக்கூடிய ஒரே உறுதியான பயன். ஆனால் நீங்கள் உங்களை மாய்த்துக்கொண்ட பிறகு அவர்கள் உங்களை நம்பினால் என்ன நம்பாமல் போனால் என்ன? சிறிது நேரமே நீடிக்கக்கூடிய அவர்களது வியப்பையும் வருத்தத்தையும் ஏற்க நீங்கள் அங்கே இருக்கப்போவதிலலை. ஏனெனில் எல்லாரும் கனவு காண்பது போல் யாராலும் தங்கள் இறுதிச் சடங்கில் கலந்துகொள்ள முடியாது. எனவே உங்கள்மீதுள்ள சந்தேகப் பார்வை மறைய வேண்டுமென்றால் நீங்கள் மறைய வேண்டும். அதுவும் நிரந்தரமாக!

ஒருவகையில், இவ்வாறு இருப்பது நல்லது இல்லையா? அவர்களுடைய அலட்சியப்போக்கு நமக்கு மிகுந்த துன்பத்தைத் தரும். தான் விரும்பும் வசீகரமான வாலிபனை மணக்கவிடாமல் தடுத்த தன் அப்பாவைப் பார்த்துப் பெண் ஒருத்தி, “நீ இதற்குப் பதில் சொல்லியாக வேண்டும்” என்று கத்தினாள். பிறகு அவள் தற்கொலை செய்துகொண்டாள். ஆனால் அவளுடைய அப்பா எந்தப் பதிலையும் சொல்லவேயில்லை. அவள் இறந்து மூன்று ஞாயிற்றுக்கிழமைகள் கழிந்ததும் தனக்குப் பிடித்தமான பொழுதுபோக்கில் ஈடுபடத் தொடங்கினார். அதாவது, தூரத்திலிருந்து வலைபோட்டு ஆற்றில் மீன்பிடித்துக்கொண்டிருந்தார். இப்படி செய்வது சோகத்தை மறப்பதற்காக என்று அவர் சொல்லிக் கொண்டார். அவர் நினைத்தது சரிதான். நடந்ததை அவர் மறந்துவிட்டார். உண்மையில், அப்படி அவர் மறக்காமல் போயிருந்தால்தான் ஆச்சரியமாக இருந்திருக்கும். உங்கள் மனைவியைத் தண்டிப்பதாக நினைத்துக்கொண்டு நீங்கள் இறந்துவிடுவதாக வைத்துக்கொள்வோம். உண்மையில் அதன்மூலம் அவளுக்குச் சுதந்திரம்தான் தருகிறீர்கள். அப்படியொரு நிலையை ஏற்படுத்தாமல் இருப்பது நல்லது. மேலும், உங்கள் செயலுக்குச் சில காரணங்களை மற்றவர்கள் கற்பிக்கும் அபாயமும் இருக்கிறது. என்னைப் பொறுத்தவரை, அவர்கள் பேசிக்கொள்ளப்போவது இங்கே எனக்குக் கேட்கிறது. “அவன் ஏன் தற்கொலை செய்துகொண்டான் என்றால் அவனால் ஒன்றைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை . . .” பார்த்தீர்களா, காரணம் கண்டுபிடிப்பதில்தான் மனிதர்களிடம் எவ்வளவு கற்பனைப்பஞ்சம்! ஒருவன் தற்கொலை செய்துகொள்வதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கும் என்றுதான் எப்பொழுதுமே அவர்கள் நினைப்பார்கள். ஆனால் இரண்டு காரணங்களுக்காகக்கூட ஒருவன் தற்கொலைசெய்து கொள்ளலாமே. அதுதான் அவர்கள் மூளைக்கு எட்டாது. எனவே, தானாக முன்வந்து இறப்பதில் என்ன பயன்? உங்களைப் பற்றிய மற்றவரின் கருத்து நீங்கள் விரும்பியவாறு அமைவதற்காக உங்கள் உயிரைத் தியாகம் செய்வதில் என்ன பயன்? நீங்கள் இறந்துபோன பின்னர், நீங்கள் இல்லாததைப் பயன்படுத்திக்கொண்டு

உங்கள் செய்கைக்கு முட்டாள்தனமான அல்லது அநாகரிகமான காரணங்களைக் கண்டுபிடிப்பார்கள். பொதுவாகவே உயிரை அர்ப்பணிப்பவர்கள் ஒன்றை நினைவில் கொள்ளவேண்டும். தங்களை மக்கள் மறந்துவிடுவர், பரிகாசம் செய்வர், பயன்படுத்திக்கொள்வர் என்பது மட்டுமின்றி ஒருபோதும் அவர்களைப் புரிந்துகொள்ளவே மாட்டார்கள் என்பதையும் அறிந்திருக்க வேண்டும்.

நேராகப் பிரச்சினைக்கு வருவோம். நான் வாழ்க்கையை நேசிப்பவன். அதுதான் என் உண்மையான பலவீனம். வாழ்க்கை இல்லாத வெறுமை நிலையை என்னால் கற்பனை செய்து பார்க்க முடியாது. அந்த அளவிற்கு நான் வாழ்க்கையை நேசிக்கிறேன். அத்தகைய வேட்கை, கீழ்த்தட்டு மக்களின் பண்பு என்று நினைக்கிறீர்களா? மேல்தட்டு மக்கள் என்பவர்கள் தமக்கும் தம் வாழ்க்கைக்கும் இடையே சிறிதளவாவது இடைவெளி வைத்துதான் சிந்திப்பார்கள். அவசியமானால் அவர்கள் இறப்பார்கள். வளைந்து கொடுப்பதற்குப் பதிலாக உடைந்துபோவார்கள். ஆனால் நானோ வளைந்து கொடுப்பேன். ஏனெனில் நான் தொடர்ந்து என்னை நேசிக்கிறேன். அது போகட்டும். நான் உங்களுக்கு இதுவரை சொல்லி வந்ததிலிருந்து எனக்கு எதுமாதிரியான எண்ணம் ஏற்பட்டிருக்கும் என்று நினைக்கிறீர்கள்? என்மீதே எனக்கு வெறுப்பு உண்டாகியிருக்கும் என்று நினைக்கிறீர்களா? அதுதான் இல்லை. மற்றவர்கள் மீதுதான் எனக்கு வெறுப்பு உண்டானது. உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால், என் தோல்விகள் எவையென்று நான் நன்றாக அறிவேன். அவற்றுக்காக நான் வருத்தப்படவும் செய்வேன். இருந்தாலும், ஓரளவு நியாயமான பிடிவாதத்துடன் தொடர்ந்து அவற்றை மறந்தும் வந்திருக்கிறேன். என் எண்ணம் முழுவதும் மற்றவர்கள்மீது குற்றம்சாட்டுவதிலேயே மூழ்கியிருந்தது. நிச்சயமாக இது உங்களுக்கு அதிர்ச்சியாக இருக்கும். அப்படித்தானே? இது முன்னுக்குப் பின் முரணாக இருப்பதாக நினைக்கிறீர்களா? முரண்பாட்டுக்கும் இதற்கும் எவ்விதத் தொடர்புமில்லை. எவ்வாறு நழுவுவது என்றுதான் பார்க்கவேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக, ஆம்! எல்லாவற்றுக்கும் மேலாக, ஒருவரின் மதிப்பீட்டிலிருந்து எப்படி தப்பிப்பது என்பதுதான் கேள்வி. தண்டனையைத் தவிர்ப்பதைப் பற்றி நான் பேசவில்லை. ஏனெனில் குற்றம் சாட்டாமல் தரும் தண்டனையைத் தாங்கிக்கொள்ளலாம். எல்லாம் 'போதாத காலம்' என்று சொல்லிவிட்டுப் போய்விடலாம். நான் தண்டனையிலிருந்து தப்பித்துக் கொள்ள நினைக்கவில்லை. குற்றஞ்சாட்டப்பட்டுக்கொண்டே இருப்பதிலிருந்துதான் தப்பிக்க நினைக்கிறேன்.

ஆனால் அவ்வாறு எளிதில் யாரையும் ஏமாற்றிவிட முடியாது. இப்பொழுதெல்லாம், இனப் பெருக்கத்துக்கு எப்படி தயாராக இருக்கிறோமோ, அப்படித்தான் மற்றவர் குறித்த மதிப்பீடு செய்யவும் இருக்கிறோம். ஒரே வித்தியாசம். இதில் குறை ஏதேனும் ஏற்பட்டுவிடுமோ என்ற பயமில்லை. இதில் சந்தேகம் இருந்தால் நான் சொல்வதைச் செய்து பாருங்கள். ஆகஸ்ட்டு மாதத்தில் நம்நாட்டின் பரந்தமனப்பான்மை கொண்ட தோழர்கள் தங்கள் அலுப்பைப் போக்கிக்கொள்ளக் கோடைக்காலத் தங்கும் விடுதிகளுக்கு வருவர். சாப்பிடும்போது அவர்களுக்குள் என்ன பேசிக்கொள்கின்றனர் என்று கொஞ்சம் கேளுங்கள். உங்கள் சந்தேகம் தீரும். இன்னமும் உங்களால் ஒரு முடிவுக்கு வர முடியவில்லையா? அப்படியானால் நம் காலத்தின் பெரிய எழுத்தாளர்களின் படைப்புகளை வாசித்துப் பாருங்கள். அதுவும் முடியவில்லையென்றால், உங்கள் சொந்தக் குடும்பத்தையே கொஞ்சம் கவனித்துப் பாருங்கள். உங்களுக்குச் சில உண்மைகள் விளங்கும். என் இனிய தோழரே, நம்மை எடைபோட, அவர்களுக்குக் கொஞ்சம்கூட இடம் கொடுக்கக்கூடாது. இல்லையென்றால் அவ்வளவுதான் நம்மைக் கூறுபோட்டு விற்றுவிடுவார்கள். மிருகங்களைப் பழக்குபவனிடம் இருக்கும் அதே எச்சரிக்கை உணர்வை நாமும் கையாளவேண்டிய கட்டாயம் உள்ளது. முகத்தை மழித்துக் கொள்ளும்போது துரதிர்ஷ்டவசமாக ஏற்பட்ட வெட்டுக் காயத்துடன் மிருகக்கூண்டுக்குள் அவன் நுழைய நேர்ந்தால் கொடிய மிருகங்களுக்கு நல்ல வேட்டைதானே! இந்த விஷயத்தைத் திடீரென எப்பொழுது கண்டுபிடித்தேன் தெரியுமா? நான்

அந்த அளவு விரும்பக்கூடியவன் இல்லையோ என்ற சந்தேகம் வந்த கணம்தான் அதைக் கண்டுபிடித்தேன். அப்பொழுதிலிருந்து நான் அனைத்தையும் சந்தேகப்பட ஆரம்பித்தேன். மிருகத்தைப் பழக்குபவன் போல் என்னிடம் இரத்தம் லேசாகக் கசிந்துகொண்டிருந்தால் நான் தப்பிக்க வழியில்லை. அவர்கள் என்னை அப்படியே விழுங்கி விடுவர்.

பார்க்கப்போனால், என் காலத்தில் வாழ்ந்தவர்களுடன் நான் கொண்டிருந்த உறவும் எச்சரிக்கை உணர்வோடு கூடியதுதான். எனவே அவ்வுறவு ஏதோ ஒருவகையில் ஒன்றாமல் இருந்தது. என் நண்பர்களிடம் எந்த மாற்றமும் இல்லை. என்னிடம் உள்ள இணக்கத்தையும் பாதுகாப்புணர்வையும் வாய்ப்பு கிடைத்தபோதெல்லாம் புகழ்ந்த வண்ணம் இருந்தனர். மாறாக, என்னிடம் நிறைந்திருந்த தடுமாற்றங்கள், அலங்கோலங்கள் ஆகியவற்றை நான் அறிந்திருந்தேன். என்னை மிகவும் பலவீனமானவனாகவும் பொதுமக்களின் குற்றச்சாட்டுக்கு எளிதில் ஆளாகக்கூடியவனாகவும் உணர்ந்தேன். என் பார்வையில், இதுவரை மரியாதைக்குரியவர்களாக நினைத்த மனிதர்கள் இப்போது அப்படியில்லை. என்னை மையமாகக் கொண்டு இயங்கிய அந்த வட்டம் உடைந்துபோனது. அவர்கள் எல்லாரும் நீதிபதிகளின் வரிசையில் அமர்ந்திருந்தனர். என்னிடம் மதிப்பீடு செய்யப்பட ஏதோ உள்ளது என்று உணர்ந்த மறுகணமே, மதிப்பீடு செய்ய வேண்டும் என்னும் கட்டுப்படுத்தமுடியாத வேட்கை அவர்களிடம் உள்ளது எனக்குத் தெரிந்துவிட்டது. ஆம், அதற்கு முன் இருந்தவர்களைப் போன்றுதான் அவர்கள் அங்கே இருந்தனர். ஆனால் இக்காலத்தில் சிரித்துக்கொண்டு இருந்தனர். ஒருவேளை இப்படி இருக்கலாம். நான் சந்தித்த அனைவரும் என்னைப்பார்க்கும்போது எழும் தங்கள் சிரிப்பை மறைப்பதாக எனக்குத் தோன்றியது. அந்தக் காலகட்டத்தில் எல்லாருமே என் காலை வாரிவிட்டதாகக்கூட நினைத்தேன். பொது இடங்களுக்குச் சென்றபோது இரண்டு அல்லது மூன்றுமுறை நான் தடுமாறியது உண்மை. ஒருமுறை தரையிலேயே விழுந்துவிட்டேன் . நான் வேகமாகச் சுதாரித்துக்கொண்டு எழுந்தேன்; சிந்தனையாளர் தெக்கார்த்தின் பகுத்தறிவுப் பாசறையில் வளர்ந்த பிரெஞ்சுக்காரனான எனக்கு இத்தகைய விபத்துகளுக்கெல்லாம் ஒருவித அசம்பாவிதம்தான் காரணம் என்று தெளிவாகத் தெரிந்தது. இருப்பினும், என்னுள் குடிகொண்டிருந்த சந்தேகம் மட்டும் என்னைவிட்டுப் போகவில்லை.

நான் முழுமையாக விழித்துக்கொண்டபோது, எனக்கு எதிரிகள் இருந்ததைக் கண்டுபிடிப்பது கடினமாக இல்லை. என் தொழிலில் மட்டுமின்றி மக்களுடன் பழகும்போதும் அத்தகைய எதிரிகள் இருப்பதைக் கண்டுகொண்டேன். சிலரை எதிரியாகும்படியான கட்டாயத்திற்குள் உட்படுத்தினேன். இன்னும் சிலரையும் நான் கட்டாயப்படுத்தியிருக்க வேண்டும். எப்படியும், இவையெல்லாம் நடைமுறையில் உள்ளவைதாம். இதை நான் கண்டுபிடித்தபோது எனக்கு அது அதிக வருத்தமளிக்கவில்லை. நான் அரிதாகச் சந்தித்தவர்கள் அல்லது எனக்கு முற்றிலும் அறிமுகமில்லாதவர்களில் சிலரும் என் எதிரிகளாக இருந்தனர். இதை ஏற்றுக்கொள்வதுதான் மிகவும் கடினமாகவும் வேதனையாகவும் இருந்தது. என் அப்பாவித்தனத்தை எடுத்துக்காட்டும் பல சம்பவங்களை உங்களுக்கு ஏற்கெனவே கூறியிருக்கிறேன். என்னை அறியாதவர்கள் என்னுடன் பழகிப் பார்த்தால் அவர்களால் என்னை விரும்பாமல் இருக்க முடியாது என்பதையும் அப்பாவித்தனமாக நினைத்துக்கொண்டேன். அதுதான் இல்லை. குறிப்பாக, என்னை ஓரளவே தெரிந்தவர்களிடம்தான் என்மேல் விரோதம் ஏற்பட்டிருக்கிறது. எனக்கோ அவர்களை யார் என்று தெரியாது. நான் ஏதோ வாழ்வின் இன்பத்தை எல்லாம் மொத்தமாகக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு முழுமையான வாழ்வை அனுபவித்தேன் என்ற சந்தேகம் அவர்களுக்கு நிச்சயமாக இருந்திருக்கும். அதை அவர்களால் சகித்துக்கொள்ள முடியாது. வெற்றியடைந்தோம் என்று தோன்றினால், அந்த வெற்றியைப் பகிரங்கமாக வெளிப்படுத்தினால் எந்தக் கழுதைக்கும் கோபம் வரும். தவிர, என் வாழ்க்கையில் சுகமளிக்கும் உறவுகளுக்குப் பஞ்சமில்லை. போதிய நேரம் எனக்குக் கிடைக்காததால்

மேலும் சுகம் சேர்க்க முன்வந்தவர்களை மறுத்துவிட்டேன். அதே காரணத்துக்காக, இப்படி மறுத்ததையும் உடனடியாக மறந்துவிட்டேன். அவ்வாறு முன்வந்தவர்களின் வாழ்க்கை திருப்திகரமானதாக இல்லை. இதே காரணத்தால், நான் மறுத்ததை அவர்கள் ஒருபோதும் மறந்ததில்லை.

எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்க்கும்போது ஒன்று தெளிவாகிறது. உதாரணத்துக்காக எடுத்துக்கொண்டால் பெண்கள் விஷயத்தில் எனக்கு அதிகமான இழப்பு ஏற்பட்டிருக்கிறது. அவர்களுக்காக நான் ஒதுக்கிய அதே அளவு நேரத்தை ஆண்களுக்கு ஒதுக்கமுடியவில்லை. இதனால் ஆண்கள் என்னை ஒருபோதும் மன்னிக்கத்தயாராக இல்லை. இதிலிருந்து மீண்டுவர ஏதாவது வழி இருக்கிறதா? உங்கள் இன்பத்தையும் வெற்றியையும் தாராளமாகப் பங்கிட்டுக்கொள்ளச் சம்மதித்தால்தான் உங்களை மற்றவர்கள் பொறுத்துக்கொள்வர். ஆனால் மகிழ்ச்சியாக இருக்கவேண்டுமானால் மற்றவர்களை அதிகமாகப் பொருட்படுத்தக் கூடாது. இவ்வாறாக, தப்பிக்க வழி ஏதுமில்லை. மகிழ்ச்சியாக இருந்தால் உங்கள்மீது விமர்சனம் நிகழும். குற்றத்திலிருந்து விடுவிக்கப்பட்டால் பரிதாபம்தான் மிஞ்சும். இதில் ஏதாவது ஒன்று நடக்கும். என் விஷயத்தில், பெருமளவில் அநீதி இழைக்கப்பட்டது. எனக்கு எப்பொழுதோ கிடைத்த வெற்றிகளுக்காகத் தண்டிக்கப்பட்டிருக்கிறேன். பொதுவாக யாரும் எதுவும் சொல்லமாட்டார்கள் என்ற மாயையில் நான் நீண்ட நாட்களாக வாழ்ந்துவந்தேன். ஆனால் நான் கவனக்குறைவாகச் சிரித்துக் கொண்டிருந்தபோது எல்லாத் திசைகளில் இருந்தும் விமர்சனங்கள், அம்புகள், கேலிகள் என்று பல தாக்குதல்களுக்கு உள்ளானேன். நான் விழித்துக்கொண்டபோது எனக்குத் தெளிவு கிடைத்தது. எல்லாக் காயங்களும் ஒரே நேரத்தில் ஏற்படவே, திடீரென என் ஆற்றல் முழுவதையும் இழந்தேன். அப்பொழுது, உலகமே என்னைப் பார்த்துச் சிரிக்க ஆரம்பித்தது.

நாம் எல்லோரும் உண்மையில் வாழ்க்கையை வாழாதவர்கள், அதாவது சாதுக்களைத் தவிர, இத்தகைய நிலையை எந்த மனிதனாலும் தாங்கிக்கொள்ள முடியாது. அயோக்கியத்தனம் மட்டுமே தற்காப்பு ஆயுதமாகும். எனவே, தங்களை யாரும் விமர்சனம் செய்துவிடாமல் இருக்க மற்றவர்களை விமர்சனம் செய்ய மக்கள் முந்திக்கொள்கின்றனர். வேறு என்ன செய்யச் சொல்கிறீர்கள்? மனிதனுக்கு மிக இயற்கையாகத் தோன்றும் எண்ணம் எது தெரியுமா? 'தான் நிரபராதி' என்னும் என்னம்தான் அது. அந்த எண்ணம் அவன் பிறவியிலேயே அமைந்தது போல் இருக்கும். இந்தக் கோணத்தில் பார்த்தால், நாமெல்லாம் நாஜி சித்தரவதை முகாமான புக்கென்வால்டில் நடந்துகொண்ட அந்தப் பிரெஞ்சு இளைஞனைப் போன்றவர்கள்தான். எழுத்தர் என்று நினைத்து அவன் அங்கிருந்த ஒருவரிடம் புகார் கொடுத்துள்ளான். அவர் ஒரு கைதி, தான் அங்கு வந்து சேர்ந்ததைத்தான் அவர் பதிவு செய்துகொண்டிருந்தார் என்பது அந்த இளைஞனுக்குத் தெரியாது. "என்ன புகாரா?" என்று கேட்டபடி அந்த ஆளும் அவருடைய நண்பர்களும் சிரித்தனர். "தம்பி, இதனால் பலனில்லை. புகாரெல்லாம் இங்கே கொடுக்க முடியாது" என்றனர். அதற்கு அந்த இளைஞனோ, " அய்யா! புரிந்துகொள்ளுங்கள். என் விஷயம் முற்றிலும் வேறானது. நான் நிரபராதி, குற்றமற்றவன்"என்று சொன்னான்.

நாம் எல்லாருமே வெவ்வேறானவர்கள்தான். ஆனால் நாம் அனைவரும் எதையாவது எதிர்த்து வாதிடவே விரும்புகிறோம். என்ன விலை கொடுத்தாவது நாம் நிரபராதி என்று நிறுவப்பார்க்கிறோம். இதற்காக ஒட்டுமொத்த மனித இனத்தின் மீதும், ஏன் அந்தக் கடவுளின் மீதும் பழிபோடத் தயங்க மாட்டோம். அறிவாளியாகவும் இரக்கக் குணமுள்ளவனாகவும் மாற ஒருவன் எடுத்த முயற்சியைப் பாராட்டினால் அவன் அதிகமாக மகிழ்ச்சியடையமாட்டான். மாறாக, அவனுக்கு இயல்பாகவே அமைந்த தாராளக் குணத்தைப் போற்றும்போது அவன் முகம் பிரகாசமடையும். இதற்கு நேர் எதிராக, ஒரு குற்றவாளியிடம், அவன் செய்த குற்றம், அவனுடைய இயல்பால், குணத்தால் விளைந்ததல்ல,

துரதிர்ஷ்டவசமான சூழ்நிலைகளால் நேர்ந்ததுதான் என்று சொன்னால் அவன் கடைசிவரை உங்களுக்கு நன்றியுள்ளவனாக இருப்பான். அவனுக்கான வழக்குரைஞர் இவ்வாறு வாதாடும்போது, அழுவதற்கு இந்தக் கட்டத்தைத்தான் குற்றவாளி பயன்படுத்திக் கொள்வான். இருந்தபோதிலும் பிறவியிலேயே நேர்மையானவனாகவும் அறிவாளியாகவும் இருப்பதில் எவ்விதச் சிறப்புமில்லை. இயல்பாகவே குற்றவாளியாக இருப்பதற்கு எவ்வாறு ஒருவன் நிச்சயமாகப் பொறுப்பேற்க முடியாதோ, அதேபோல் சந்தர்ப்பவசத்தால் குற்றவாளியானதற்கும் அவன் பொறுப்பேற்க முடியாது. எனவே இந்த அயோக்கியர்கள் கருணையை எதிர்பார்க்கின்றனர். இவ்வாறு செய்த குற்றத்துக்குப் பொறுப்பேற்காமல் இருக்கும் போக்கு அவர்களிடம் இருக்கும். தானாகவோ அல்லது சந்தர்ப்பச் சூழ்நிலையினாலோ நடந்தது என்று சொல்லி வெட்கமில்லாமல் குற்றத்தை நியாயப்படுத்த அவர்கள் முயல்வார்கள். இவற்றுக்குள்ளேயே ஒரு முரண்பாடு இருந்தாலும் இவர்கள் இப்படி நடந்துகொள்வர். எது எப்படியோ, அவர்களுக்கு வேண்டியதெல்லாம் தாங்கள் குற்றமற்றவர்களாகக் கருதப்பட வேண்டும்; மேலும் அவர்களுடைய பிறவியால் பெற்ற நல்லியல்புகள் குறித்து யாரும் சந்தேகத்தை எழுப்பக்கூடாது; அவர்கள் செய்யும் தவறுகள் தற்செயலாக நேர்ந்தவை; அவை எப்பொழுதுமே தற்காலிகமானவை என்றே கருதப்பட வேண்டும். நான் உங்களிடம் ஏற்கெனவே கூறியதைப்போல் இது விமர்சனத்தை ஏமாற்றும் வேலை. அப்படி ஏமாற்றுவது கடினம். மேலும் தன் இயல்பை ஒரே நேரத்தில் போற்றவும் மன்னிக்கவும் செய்வது பக்குவமாகக் கையாளப்படவேண்டிய ஒன்று. எனவே அவர்கள் எல்லாரும் பணக்காரர்களாக மாற முயல்கின்றனர். ஏன் அப்படி? இதை எப்பொழுதாவது சிந்தித்துப் பார்த்திருக்கிறீர்களா? சந்தேகமென்ன? எல்லாமே அதிகாரத்துக்காகத்தான். குறிப்பாகப் பணபலம், உடனடியாக நிகழவுள்ள விமர்சனத்திலிருந்து தப்பிக்கக்கூடிய பாதுகாப்பைத் தரும். மெட்ரோ ரயில் கூட்டத்திலிருந்து விடுவித்து உங்களைப் பளபளக்கும் காருக்குள் அடைத்துவிடும். பாதுகாப்பான பெரிய பூங்காக்களில் தனிமையில் இருக்கவிடும். படுக்கை வசதி கொண்ட ரயில் பெட்டியிலோ அல்லது சொகுசு ரயில் பெட்டியிலோ தனிமைப்படுத்திவிடும். ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். பணபலம் எப்பொழுதும் குற்றங்களிலிருந்து விடுதலை அளிக்கும் என்று சொல்லமுடியாது. தண்டனையை ஒத்திவைக்கவே உதவும். ஆனாலும் இத்தகைய வாய்ப்பு எப்பொழுது கிடைத்தாலும் நல்லதுதான்.

குறிப்பாகத் தங்களிடம் உண்மையைப் பேசுமாறு நண்பர்கள் உங்களிடம் கேட்கும்போது அவர்களை நம்பாதீர்கள். தங்களைப்பற்றி உயர்ந்த எண்ணம் கொண்டவர்கள் அவர்கள். நீங்கள் அவர்களிடம் உண்மையைப் பேசுவேன் என்று சொல்வதன் மூலம் தங்கள் எண்ணத்தைப் பாதுகாக்கக் கூடுதலான உறுதிமொழி ஒன்றையும் நீங்கள் தருவது போல் கருதுவார்கள். உண்மை பேசுவதை எவ்வாறு நட்புக்கு நிபந்தனையாக ஏற்க முடியும்? எந்த விலை தந்தாவது உண்மையை உறுதி செய்ய வேண்டும் எனும் விருப்பம் எத்தகைய ஆசை தெரியுமா? அது எதையும் விட்டுவைக்காது. அதேபோல் எதுவும் அதனிடம் பணிந்துவிடும். அது ஒரு தீய பழக்கம். சில சமயங்களில் அது ஒரு வசதி அல்லது சுயநலம். எனவே, இதுபோன்றதொரு சூழ்நிலை ஏற்பட்டால் தயக்கம் வேண்டாம். உண்மை கூறுவதாகச் சத்தியம் செய்யுங்கள். ஆனால் உங்களால் முடிந்த அளவுக்குப் பொய் சொல்லுங்கள். இதன்மூலம்அவர்களது ஆழ்மனதில் உள்ள விருப்பத்தைத் திருப்தி செய்வதோடு உங்கள் பாசத்தை இரட்டிப்பாக நிரூபிக்க முடியும்.

நம்மைவிட மேல் நிலையில் இருப்பவர்களிடம் நாம் செய்த தவறுகளை அரிதாகவே பகிர்ந்துகொள்வோம். அவர்களுடன் இருப்பதைத் தவிர்ப்பதற்கு அதிகக் கவனம் செலுத்துவோம். மாறாக, பெரும்பாலான நேரங்களில், நம்மைப் போன்ற நிலையில் உள்ளவர்களிடம் நம் பலவீனங்களைப் பகிர்ந்துகொள்வதோடு, நம் தவறுகளைச் சொல்லி வருந்துவோம். ஆனால் நம்மை நாமே திருத்திக்கொள்வதையோ நம் நிலையை மேன்மையடையச் செய்வதையோ விரும்புவதில்லை. ஏனெனில்

முதலில் நம்மிடம் குறைகள் உள்ளதாக அவர்கள் செய்யும் மதிப்பீட்டுக்கு உட்பட்டாக வேண்டும் என்ற ஆபத்து உள்ளது. நாம் விரும்புவதெல்லாம் எது தெரியுமா? மற்றவர்கள் நம்மீது பரிதாபம் காட்டுவதோடு நாம் தேர்ந்தெடுக்கும் பாதையில் தொடர்ந்து செல்ல ஊக்கமளிக்க வேண்டும் என்பதேயாகும். சுருக்கமாகச் சொன்னால், நாம் குற்றமற்றவர்களாகத் தோன்ற வேண்டும். ஆனால் நம் மீதுள்ள களங்கத்தைப் போக்குவதற்கான எவ்வித முயற்சியை எடுக்கவும் நாம் விரும்புவதில்லை. புலம்பிக்கொண்டிருக்கும் மனப்பான்மையும் போதுமான அளவுக்கு இல்லை. நம்மிடம் கெடுதல் செய்யக் கூடிய சக்தியும் இல்லை. அதே சமயம் நன்மை செய்யக் கூடிய சக்தியும் இல்லை. உங்களுக்கு இத்தாலிய அறிஞர் தாந்தேயைத் தெரியுமா? உண்மையாகவா? நல்லது. கடவுளுக்கும் சாத்தானுக்கும் இடையில் உள்ள போரில் நடுநிலை வகிக்கும் தேவதைகளை தாந்தே உருவாக்கியிருப்பது உங்களுக்குத் தெரியும். அவர்களை லிம்போ என்னும் நரகத்தின் முன்வாசல் அருகில் நிறுத்துகிறார். நண்பரே, நாமும் அத்தகைய நரகத்தின் முன்வாசலில்தான் இருக்கிறோம்.

பொறுமை வேண்டுமா? நீங்கள் சொல்வது சரிதான் என்று ஒப்புக்கொள்கிறேன். நியாயத் தீர்ப்பு வரும்வரை காத்திருக்க நமக்குப் பொறுமை வேண்டும். சரியாய்ச் சொன்னீர்கள். இங்குதான் நாம் அவசரப்படுகிறோம். தண்டனை கோரும் நீதிபதியாக நானாகவே மாறிக்கொள்ளுமாறு நிர்ப்பந்திக்கப்படும் அளவிற்கு அந்த அவசரம் இருக்கிறது. எனினும், நான் கண்டுபிடித்த விஷயங்களைப் பெரிதுபடுத்தாமல், என் சமகாலத்தவர்களின் சிரிப்பைச் சமாளிக்க வேண்டிய கட்டாயத்தில் இருந்தேன். எனக்கு அழைப்பு விடுக்கப்பட்ட அந்த இரவு முதல் (ஆம், அது உண்மையிலேயே எனக்கு வந்த அழைப்புதான்) பதில் சொல்ல வேண்டிய கட்டாயம் எனக்கு இருந்தது. அல்லது ஒரு பதிலைத் தேடும் முயற்சியை மேற்கொள்ள வேண்டிய கட்டாயம் எனக்கு இருந்தது. அது ஒன்றும் எளிதானதல்ல. வெகுகாலமாக நான் திசைதெரியாமல் அலைந்துகொண்டிருந்தேன். தொடர்ந்து ஒலித்துவந்த அந்தச் சிரிப்பும் சிரிப்பவர்களும், எனக்குள்ளேயே என்னைத் தெளிவாகப் பார்க்கும் வழியைக் கற்றுத் தந்தனர். இறுதியில் நான் எளிதில் புரிந்துகொள்ள முடியாதவன் என்பதை உணர்ந்தேன். சிரிக்காதீர்கள். நீங்கள் நினைக்குமளவுக்கு அந்த உண்மை அடிப்படையானது அல்ல. ஏனைய உண்மைகள் அனைத்தையும் கண்டுபிடித்த பிறகு கிடைக்கும் உண்மைகளைத்தான் நாம் அடிப்படை உண்மைகள் என அழைக்கிறோம். அவ்வளவுதான்.

இதற்கிடையில், நீண்ட கால சுய அலசலின் முடிவில், மனித இனத்தின் அடிப்படையான இரட்டை வேடத்தை இனங்கண்டுகொண்டேன். பின்னர், என் நினைவலைகளில் தேடிப்பார்த்து ஒன்றைப் புரிந்து கொண்டேன். என் தன்னடக்கம்தான் என்னை வெளிச்சம் போட்டுக் காட்ட உதவியது; என் எளிமைதான் என் வெற்றிக்கு வழிவகுத்தது; என் நன்னடத்தைதான் மற்றவர்களை ஒடுக்க உதவியது. வன்முறை இல்லாத வழியில் நான் போர்புரிந்துவந்தேன். இறுதியில், பற்றற்று இருப்பதாகப் பாவனை செய்தபடியே நான் ஆசைப்பட்டதையெல்லாம் பெற்று வந்தேன். உதாரணமாக, என் பிறந்தநாள் கண்டுகொள்ளப்படாமல் போனதற்காக அங்கலாய்க்கமாட்டேன். இவ்விஷயத்தில் நான் இரகசியம் காப்பது மக்களுக்கு ஆச்சரியத்தைக் கூட ஏற்படுத்தும். ஆனால், நான் பற்றற்று இருப்பதற்கான காரணம் மேலும் இரகசியமானது. என்னை மற்றவர்கள் மறக்க வேண்டும் என்று ஏங்கினேன். அப்பொழுதுதான் நானே எனக்குள் அங்கலாய்த்துக்கொள்ளமுடியும். எனக்கு நன்றாகத் தெரிந்த அந்த மகத்தான நாள் வருவதற்குப் பல நாட்கள் முன்பாகவே தயாராகிவிடுவேன். அந்த நாளை மறந்துபோகக்கூடியவர்களாகச் சிலரை நான் எண்ணியிருப்பேன். இதுதொடர்பாக அவர்களுடைய கவனத்தையும் நினைவையும் தூண்டக்கூடிய எதுவும் அவர்களுக்கு எட்டாமல் பார்த்துக்கொள்வேன். ஒருநாள், என் குடியிருப்பில் வசித்த நண்பர் ஒருவரின் நாள்காட்டியையே மாற்றத் திட்டமிடும் அளவுக்கு என் சிந்தனை சென்றது. என் தனிமை

முழுமையாக உறுதியான பின்பு, அதீதமான சுய பச்சாதாபத்தில் எழும் சோகத்தின் சுகத்தை என்னால் முழுமையாக அனுபவிக்க முடியும்.

இவ்வாறாக என் நல்லியல்புகள் அனைத்துக்கும் அதிகம் பாதிக்காத மறுபக்கம் ஒன்று இருந்தது. வேறு கோணத்தில் பார்த்தால், என் குறைகள் எல்லாம் எனக்கு அனுகூலமாக மாறியது உண்மைதான். உதாரணமாக, என் வாழ்க்கையில் குற்றம் நிறைந்த பகுதியை மறைக்கவேண்டிய கட்டாயம் இருந்தது. அது எனக்கு மற்றவர்களிடமிருந்து விலகியிருப்பதைப் போன்ற தோற்றத்தைத் தந்தது. ஆனால் மக்கள் அதனை நல்லியல்பு என்று தவறுதலாகக் கருதினர். எல்லாரும் என்னை விரும்பக் காரணம் என்னிடம் இருந்த அலட்சியப்போக்காகும். பரந்த மனப்பான்மையுடன் நான் நடந்துகொள்ளும்போது என் சுயநலம் உச்சத்தை அடையும். நான் இதோடு நிறுத்திக்கொள்கிறேன். இப்படி அதிக அளவில் ஒத்த விஷயங்களை அடுக்கிக்கொண்டுபோனால் என் வாதம் வலுவிழந்துபோகும். இறுதியில், நான் முகத்தை இறுக்கமாக வைத்துக் கொண்டாலும் மதுவோ மாதுவோ கிடைக்கும்போது ஏற்காமலிருக்க என்னால் முடிவதில்லை. நான் துடிப்பும் ஆற்றலும் கொண்டவனாகக் கருதப்பட்டேன். ஆனால், கட்டிலில் வசதியாக ஓய்வெடுப்பதுதான் எனக்குச் சுகத்தைத் தந்தது. என் விசுவாசத்தைப் பகிரங்கமாக வெளிப்படுத்தி வந்தேன். ஆனால் நான் நேசித்த பெண்கள் விஷயத்தில், இறுதியில் துரோகம் செய்யாமல் யாரையும் விட்டதில்லை என்று நினைக்கிறேன். என் துரோகங்கள் எந்தவிதத்திலும் என் விசுவாசத்துக்கு இடையூறாக இல்லை என்பதும் உண்மைதான். அலட்டிக்கொள்ளாத என் அணுகுமுறையின் பலனாகக் கணிசமான அளவுக்கு வேலைகளை முடித்துவந்தேன். எனக்கு மகிழ்ச்சியளிக்கக் கூடியதாக இருந்ததால், என் அருகில் உள்ளவருக்கு உதவிசெய்வது தொடர்ந்தது. ஆனால் இந்தச் செயல்களைப் பலமுறை யோசித்துப்பார்த்தபோது எனக்குப் பெயரளவிலான ஆறுதலையே அவை தந்தன எனத் தெரிகிறது. சில காலைவேளைகளில், என் நிலையை முழுமையாகப் புலனாய்வுசெய்தபோது, கடைசியில் என்னிடம் உதாசீனக் குணமே மேலோங்கி இருந்தது என்றும் முடிவுக்கு வந்தேன். எனக்கு அதிகமாக உதவியவர்களைத்தான் நான் அதிகமாக உதாசீனம் செய்துவந்தேன். மரியாதையாகவும் தோழமையுணர்வுடனும் பார்வையற்றவர்களுக்கு உதவியபோதும் நாள்தோறும் என் மனதுக்குள் அவர்கள் அனைவரது முகத்திலும் உமிழ்ந்துவந்தேன்.

உண்மையைச் சொல்லுங்கள். இதை நியாயப்படுத்த காரணம் கண்டுபிடிக்க முடியுமா? ஒரு காரணம் இருக்கிறது. ஆனால் அது ஒரு வாதமாக எடுத்துவைக்க முடியாத அளவுக்குப் பலவீனமானதாகும். எப்படி பார்த்தாலும் அந்தக் காரணம் இதுதான். எப்பொழுதுமே மனிதர்கள் தொடர்பான சங்கதிகளை முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக என்னால் கருத முடியவில்லை. அவற்றில் முக்கியத்துவம் எங்கு உள்ளது என்றும் எனக்குத் தெரியவில்லை. என்னைச் சுற்றி நடப்பவைகள், எதிலும் அது இல்லை என்பது மட்டும் தெரியும். ஏனெனில், அவை வெறுமனே ஒரு வேடிக்கையான விளையாட்டாகவோ அலுப்புத்தட்டும் விஷயமாகவோ தான் எனக்குத் தோன்றுகிறது. உண்மையில் சில தேடுதல்களையும் நம்பிக்கைகளையும் என்னால் ஒருபோதும் புரிந்துகொள்ள முடியவில்லை. பணத்துக்காக இறப்பவர்கள், ‘அந்தஸ்து’ பறிபோனதற்காகத் துயரக்கடலில் விழுபவர்கள், தங்கள் குடும்பம் மேன்மையடைய வேண்டும் என்பதற்காகப் பெருமைக்குரிய சிறந்தவகையில் தங்களைத் தியாகம் செய்பவர்கள் இத்தகைய வினோதமான பிறவிகளை எப்பொழுதுமே ஒருவிதமான சந்தேகம் கலந்த ஆச்சரியத்தோடுதான் பார்ப்பேன். புகைப் பிடிக்கும் பழக்கத்தை நிறுத்த வேண்டும் என்று முடிவெடுத்துத் தன் உறுதியான மனவலிமையால் வெற்றியும் பெற்ற அந்த நண்பனின் நடவடிக்கை எனக்கு நன்றாகப் புரிந்தது. ஒருநாள் காலை, செய்தித்தாளைப் பிரித்து அவன் வாசித்தான். முதல் ஹைட்ரஜன் குண்டு வெடித்தது என்ற செய்தியைக் கண்டான். ஆச்சரியப்படும்படியான அதன் விளைவுகளைத் தெரிந்து கொண்டான்.

*தாமதிக்காமல் நேராகச் சிகரெட் கடைக்குள் வேகமாக நுழைந்தான்.*

*சிலநேரங்களில் நான் வாழ்க்கையைப் பொருட்படுத்துபவன் போல் காட்டிக்கொண்டேன். ஆனால் அதன் அற்பத்தனம் எனக்கு விரைவில் புரிந்துவிட்டது. ஆனாலும் என்னால் முடிந்த அளவுக்கு என் நடிப்பைத் தொடர்ந்துவந்தேன். திறமையானவனாக, அறிவாளியாக, நல்லகுணமுடையவனாக, நல்லகுடிமகனாக, ஆச்சரியமடைபவனாக, பரிவுடையவனாக, பொறுப்புணர்வுமிக்கவனாக, அனுபவமிக்கவனாக – இப்படி பல வேடங்களை ஏற்று வந்தேன். போதும், இத்தோடு நிறுத்திக் கொள்கிறேன். உங்களுக்கு ஏற்கெனவே புரிந்துவிட்டது. ஹாலந்து நாட்டின் என் நண்பர்கள் எவ்வாறு இங்கு இருந்துகொண்டே இல்லாமல் இருக்கிறார்களோ அதே நிலையில்தான் நானும் இருந்து வந்தேன். அதாவது, அதிகபட்ச இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டிருந்த போதும் அந்த இடத்தில் இல்லாமல் போனேன். நான் உண்மையிலேயே நேர்மையாகவும் துடிப்பாகவும் இருந்த காலம் எது தெரியுமா? நான் விளையாட்டில் பங்கேற்ற காலத்திலும், இராணுவப்பயிற்சிக் காலத்தில் எங்கள் சந்தோஷத்துக்காக நடத்தப்படும் நாடகங்களில் நடிக்கும்போதும்தான். இரண்டு விஷயத்திலுமே ஆட்ட விதியென்று ஒன்று இருந்தது. ஆனால் அதைக் கடைப்பிடிக்கவேண்டிய கட்டாயம் இல்லை. அதே நேரத்தில் அதனைக் கட்டாயம் என்பது போல் கருதி முக்கியத்துவம் தந்த எங்களுக்கு ஒருவிதமான மகிழ்ச்சி கிடைத்தது. இப்பொழுது கூட ஞாயிற்றுக்கிழமையில் நடக்கும் விளையாட்டுப் போட்டியின்போது நிரம்பிவழியும் அரங்கம், நான் அதிக அர்ப்பணிப்புடன் விரும்பும் நாடகம் – இவை மட்டுமே உலகத்தில் நான் குற்றமற்றவனாக உணரக்கூடிய இடங்களாகும்.*

*ஆனால் நேசம், மரணம், ஏழைகளின் ஊதியம் ஆகியவற்றில் இத்தகைய அணுகுமுறை நியாயமானது என்று யாராவது ஏற்றுக்கொள்வார்களா? இருந்தபோதிலும் அதற்காக என்ன செய்வது? இசோல்தின் (காவியக்) காதலைப் புதினங்களிலும் நாடகக் காட்சிகளிலும்தான் என்னால் கற்பனை செய்து பார்க்க முடிந்தது. அது சில நேரங்களில், மரணப் படுக்கையில் கிடப்பவர்கள் தாங்கள் ஏற்கும் வேடங்களில் ஒன்றிவிடுவது போல் எனக்குத் தோன்றும். பரிதாபத்துக்குரிய என் கட்சிக்காரர்களின் வாக்குமூலமும் இதே வகையில் இருப்பதாக நினைப்பேன். எனவே, ஒத்த விருப்பங்கள் இல்லாத மனிதர்களுடன் வாழ்ந்துவந்த எனக்கு ஏற்கெனவே அவர்களுக்கு அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றமுடியும் என்ற நம்பிக்கை இல்லை. என் தொழில், குடும்பம், பொது வாழ்வு ஆகியவற்றில் என்னிடமிருந்து என்னவெல்லாம் எதிர்பார்க்கப்படுமோ அவற்றையெல்லாம் தேவையான அளவு மரியாதையாகவும் அலட்டிக்கொள்ளாமலும் நிறைவேற்றி வந்தேன். ஆனால் இவற்றையெல்லாம் மனம் ஒன்றாமல் செய்த காரணத்தால் ஒவ்வொரு முறையும், அனைத்தும் வீணாகிவிடும். என் வாழ்க்கை முழுவதும் இரட்டை அடையாளங்களைக் கொண்டதாக இருந்தது. பெரும்பாலும் நான் மேற்கொள்ளும் முக்கியமான நடவடிக்கைகளில் குறைவான ஈடுபாட்டையே காட்டிவந்தேன். நான் செய்த மிகப்பெரிய பிழைகளில் இதுவும் ஒன்று. என்னாலேயே மன்னிக்க முடியாத இப்பிழைதான் என் சுய மதிப்பீட்டையும் என்னைச் சுற்றியுள்ளவர்கள் மீது நான் மேற்கொள்ளும் மதிப்பீட்டையும் முழுமூச்சுடன் எதிர்க்க வைத்தது. அத்தகைய மதிப்பீடுகளிலிருந்து தப்பிக்கும் வழியைத் தேட வைத்ததும் இக்காரணம்தான் இல்லையா?*

*வெளித்தோற்றத்தில், சிறிது காலம் ஒன்றுமே நடக்காததுபோல வாழ்க்கையெனும் தண்டவாளத்தில் என் பயணத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தேன். ஏதோ வலிந்து நடந்துகொள்ளும் தோற்றத்தோடு, மற்றவர்கள் என்னைப் புகழ்வது அதிகமானது. அதிலிருந்துதான் சிக்கல் ஆரம்பித்தது. இந்த வாசகத்தை நினைவில் கொள்ளுங்கள்: "உங்களைப் பற்றி எல்லாரும் நல்லவிதமாகப் பேசினால் உங்களுக்குத் துன்பம்தான் விளையும்". அடடே! பொன்னெழுத்தில் பொறிக்கப்பட வேண்டிய வார்த்தைகள்! எனக்கும் துன்பம்தான் வந்து சேர்ந்தது! உடனே, வாழ்க்கை என்னும் எந்திரம் தன் வேலையைக் காட்ட*

ஆரம்பித்தது. காரணமே இல்லாமல் அடிக்கடி நின்றுபோகவும் செய்தது.

அந்தக் கட்டத்தில்தான் என் அன்றாட வாழ்வில், மரணம் குறித்த சிந்தனை என்னிடம் தலைதூக்கத் தொடங்கியது. எனக்கும் என் வாழ்க்கையின் முடிவுக்கும் இடையே எஞ்சியுள்ள வருடங்களைக் கணக்கிட்டுப் பார்க்க ஆரம்பித்தேன். ஏற்கெனவே மரணமடைந்த என் வயதுடைய ஆட்களைப் பற்றி யோசித்துப் பார்த்தேன். என் பணியை முடிக்க அவகாசம் இல்லாமல் போக வாய்ப்புள்ளது என்ற எண்ணம் என்னை வாட்டி எடுத்தது. என்ன பணி? அதைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. நேர்மையாகப் பார்த்தால், நான் ஏற்கெனவே செய்து கொண்டிருக்கும் பணியைத் தொடர்வதில் ஏதேனும் பயன் உண்டா? ஆனால் சிக்கல் அதுவல்ல. என்னை ஒருவித வினோதமான அச்ச உணர்வு ஆட்கொண்டதுதான். ஏனெனில் தன் பொய்கள் அனைத்தையும் கூறி அவற்றுக்கான பாவமன்னிப்பைப் பெறாமல், ஒரு மனிதனால் இறந்து போக முடியாது. ஆனால் கடவுளிடமோ அவருடைய பிரதிநிதிகளில் ஒருவரிடமோ என்னால் பாவமன்னிப்புக் கேட்கமுடியாது. நீங்கள் நினைப்பது சரிதான். ஏனெனில் நான் அவர்களுக்கெல்லாம் ஒரு படி மேலே இருந்தேன். உதாரணத்துக்கு, மனிதர்களிடம், அதாவது நண்பன் ஒருவனிடம், விருப்பமான பெண் ஒருத்தியிடம் என இவர்களில் யாராவது ஒருவரிடம் நம் தவறுகளைக் கூறி வருந்தவேண்டியுள்ளது. ஆனால், வாழ்க்கையில் ஏதேனும் ஒரு பொய் மறைக்கப்பட்டிருந்தாலும் கூட மரணம் அதனை முற்றிலுமாக மறைத்துவிடும். அதன் பிறகு, யாராலும் உண்மையைக் கண்டறியவே முடியாது. ஏனெனில், அந்த உண்மை தெரிந்த ஒரே நபர், தன் இரகசியத்தைப் பாதுகாத்தபடியே இறந்துபோன அவன் மட்டுமே. உண்மையைக் குழிதோண்டிப் புதைக்கும் இச்செயல் என்னைக் கலக்கமடையச் செய்தது. ஆனால் அதுவே இன்றைய காலகட்டமாக இருந்தால் உள்ளுக்குள் திருப்தியை அளித்திருக்கும். உதாரணமாக, எல்லாரும் தேடிக்கொண்டிருக்கும் பொருள் குறித்து எனக்கு மட்டுமே தெரியும் என்பதும், மூன்று நாட்டுக் காவல் துறையும் கண்டுபிடிக்கத் துடிக்கும் அப்பொருளை என் வீட்டில் நான் வைத்திருப்பதும் உண்மையாகவே சுவையான அனுபவம்தான். சரி, அந்தப் பிரச்சினையை விட்டுவிடுவோம். அந்தக் காலகட்டத்தில் அதைச் சமாளிக்கும் வழிமுறைகள் தெரியாமல் துயரத்தில் இருந்து வந்தேன்.

நான் சுதாரித்துக்கொண்டேன் என்பதும் உண்மைதான். பல தலைமுறைகளாகத் தொடரும் வரலாற்றில் தனி மனிதன் கூறும் பொய் ஒன்றுக்கு அப்படி என்ன பெரிய முக்கியத்துவம் இருந்துவிட முடியும்? கடலில் கரைத்த பெருங்காயமாய்க் காணாமல் போய்விடக் கூடிய சாதாரண பித்தலாட்டத்தை உண்மையெனும் ஜோதியில் கலக்கப்பார்ப்பது தன்னையே தான் ஏமாற்றிக் கொள்வதாகாதா? நான் கண்ட மனிதர்களை எடைபோட்ட வகையில், அவர்களது உடலின் மரணம் மட்டுமே போதுமான தண்டனை என்றும் எல்லாவற்றையும் அது மன்னித்து விடும் என்றும் நினைத்துக்கொள்வேன். மரண வேதனையில்தான் பாவ விமோசனம் கிடைக்கும். அதாவது ஒட்டுமொத்தமாக மறைந்து போகும் வசதி கிடைக்கும். அசௌகரியம் கூடிக்கொண்டே போகப் போக என் படுக்கைக்கு அருகிலேயே மரணம் விசுவாசமாகக் காத்திருந்தது. அதனுடன் சேர்ந்தே தினமும் காலையில் எழுந்திருப்பேன். என்மீது பொழிந்த வாழ்த்துகள் தாங்கிக்கொள்ள முடியாத அளவு கனத்தன. அவற்றில் பொய்யுரைகள் வரம்பு மீறி அதிகரித்துவிட்டதாகக் கருதினேன். இதன் காரணமாகவே மீண்டும் என் இயல்பு நிலைக்குத் திரும்ப முடியாமல் போனது.

இதற்கு மேலும் தாக்குப்பிடிக்க முடியாது என்ற நிலையை எட்டிய நாள் வந்தது. நான் எடுத்த முதல் நடவடிக்கை தாறுமாறாக இருந்தது. நான் பொய் பேசுபவனாக இருந்ததால், என் பொய்மை வேடத்தை இந்த மூடர்கள் கண்டுபிடிப்பதற்கு முன்பாக நானே அவர்களிடம் சென்று அதனை வெளிச்சம் போட்டுக் காட்டினேன். உண்மையைச் சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்போது அந்தச் சவாலை நான் ஏற்றுக்கொண்டேன். என்னைக் குறித்து எழக்கூடிய சிரிப்பை எதிர்பார்த்து அதனைத் தவிர்ப்பதற்காக,

என்னை நானே பரிகாசத்துக்கு உட்படுத்திக்கொள்ளும் கற்பனையில் ஈடுபட்டேன். இதுவும் நிச்சயமாக என்னைக் குறித்த மதிப்பீட்டை ஏமாற்றும் செயல்தான். அதாவது, சிரிப்பவர்களை என் பக்கம் வைத்துக்கொள்ள விரும்பினேன். இல்லையென்றால் நான் அவர்கள் பக்கம் இருக்குமாறு பார்த்துக்கொள்ள விரும்பினேன். உதாரணமாக, பார்வையற்றவர்களை வீதியில் இடறிவிழ வைப்பது குறித்து யோசித்துப் பார்த்தேன். இக்காட்சியால் எனக்கு உள்ளூர உண்டான ஆனந்தம், என் ஆழ்மனதில் அவர்கள்மீது இருந்த வெறுப்பின் அளவை உணரச் செய்தது. சக்கரநாற்காலியின் டயர்களைப் பஞ்சர் செய்யலாமா என்று யோசித்துப் பார்த்தேன். சாரக் கம்பத்தின் மேல் நின்று வேலை செய்பவர்கள் அருகில் சென்று "என்ன அசிங்கமான தொழிலாளி வர்க்கம்!" என்று கத்த வேண்டும் என்றும் நினைத்துப்பார்த்தேன். மெட்ரோவில் பயணம் செய்யும்போது கைக்குழந்தைகளை ஓங்கி அறையலாமா என்றும் எண்ணிப்பார்த்தேன். இவை எல்லாவற்றையும் கற்பனை செய்துதான் பார்த்தேன். ஆனால் எதையும் செய்யவில்லை. ஒருவேளை அதைப் போல் ஏதாவது செய்தாலும் செய்திருப்பேன். ஆனால் அது எனக்கு நினைவுக்கு வரவில்லை. எப்படிப் பார்த்தாலும், 'நீதி' 'நியாயம்' போன்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்திலேயே எனக்கு விவரிக்கமுடியாத கோபம் உண்டாகிவிடும். இந்தக் கோபம் நீதிமன்ற வாதங்களுக்குத் தேவை இருந்ததால் தொடர்ந்து அதைப் பயன்படுத்திக் கொண்டேன். எனினும், மனிதாபிமானத்தின் மீது பகிரங்கமான தாக்குதல் நடத்தியதன் மூலமாக அதனைப் பழிதீர்த்துக் கொண்டேன். நியாயமானவர்கள்மீது ஒடுக்கப்பட்டவர்களால் ஏற்படும் பாரத்தைத் தோலுரித்துக் காட்டும் நோக்கில் பிரச்சார அறிக்கை ஒன்றை வெளியிட இருப்பதாக அறிவித்தேன். ஒருநாள், உணவகத்தின் மொட்டைமாடியில் நண்டு ஒன்றைச் சாப்பிட்டுக்கொண்டிருந்தேன். அப்பொழுது ஒரு பிச்சைக்காரன் என்னைத் தொந்தரவு செய்தான். உரிமையாளரைக் கூப்பிட்டு அவனை விரட்டும்படிச் சொல்லிவிட்டு, நியாயத்தைப் பேசும் பேச்சாளர் ஒருவரின் உரையைக் கவனித்தேன். "நீங்களெல்லாம் மக்களைத் தொந்தரவு செய்கிறீர்கள். இங்கு இருக்கும் பெரியோர்கள், தாய்மார்கள் ஆகியோரின் நிலையில் கொஞ்சம் இருந்து பாருங்கள், அப்போது புரியும்". அவர் கூறிய வார்த்தைகளை உரத்த குரலில் ஆமோதித்தேன். ரஷ்யநாட்டைச் சார்ந்த பண்ணையார் ஒருவரிடம் வேலை பார்த்த விவசாயிகளில் சிலர் அவருக்குத் தலைதாழ்த்தி வணக்கம் செலுத்துவார்கள். வேறு சிலர் அப்படி செய்ய மாட்டார்களாம். அவர்களிடம் மன்னிக்க முடியாத அகம்பாவம் இருப்பதாகக் கருதிய அந்தப் பண்ணையார், அவர்களைத் தண்டிக்கும்விதமாக இரண்டு சாராரையுமே சாட்டையால் அடிப்பாராம். அவர் நடந்துகொண்டவிதம் எனக்கு மிகவும் பிடிக்கும். இச்சம்பவத்தை நான் விவரிக்க நேர்ந்தவர்களிடம், எல்லாம் அந்தப் பண்ணையார்போல என்னால் நடந்துகொள்ள முடியவில்லையே என்பதுதான் என் வருத்தம் என்று சொல்லி வந்தேன்.

இதற்கிடையில், நான் செய்த வரம்பு மீறிய சில செயல்கள் நினைவுக்கு வருகின்றன. "காவல்துறைக்குப் புகழஞ்சலி", 'கில்லட்டின் (தலை துண்டிக்கும் கருவி) போற்றி' ஆகியவற்றை எழுதத் தொடங்கினேன். குறிப்பாக, தொழில்ரீதியில் இயங்கும் நம் மனிதாபிமானச் சிந்தனையாளர்கள் சந்தித்துக்கொள்ளவென்றே சில உணவு விடுதிகள் உள்ளன. அங்குச் செல்வதை ஒரு வழக்கமாகக் கட்டாயப்படுத்திக் கொண்டேன். என் கடந்த காலம் கறைபடியாமல் இருந்த காரணத்தால், இயல்பாகவே அங்கு எனக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது. அங்கே, யாரும் கவனிக்காத நேரத்தில், "கடவுள் புண்ணியத்தில்!" என்றோ "கடவுளே!" என்றோ அந்த இடத்தில் உச்சரிக்கக்கூடாத வார்த்தை ஒன்றை விட்டுப் பார்ப்பேன். அங்கிருக்கும் நம் உணவுவிடுதி வாழ் நாத்திகர்கள் எவ்வளவு குழந்தைத்தனமானவர்கள் என்றுதான் உங்களுக்குத் தெரியுமே. தகாத அந்த வார்த்தையைக் கேட்ட ஒரு கணம் அங்கு ஆச்சரியம் நிலவும். வாயடைத்துப்போய் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்வர். பிறகு குழப்பம் வெடிக்கும். சிலர், அந்த இடத்தைவிட்டு வெளியேறுவார்கள். மற்றவர்கள் எதையும் காதில் வாங்காதவர் போல் பாவனைசெய்துகொண்டு ஆனால்

*கோபத்தில் பிதற்றிக்கொண்டிருப்பார்கள். புனித நீர் தெளிக்கப்பட்ட பிசாசைப் போல் எல்லோரும் சங்கடத்தில் நெளிவார்கள்.*

*இப்படி நான் செய்ததைச் சிறுபிள்ளைத்தனமாக நீங்கள் கருதலாம். இருந்தாலும், இத்தகைய வேடிக்கையான சிறுசம்பவங்களின் பின்னணியில் முக்கியத்துவம் வாய்ந்த காரணம் ஒன்று இருக்கக்கூடும். அதுவரை நிகழ்ந்துகொண்டிருந்த ஆட்டத்தைக் கலைக்க விரும்பினேன். குறிப்பாக, என்னைக் கடும் கோபத்துக்குள்ளாக்கிய அவர்களின் புகழாரத்தைக் குலைத்துவிட எண்ணினேன். "உங்களைப் போல் ஒருவர்". . . என்று யாராவது என்னிடம் தன்மையாகக் கூறினால் கூட என் முகம் கோபத்தில் சிவந்துவிடும். அவர்கள் காட்டும் மரியாதை எனக்குத் தேவையில்லை. ஏனெனில் அது எல்லாரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய பொது அங்கீகாரம் அல்ல. மேலும் அதை நானே ஏற்றுக்கொள்ளாதபோது அது எப்படி பொது அங்கீகாரமாக இருக்க முடியும்? எனவே விமர்சனம், புகழ் என எல்லாவற்றையும் ஏளனம் எனும் போர்வைகொண்டு மூடிவிடுவது நல்லது. எது எப்படி இருந்தாலும், என்னை வதைக்கும் உணர்விலிருந்து நான் விடுபட்டாக வேண்டும். உள்ளுக்குள் என்ன இருக்கிறது என்பதை எல்லோருக்கும் வெளிப்படுத்த, எல்லா இடங்களிலும் நான் காட்டிக் கொண்டிருந்த அழகான பொம்மைப் பிம்பத்தை உடைக்க விரும்பினேன். உதாரணமாக, பயிற்சிக்கு வந்த இளம் வழக்குரைஞர்களிடையே நான் உரை நிகழ்த்த ஆயத்தமான நேரம் என் நினைவில் உள்ளது. வழக்குரைஞர் சங்கத் தலைவர் என்னை அறிமுகம்செய்துவைத்தபோது வானளாவப் புகழ்ந்தார். என்னால் வெகுநேரம் எரிச்சலைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை. எல்லாரும் எதிர்பார்த்தபடி ஊக்கத்தோடும் முழு உணர்வோடும் உரையைத் தொடங்கினேன். என் பேச்சில் அவற்றைக் கொண்டுவர எனக்குச் சிரமம் எதுவும் இல்லை. ஆனால் நான் திடீரென அவர்களிடம், குற்றத்தை மறுத்து வாதாட எதிராளியைத் தன்பக்கம் இழுக்கும் முறையைக் கையாள வேண்டும் என்னும் அறிவுரையைக் கூறத் தொடங்கினேன். இன்றைய நீதி விசாரணைகளில் முறையாகக் கையாளப்படும் நடைமுறையை நான் குறிப்பிடவில்லை. அதில், ஒரே நேரத்தில் திருடனையும் நேர்மையானவனையும் குறித்து மதிப்பீடு செய்வார்கள். திருடன் செய்த குற்றங்களை வைத்தே நேர்மையானவனின் வாதத்தை முறியடிப்பார்கள். இதற்கு நேர்மாறாக, நேர்மையானவனின் குற்றங்களை எடுத்துக்கூறுவதன் மூலம் திருடனுக்காகப் பரிந்து பேசுவதைப் பற்றிக் கூறினேன். இந்த இடத்தில், நேர்மையானவன் என்பது வழக்குரைஞரைக் குறிக்கிறது. இந்த விஷயத்தில் என் தரப்பு வாதத்தைத் தெளிவாக விளக்கினேன்.*

*"உதாரணமாக, பொறாமையுணர்ச்சியால் கொலையாளியாய் மாறிய பரிதாபத்துக்குரிய ஒருவருக்காக வாதாட ஒப்புக்கொள்கிறேன் என்று வைத்துக்கொள்வோம். நீதிபதிகளைப் பார்த்து, 'நீதிமான்களே, பெண்ணின் நயவஞ்சகத்தால் தன் இயல்பான நல்ல உள்ளம் சோதனைக்குள்ளாவதைப் பார்க்கும்போது, ஒருவருக்கு ஏற்படும் கோபம், மன்னிக்கக் கூடிய ஒன்று தான் என்பதைக் கவனத்தில் எடுத்துக்கொள்ளுங்கள்' என்று நான் கூறுவேன். தொடர்ந்து, என்னைப்போல் ஒருபோதும் நல்லவனாக இல்லாமல், ஏமாற்றத்துக்கும் ஆளாகாமல், தற்செயலாக எதிர்வரிசையில் இருந்து வாதாடுவது அதைவிட மோசமானது இல்லையா? இந்நிலையிலிருந்து விடுபட்டு வாதாடக்கூடாதா என்று கேட்பீர்கள். ஆனால் நான் எப்படிப்பட்டவன்? தற்பெருமையடைவதில் ஒரு பதினான்காம் லூயி, காமவெறியில் ஓர் ஆட்டுக்கிடா, கோபத்தில் பண்டைய எகிப்திய அரசன் பார்வோன், சோம்பலில் நான் மன்னன். நான் யாரையும் கொல்லவில்லையா? நிச்சயமாக இதுவரை இல்லை! இறக்கத் தகுதியுடைய சில ஜீவன்கள் இறந்து போகட்டும் என்று நான் விட்டுவிடவில்லையா? விட்டிருக்கலாம். மேலும் அப்படி செய்ய மீண்டும் நான் தயாராக இருக்கலாம். ஆனால் இந்த நபரைக் கொஞ்சம் பாருங்கள். அவன் மீண்டும் அப்படி செய்யமாட்டான். தான் எப்படி இவ்வாறு செய்தோம் என்ற அதிர்ச்சியிலிருந்தே அவன் இன்னும்*

மீளவில்லை". அந்த இளம் வழக்குரைஞர் தோழர்களுக்கு இந்தப் பேச்சு கொஞ்சம் சங்கடத்தைக் கொடுத்தது. ஒரு கட்டத்தில், அவர்கள் தங்கள் சங்கடத்தைச் சிரித்து மழுப்பினார்கள். என் முடிவுரையில், தனி மனிதனைப் பற்றியும் அவனுக்கு இருப்பதாகக் கூறப்படும் உரிமைகள் பற்றியும் நீட்டி முழக்கிப் பேசியபோது, அவர்களுக்கு மீண்டும் என் பேச்சின் மேல் முழு நம்பிக்கை ஏற்பட்டது. அன்று, என் வழக்கமான பாணிதான் வென்றது.

இத்தகைய குதர்க்கமான வாதங்களை மீண்டும் மீண்டும் செய்ததன் மூலம் என்மீது இருந்த கருத்தை ஓரளவுக்குத் திசைதிருப்புவதில் வெற்றிபெற்றேன் என்று சொல்லலாம். அதே நேரத்தில் கருத்து வலுவிழக்காமல் இருக்குமாறும் பார்த்துக்கொண்டேன். குறிப்பாக என்னை வலுவிழக்கச் செய்துவிடாமல் பார்த்துக்கொண்டேன். என் பேச்சைக் கேட்டவர்களிடையே பொதுவாகக் காணப்பட்ட ஆச்சரியமும், உள்ளூர அவர்களுக்கு ஏற்பட்ட அசௌகரியமும் எனக்கு ஆறுதல் அளிக்கவில்லை. அது ஏறக்குறைய நீங்கள் இப்பொழுது அனுபவிக்கும் அசௌகரியம் போன்றதுதான். இல்லை என்று மட்டும் மறுக்காதீர்கள். நீங்களே யோசித்துப் பாருங்கள். உங்கள்மீது உள்ள களங்கத்தைப் போக்க உங்களை நீங்களே குற்றஞ்சாட்டிக்கொள்வது மட்டுமே போதாது. இல்லையென்றால், நான் கூட ஓர் அப்பாவி ஆட்டுக்குட்டியைப் போல் அல்லவா இருந்திருப்பேன். தன்மீதே ஒருவன் குற்றஞ்சாட்டிக்கொள்ள வேண்டுமென்றால் ஒரு குறிப்பிட்ட முறையியலைக் கையாளவேண்டியுள்ளது. அவ்வாறு கச்சிதமாகச் செய்ய எனக்கு நீண்ட காலம் தேவைப்பட்டது. ஒட்டு மொத்தமாகக் கைவிடப்பட்ட ஒரு நிலையை நான் அடையும்வரை அந்த முறையியலை நான் கண்டுபிடிக்கவில்லை. அதுவரை அந்தச் சிரிப்பு என்னைத் தொடர்ந்து வட்டமடித்துக் கொண்டிருந்தது. அதில் இருந்த பரிவும் ஓரளவு மென்மையும் எனக்கு வேதனையளித்தன. அந்தச் சிரிப்பிலிருந்த அந்தப் பண்புகளைப் பிரித்தெடுக்க நான் அவ்வப்போது மேற்கொண்ட முயற்சிகள் வெற்றிபெறவில்லை.

அங்கே பாருங்கள், கடல் அலை உயர்வது போல் தெரிகிறது. நம் படகு விரைவில் கிளம்பிவிடும். பொழுதும் முடியப்போகிறது. அங்கே மேலே பார்த்தீர்களா, வானத்தில் புறாக்கூட்டம். அவை இடைவெளியின்றி நெருக்கமாக இருக்கின்றன. அசைவதே தெரியவில்லை. வெளிச்சமும் மங்குகிறது. ஒருவகையில் மோசமான இத்தருணத்தைச் சமாளிக்க நாம் மௌனமாக இருக்க வேண்டும் இல்லையா? என்னை உங்களுக்குப் பிடிக்கிறதா? நீங்கள் மிகவும் நல்லவர்தான். மேலும் இப்பொழுது உண்மையிலேயே என்மீது உங்களுக்குப் பிரியம் ஏற்படக்கூடிய ஆபத்து இருக்கிறது. தண்டனைகோரும் நீதிபதிகளைப் பற்றி என் கருத்துக்களை விளக்குவதற்கு முன்பாகக் காமக்களியாட்டம் பற்றியும் அசௌகரியம் பற்றியும் உங்களுக்கு விளக்க வேண்டியுள்ளது.



நண்பரே, நீங்கள் நினைப்பது தவறு. படகு வேகமாகத்தான் சென்றுகொண்டிருக்கிறது. ஆனால் ஸைதொர்ஸே (ஹாலந்து நாட்டின் வட மேற்கில் உள்ள பெரிய ஏரி) ஒரு மரணக்கடலாகும். ஏறக்குறைய அப்படித் தான் சொல்லவேண்டும். அதன் சமதளமான கரைகள் பனிமூட்டத்தில் மறைந்துள்ளதால் இக்கடலின் தொடக்கம் எது, முடிவு எது என்று யாராலும் கூற முடியாது. எனவே இந்த இடத்துக்கு அடையாளமாகக் குறிப்பிடக்கூட எதுவும் இல்லாமல் நாம் போய்க் கொண்டே இருக்கிறோம். நாம் செல்லும் வேகத்தையும் நம்மால் கணக்கிட முடியாது. நம் படகு முன்னே சென்று கொண்டிருந்தாலும் காட்சியில் எந்த மாற்றமும் இல்லை. இந்த உணர்வு நீரில் மேற்கொள்ளும் பயணத்தால் ஏற்படவில்லை, எல்லாம் நம் கற்பனையின் விளைவு.

கிரேக்க நாட்டின் தீவுக்கூட்டத்தைப் பார்த்தபோது எனக்கு ஏற்பட்ட உணர்வு முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது. அங்குத் தொடுவானத்தின் அருகில் புதுத் தீவுகள் தெரிந்துகொண்டே இருக்கும். மரங்களில்லாத அத்தீவுக்கூட்டத்தின் மையச்சரடு வானத்தின் எல்லையைக் குறிக்கும். பாறைகள் நிறைந்த கரை, கடலோடு எவ்விதத்திலும் ஒன்றாமல் தனித்து நிற்கும். எவ்விதக் குழப்பத்துக்கும் வாய்ப்பில்லை. துல்லியமான வெளிச்சத்தில் அனைத்தும் அடையாளம் தெரிய அமைந்திருக்கும். மேலும் ஒரு தீவிலிருந்து மற்றொரு தீவுக்கு எங்கள் சிறிய படகில் பயணத்தைத் தொடரவேண்டியிருந்தது. சில நேரம் அப்படகு சற்றே சுணங்கிய போதிலும், குளிர்ந்த சிற்றலைகளின் முகடுகளில், சிரிப்பும் நுரையும் நிறைந்ததோர் ஓட்டத்தில் இரவும்பகலுமாகக் குதூகலிப்பது போன்ற உணர்வு எங்களுக்கு ஏற்பட்டது. அந்தக் காலகட்டத்திலிருந்து என் நினைவலைகளின் விளிம்பில் எனக்குள் கிரேக்க நாடு ஓயாமல் எங்கேயோ அசைந்துகொண்டே இருந்தது. அட! நானும் திசை மாறுகிறேன். கவித்துவமாகப் பேச ஆரம்பித்து விடுகிறேன். நான் அதிகம் பேசிக்கொண்டே போவது போல் தோன்றினால் தயவுசெய்து நிறுத்தச் சொல்லுங்கள்.

அது போகட்டும், உங்களுக்குக் கிரேக்க நாட்டைப் பற்றித் தெரியுமா? தெரியாதா? நல்லதாகப் போயிற்று. உங்களை ஒன்று கேட்கிறேன். அங்கு நாம் செய்ய வேண்டியது என்ன தெரியுமா? அங்கு வாழ்வதற்குத் தூய்மையான உள்ளம் வேண்டும். அந்த நாட்டில், ஆண்கள் தங்கள் நண்பர்களுடன் கைகோத்தபடி ஜோடியாக வீதிகளில் நடந்துபோவது வழக்கம் என்பது உங்களுக்குத் தெரியுமா? ஆம், பெண்கள் வீட்டில் இருப்பார்கள். மீசையுடன் நடுத்தர வயதுடைய மரியாதையான நபர் ஒருவர் நடைபாதையில் தன் நண்பரின் கைகளைப் பற்றியபடி வலம் வருவதை அங்குச் சாதாரணமாகக் காணலாம். கீழை நாடுகளிலும் சில நேரங்களில் அப்படித்தான் இல்லையா? இருந்துவிட்டுப் போகட்டும். ஆனால், பாரீஸில் உள்ள தெருக்களில், நீங்கள் இதைப் போல் என் கையைப் பற்றியபடி நடந்துபோவீர்களா? சொல்லுங்கள். ஒரு பேச்சுக்குத்தான் கேட்டேன். வெளியில் நடக்கும்போது எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கு நம்மிடம் ஒரு வழிமுறை இருக்கிறது. அசுத்தம் நம்மை அச்சுறுத்துகிறது. கிரேக்கத் தீவுகளில் ஒருவரைச் சந்திக்கும் முன் நாம் நன்றாகக் குளித்தாக வேண்டும். அங்குக் காற்று தூய்மையாக இருக்கும். உடலுடனான உறவும் கடலும் தெள்ளத்தெளிவாக இருக்கும். ஆனால் நாம் . . .

இந்தப் பெரிய நாற்காலிகளில் உட்காருவோம். என்ன ஒரு பனிமூட்டம்! ஆ! எதில் விட்டேன்? ஆம், அசௌகரியம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். அது என்னவென்று உங்களுக்குச் சொல்கிறேன். போராடிப் பார்த்துவிட்டு என்னிடமுள்ள பெரும் சக்தி அனைத்தும் வற்றிய பின்னர், என் முயற்சிகளால்

எவ்விதப் பயனுமில்லை என்று உணர்ந்து மனந்தளர்ந்தேன். எனவே இனி மனிதர்களுடன் பழகுவதில்லை என்ற முடிவுக்கு வந்தேன். இல்லை, இல்லை ஆள் அரவமில்லாத தீவை நான் தேடவில்லை. அப்படி ஒரு தீவு எதுவும் மிச்சமில்லை. எனவே வேறு எதுவும் செய்யாமல் பெண்களின் துணையை நாடினேன். உங்களுக்குத்தான் தெரியுமே, அவர்கள் உண்மையில் எந்தப் பலவீனத்துக்கும் தடைபோட மாட்டார்கள். மாறாக, நம் ஆற்றலை அவமதிக்கவும் அழிக்கவும்தான் அதிகமாக முயன்று பார்ப்பார்கள். எனவேதான் பெண் என்பவள் ஒரு வெகுமதி. போர்வீரனுக்குக் கிடைக்கும் வெகுமதி அல்ல. குற்றவாளிக்குக் கிடைக்கும் வெகுமதி. அவள்தான் அவனுடைய துறைமுகம், அவனது புகலிடம். அவன் பொதுவாகச் சிறையிலிடப்படுவது பெண் ஒருத்தியின் கட்டிலில்தான். இந்தப் பூலோகச் சொர்க்கத்தில் நமக்கு எஞ்சுவது அவள் மட்டும்தான் இல்லையா? பெரும் குழப்பத்தில் இருந்த நான், என் இயற்கையான துறைமுகத்துக்கு ஓடினேன். ஆனால் முன்புபோல் பேச்சில் ஆர்வம் காட்டவில்லை. பழக்க தோஷத்தில் கொஞ்சம் விளையாடிப் பார்த்தேன். ஆனால் எனக்குக் கற்பனைப் பஞ்சம் இருந்தது. ஒன்றைச் சொல்லத் தயக்கமாக இருக்கிறது. ஏனெனில் இன்னும் சில சொல்லத் தகாத வார்த்தைகளைப் பயன்படுத்த நேருமோ என்ற பயம் ஏற்படுகிறது. அந்தக் காலகட்டத்தில், என்னிடம் காதல் வெறி ஏற்பட்டது. அது ஆபாசம் இல்லையா? எப்படி இருந்தாலும், நான் ஓர் இரகசிய வேதனையை அனுபவித்தேன். ஒருவிதமான போதாமை என்னை மேலும் வெறுமையாக்கியதோடு பாதி நிர்ப்பந்தத்திலும், மீதி ஆர்வத்திலும் சில பொறுப்புகளை ஏற்கவைத்தது. காதலிக்க வேண்டிய தேவையும் காதலிக்கப்பட வேண்டிய தேவையும் எனக்கு இருந்ததால் நான் காதல் வயப்பட்டுவிட்டதாக நினைத்தேன். வேறுமாதிரியாகச் சொல்ல வேண்டுமென்றால் நான் மடத்தனமாக நடக்க ஆரம்பித்தேன்.

நான் அனுபவமுள்ளவனாக இருந்ததால் “நீ என்னை விரும்புகிறாயா?” என்ற கேள்வியை அதுவரை தவிர்த்து வந்தேன். பின்னர், அக்கேள்வியை எழுப்பி அடிக்கடி சிக்கிக்கொண்டேன். அதுபோன்ற தருணங்களில், “அப்படியென்றால் நீ?” என்பதே வழக்கமான எதிர்க்கேள்வியாக இருக்கும் என்று உங்களுக்குத் தெரியும். நான் ‘ஆம்’ என்று பதிலளித்தால் என் உண்மையான உணர்வுகளை மீறிச் சில பொறுப்புகளில் சிக்கிக்கொள்ள வேண்டியிருந்தது. ‘இல்லை’ என்று சொல்லத் துணிந்தால், அதற்கும் மேல் காதலிக்கப்படாமல் போகும் ஆபத்து எனக்கு இருந்தது. தொடர்ந்து அதனால் துயரம் ஏற்படக்கூடிய வாய்ப்பும் இருந்தது. எனக்கு அமைதியைத் தரும் என்று எதிர்பார்த்த உணர்வுக்கு அச்சுறுத்தல் அதிகமாகிறது என்று தெரிந்ததும் என்னை நேசித்தவளிடம் அந்த உணர்ச்சியை அதிகமாக வேண்டினேன். இதனால் வெளிப்படையான உறுதிமொழிகளை அதிகமான அளவில் வழங்கும் நிலைக்கு ஆளானேன். என் உள்ளத்திடமிருந்து அதிகமான உணர்ச்சிகளை எதிர்பார்க்கும் நிலை உருவானது. இப்படித்தான் அழகான பேதைப் பெண் ஒருத்தியிடம் எனக்குப் போலியான மோகம் உண்டானது. அந்தப் பெண் காதல் கதைகளை நிறைய வாசித்தவள் என்பதால் வர்க்கப்பேதமற்றச் சமுதாயம் உருவாகப் போவதாக அறிவிக்கும் சிந்தனையாளர் ஒருவரின் நம்பிக்கையோடும் உறுதியோடும் காதலைப் பற்றிப் பேசினாள். இதுபோன்ற நம்பிக்கை மற்றவருக்கும் தொற்றிக்கொள்ளக் கூடியது என்று உங்களுக்கு நன்றாகத் தெரியும். நானும் காதலைப் பேச முயன்று கடைசியில் அவளது கருத்துக்கு உடன்பட்டுப் போனேன். இந்த நிலை எதுவரை நீடித்தது தெரியுமா? அவள் என் ஆசைநாயகியாக மாறும் வரையிலும் மேலும் காதலைப் பற்றிப் பேசக் கற்றுத் தந்த காதல் கதைகள் காதல் செய்வது எப்படி என்று கற்றுத்தரவில்லை என்பதை நான் புரிந்துகொண்ட வரையிலும்தான் அது நீடித்தது. ஒரு கிளியைக் காதலித்துவிட்டு, பாம்புடன் படுக்க வேண்டிய நிலையில் இருந்தேன் என்பது புரிந்தது. எனவே, ஒருபோதும் என் வாழ்க்கையில் காண முடியாததும் புத்தகங்களில் மட்டுமே சாத்தியமாகக்கூடியதுமான அந்தக் காதல், வேறு எங்காவது கிடைக்கிறதா என்று தேடினேன்.

ஆனால் எனக்குப் போதுமான பயிற்சி இல்லை. முப்பது ஆண்டுகளுக்கும் மேலாக என்னை மட்டுமே நான் நேசித்து வந்துள்ளேன். அத்தகைய வழக்கத்தை விட்டுவிட முடியுமென்று எவ்வாறு எதிர்பார்க்க முடியும்? எனவே நான் அதை விடவில்லை. என் காதல் உறுதியானதாக இல்லை. ஆனால் உறுதிமொழிகளை அதிகமாக வழங்கிவந்தேன். ஆரம்ப காலத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களுடன் தொடர்பு வைத்திருந்தது போலவே இப்பொழுதும் ஒரே நேரத்தில் பலரை நேசித்தேன். இப்படி செய்வதன் மூலம், நான் அதிகமாக அலட்சியம் காட்டிய காலத்தைவிட கூடுதல் அளவில் துன்பங்களை அவர்களுக்கு அளித்தேன். விரக்தியடைந்த என் பச்சைக்கிளி, பட்டினி கிடந்து தன்னை மாய்த்துக்கொள்ள விரும்பியதை உங்களுக்குச் சொன்னேனா? நல்ல வேளையாக உரிய நேரத்தில் போய் அப்பெண்ணின் கையைப் பற்றிக் காப்பாற்றினேன். இரு காதுகளின் மேற்புறமும் நரைமுடியுடன் இருந்த ஒரு பொறியியலாளரை அவள் சந்திக்கும்வரை என் பாதுகாப்பு நீடித்தது. பாலித் தீவில் பயணம் முடித்துத் திரும்பியிருந்த அந்த நபரைக் குறித்த விவரங்களைத் தான் விரும்பி வாசிக்கும் வாரப் பத்திரிகையில் ஏற்கெனவே அவள் பார்த்திருந்தாள். எப்படியும், பொதுவாகச் சொல்லப்படுவது போல் ஆதி அந்தமற்ற பந்தத்தில் அகப்படவும் இல்லை; அதிலிருந்து விடுபடவுமில்லை. நான் செய்யும் தவறுகளின் எண்ணிக்கையைக் கூட்டியதோடு நல்ல பாதையிலிருந்து மென்மேலும் விலகி நடக்க ஆரம்பித்தேன். இதன் காரணமாக, காதல் மேல் எனக்கு அதிக வெறுப்பு உண்டானது. பல வருடங்களாக, பிரெஞ்சுப் பாடகி எதித் பியாஃப்பின் ‘அருமையான வாழ்க்கை’, (ஈசோல்த் பாடுவதாக அமைந்த) ரிச்சர்ட் வேக்னரின் ‘காதலின் மரணம்’ ஆகிய பாடல்களைக் கேட்க நேர்ந்தபோது கோபத்தில் பற்களைக் கடிக்காமல் இருக்க முடியவில்லை. அந்த அளவுக்குக் காதல்மீது வெறுப்பு இருந்தது. எனவே ஒருவழியாக பெண்களைத் துறந்து பரிசுத்தமான நிலையில் வாழ முயன்று பார்த்தேன். அவர்களுடைய நட்பு மட்டுமே எனக்குப் போதுமானதாக இருந்தது. ஆனால் இது அந்த விளையாட்டை விட்டே விலகுவதற்குச் சமமாக மாறியது. ஆசையைத் தவிர்த்துப் பார்த்ததால், அனைத்து எதிர்பார்ப்புகளையும் மீறிப் பெண்கள்மீது எனக்குச் சலிப்பு ஏற்பட்டது. என்மீதும் அவர்களுக்குச் சலிப்பு ஏற்பட்டிருந்தது தெளிவாகத் தெரிந்தது. இனி விளையாட்டும் இல்லை, நடிப்பும் இல்லை என்னும் நிலை உண்டானது. எனவே நான் உண்மையை அறிந்துகொண்டேன் என்பதில் சந்தேகமில்லை. எனினும், என்னைப் பொறுத்தவரை உண்மை என்பது மாபெரும் சலிப்பாகும்.

காதல், கற்பு போன்றவற்றில் விரக்தியடைந்த எனக்குக் காமக்களியாட்டத்தைத் தேர்ந்தெடுப்பதைத் தவிர வேறு வழியில்லை என்று தோன்றியது. அது ஒன்றுதான் காதலுக்கு மாற்றாக இருக்க முடியும். ஏளனச்சிரிப்பை அது வாயடைக்கும், அமைதியை மீட்கும். எல்லாவற்றுக்கும் மேலாக மரணத்தை மறக்கச் செய்யும். நள்ளிரவைக் கடந்து ஓரளவு போதையேறிய நிலையில், இரண்டு விலைமாதர்களுக்கு நடுவில், ஆசை அனைத்தும் வற்றிய நிலையில் படுத்துக்கிடக்கும் போது பெண்களின் மீதுள்ள நம்பிக்கையானது, முன்பு போல் நம்மை வாட்டுவதில்லை. அப்போது நம் அறிவானது கடந்த காலம் முழுவதையும் கட்டுக்குள் கொண்டுவந்துவிடும். வாழ்க்கை எனும் துயரம் அறவே நீங்கும். ஒருவகையில், நான் எப்பொழுதும் ஒழுங்குகளின்றியே வாழ்ந்திருக்கிறேன். ஆனால் மரணத்தை மறக்க வேண்டும் என்ற விருப்பத்தையும் நான் விடவில்லை. இதுதானே என் இயல்பின் அடிநாதம்? மேலும், உங்களிடம் நான் ஏற்கெனவே விவரித்த என் சுயமோகமும் இதனால் விளைந்ததுதான் அல்லவா? ஆம், மரணத்தை மறக்க வேண்டும் என்ற ஆவல் என்னிடம் மேலோங்கி இருந்தது. என்மேல் நான் அதிகமான நேசம் கொண்டிருக்கக் காரணம், என் காதல் எனும் விலைமதிப்பற்ற பொருள் ஒருபோதும் மறையாமல் இருக்க வேண்டும் என்று நான் விரும்பியதுதான். விழிப்பு நிலையில், சிறிதளவு சுயசிந்தனை இருந்தால் கூடப் போதும், காமவெறி பிடித்த குரங்கு ஒன்றுக்கு எக்காரணம் கொண்டும் அமரத்துவத்தை அளிக்க முடியாது என்பது விளங்கும். எனவே மரணபயம் இல்லாமல் இருக்க மாற்று வழிகளைத் தேடியாக வேண்டும்.

மரணமிலா வாழ்வைப் பெறும் ஏக்கம் இருந்ததால், விலைமாதர்களுடன் உறங்குவது, இரவு முழுவதும் குடிப்பது என இருந்து வந்தேன். மறுநாள் காலையில் மரணத்தைப் பற்றிய நினைவு வந்தபோது நிச்சயமாகக் கசப்பான உணர்வே மேலோங்கியது. ஆனால் அதற்கும் முன் பல மணிநேரம் எல்லையில்லா இன்பத்தில் மிதந்துள்ளேன். உங்களுடன் ஒரு விஷயத்தைத் தைரியமாகப் பகிர்ந்து கொள்ளலாமா? இப்பொழுதும் ஏக்கத்துடன் நினைத்துப்பார்க்கிறேன். ஒருசில நாட்களில், மோசமான இரவு விடுதி ஒன்றுக்குச் செல்வேன். அங்கு உடனுக்குடன் தோற்றத்தை மாற்றும் நடனப் பெண் இருப்பாள். என் உடல் இச்சைகளுக்கு உடன்பட்ட அவளுக்காக அவள் மரியாதையைக் காக்க ஒருநாள் இரவு, தாடி வைத்த தற்பெருமைக்காரன் ஒருவனுடன் சண்டைகூடப் போட்டிருக்கிறேன். ஒவ்வொரு நாளும் இரவில் அந்த மதுக்கூடத்திலேயே சுற்றிக்கொண்டிருப்பேன். அந்தப் பூலோகச் சொர்க்கத்தின் சிவப்பு விளக்கொளியிலும் தூசியிலும் உழல்வேன்; நிறையக் குடிப்பேன்; ஏராளமான கட்டுக்கதைகளை அவிழ்த்துவிடுவேன். அதன்பின்னர், புலரும் பொழுதுக்காகக் காத்திருப்பேன். இறுதியில் வழக்கம் போல் என் இளவரசியின் கலைந்த கட்டிலில் கிடப்பேன். எந்திரகதியில் என்னுடன் உடலுறவு முடித்த அடுத்த கணமே அவள் தூங்கியிருப்பாள். காலைப் பொழுது மெல்ல வந்து இந்த மோசமான நடத்தையை வெளிச்சம் போட்டுக் காட்டும். அதை உணரும் நான் எழுந்து மெல்ல மெல்ல ஒளிமிக்கக் காலைப் பொழுதைச் சந்திப்பேன்.

எனக்குக் கிடைத்த ஒரே ஆறுதல் மதுவும் மங்கைகளும்தான். அந்த ஆறுதலைப் பெற மட்டுமே எனக்குத் தகுதியிருந்தது என்று நான் ஏற்றுக்கொண்டாக வேண்டும். இப்பொழுது, இரகசியம் ஒன்றை உங்களுக்குச் சொல்கிறேன். அதைப் பயன்படுத்திக்கொள்ள நீங்கள் தயங்க வேண்டாம். ஒன்றைக் கவனியுங்கள். உண்மையில் காமக்களியாட்டம் கட்டுப்பாடுகளிலிருந்து விடுதலையளிக்கும். ஏனெனில் அதில் எவ்விதப் பொறுப்புகளுக்கும் இடமில்லை. இவ்விஷயத்தில், உங்களை மட்டுமே ஈடுபடுத்திக்கொள்கிறீர்கள். இதன் காரணமாகத்தான், தன்னையே நேசிப்பது மகத்தான காதலர்களுக்குப் பிடித்த விஷயமாக இருந்து வருகிறது. காமக்களியாட்டம் ஒரு திக்குத்தெரியாத காடு. அதில் எதிர்காலமும் இல்லை, இறந்த காலமும் இல்லை; குறிப்பாக, உறுதிமொழி எதுவும் இல்லை, உடனடியான தண்டனையும் கிடையாது. அது அரங்கேறும் இடங்கள் உலகத்தில் ஒட்டாமல் இருக்கும். பயத்தையும் எதிர்பார்ப்பையும் சுமந்தபடி யாரும் அத்தகைய இடங்களுக்குள் நுழையமாட்டார்கள். அங்கே உரையாடல்களுக்கு அவசியமிருக்காது. நாடிவரும் பொருளை, எந்த ஒரு வார்த்தையும் பேசாமல் பெற்றுவிடலாம். ஆம், பல நேரங்களில் பணம் கூடச் செலவழிக்காமல் பெற்றுவிடலாம். ஒன்றை மறந்துவிட்டேன். உங்கள் அனுமதியுடன், அந்தக் காலகட்டத்தில் எனக்கு உதவிய முகம் மறந்துபோன, பெயர்தெரியாத அந்தப் பெண்களுக்கு இப்பொழுது அஞ்சலி செலுத்திக்கொள்கிறேன். இன்றும் அவர்களைப் பற்றிய நினைவு வரும்போது அவர்கள்மீது மரியாதை போன்ற ஏதோ ஓர் உணர்வும் சேர்ந்தே வருகிறது.

எப்படி இருந்தாலும், இந்தச் சுதந்திரத்தை நான் தாராளமாகப் பயன்படுத்திக்கொண்டேன். பாவம் என்று கருதப்படும் ஒன்றுக்காக மட்டுமே இயங்கும் விடுதி ஒன்றில் கூடச் சில காலம் இருந்திருக்கிறேன். அங்கு ஒரே சமயத்தில் வயதான விலைமாது ஒருத்தியுடனும் நல்ல குடும்பத்தைச் சார்ந்த மணமாகாத பெண் ஒருத்தியுடனும் பழகி வந்தேன். அந்த வயதான பெண்ணின் விருப்பங்களை நிறைவேற்றிய நான், இளம் பெண்ணுக்கோ எதார்த்தங்களைக் கற்றுக்கொள்ளச் சில வாய்ப்புகளை அளித்தேன். துரதிர்ஷ்டவசமாக, அந்த விலைமாதிடம் நடுத்தரவர்க்கத்தின் மனநிலை சற்று மிகையாக இருந்தது. மேலும் அந்த நேரத்தில், வாசகர்கள் தம் சொந்த அனுபவங்களைப் பகிர்ந்துகொள்ளக்கூடிய இதழ் ஒன்றில் எழுத அவள் சம்மதித்தாள். அது நவீனச் சிந்தனைகளை ஓரளவு வரவேற்கும் இதழாகும். அந்த இளம்பெண்ணோ, கட்டுப்படுத்த இயலாத தன் இயற்கை சுபாவங்களைத் திருப்திப்படுத்தவும்,

அவளிடமிருந்த அற்புதமான திறமைகளுக்கு வேலை கொடுக்கவும் திருமணம் செய்துகொண்டாள். அந்தக் காலகட்டத்தில், அடிக்கடி சர்ச்சைக்குள்ளான ஆண்கள் குழு ஒன்று இயங்கி வந்தது. அவர்களுக்கு இணையாக என்னையும் மதித்து அதில் என்னைச் சேர்த்துக்கொண்டபோது எனக்கு ஏற்பட்ட பெருமிதத்துக்கு அளவில்லை. அதை விட்டுவிடுவோம். பெரிய அறிவாளியாக இருப்பவர்கள் கூடப் பக்கத்தில் இருப்பவனைவிட ஒரு பாட்டில் அதிகமாகக் குடிக்க முடியுமானால் பெருமைப்பட்டுக் கொள்வார்கள். போதையில் கிடைக்கும் இந்த இன்பத்தில், அமைதியையும் விடுதலையுணர்வையும் பெற்றுவிடக்கூடிய வாய்ப்புக்கூட எனக்கு இருந்தது. எனினும், அதில் ஒரு தடை இருப்பதை நான் உணர்ந்தேன். இம்முறை எனக்கு முதல் தடையாக இருந்தது என் கல்லீரல். அடுத்ததாக என்னிடம் தொடர்ந்து இருக்கும் சோர்வு. சில சமயம் மரணத்தை வெல்ல முயல்வோம். அதே நேரத்தில், சில வாரங்கள் கடந்ததும் அடுத்தநாள்வரை நம்மால் உயிரோடு தாக்குப்பிடிக்க முடியுமா என்ற சந்தேகம் எழும்.

இத்தகைய இரவு நேரத்து அத்துமீறல்களை நான் கைவிட்டபோது, அந்த அனுபவத்திலிருந்து நான் அடைந்த ஒரே பலன் எது தெரியுமா? வாழ்க்கை எனக்கு அவ்வளவு துன்பமானதாகத் தோன்றவில்லை என்பதுதான். என் உடலைக் குடைந்துகொண்டிருந்தது சோர்வு; ஆனால் அதே சமயத்தில் என்னிடமிருந்த பல அநாகரிகமான குணங்களையும் அழித்தது. ஒவ்வொரு எல்லை மீறிய செயலைச் செய்துமுடிக்கும்போதும் உற்சாகம் குறையும். அதன் விளைவாக வேதனை உண்டாகும். நாம் நினைப்பதற்கு மாறாக, காமக்களியாட்டத்தில் பரவசம் என்று எதுவுமில்லை. அது ஒரு நெடுந்துயில், அவ்வளவுதான். நீங்கள் ஒரு விஷயத்தைக் கவனித்திருக்கக் கூடும். தங்களுக்குத் துரோகம் இழைத்துவிட்டதாகக் கருதும் ஒருத்தியுடன் உறங்க வேண்டும் என்பதே பொறாமை கொண்ட ஆண்கள் அவசரமாகச் செய்யத் துடிக்கும் வேலையாகும். ஆமாம், தங்கள் மதிப்புமிக்க பொக்கிஷத்தின் உரிமை இப்போதும் தங்களுக்கு உள்ளதை மேலும் ஒருமுறை உறுதிசெய்துகொள்ள விரும்புவார்கள். எல்லாரும் சொல்வதைப்போல், தாங்கள் விரும்பும் பெண்ணை அவர்கள் தன்வயமாக்கிக் கொள்ளப் பார்க்கிறார்கள்.

ஆனால் வேறு ஒரு விளைவும் அதில் உள்ளது. அதற்குப் பின் உடனடியாக அவர்களிடம் இருந்த பொறாமையுணர்வு குறைந்துவிடும். உடல்சார்ந்த பொறாமை ஒரு கற்பனையின் விளைவு மட்டுமல்ல, அது ஒரு சுய மதிப்பீடும் கூட. குறிப்பிட்ட அச்சூழ்நிலையில் தனக்கு ஏற்படும் மோசமான தீய எண்ணங்களை எதிரிக்குப் பொருத்திப் பார்ப்பான். நல்லவேளையாக, அதிக அளவிலான உடல் சுகம் கற்பனையையும் சீர்தூக்கிப் பார்க்கும் மனதையும் வலுவிழக்கச் செய்கிறது. அதன் பின்னர் ஆண்மை ஓய்வெடுக்கும்வரை, வேதனையும் வெளியில் தெரிவதில்லை. இதே காரணங்களால்தான், பல இளைஞர்கள் தங்கள் முதல் ஆசைநாயகியுடன் பழகும்போதே தத்துவார்த்தம் சார்ந்த பதற்றங்களை விட்டுவிடுகின்றனர். அதுபோலத்தான் சில திருமணங்களும். அமைப்புக்குட்பட்ட காமக் களியாட்டங்களாகிய அத்திருமணங்கள் சாகசத்தையும் புதுமையையும் சுமந்து செல்லும் உற்சாகமற்ற சவ ஊர்திகள் போல் ஆகிவிடுகின்றன. நான் சொல்வது உண்மைதான். நடுத்தரவர்க்கத் திருமணங்கள் நம் நாட்டை முடமாக்கிவிட்டன. விரைவில் மரணத்தின் வாசலுக்கே அவை கொண்டு சென்றுவிடும் என்றும் நான் நினைக்கிறேன்.

நான் என்ன மிகைப்படுத்திச் சொல்கிறேனா? இல்லை. பேசிக் கொண்டிருக்கும் விஷயத்திலிருந்து சற்று விலகிக் களியாட்டத்தில் கழிந்த அந்தக் காலங்களில் நான் பெற்ற அனுகூலங்களை உங்களுக்கு விளக்க விரும்பினேன், அவ்வளவுதான். ஒருவிதமான பனிமூட்டத்தில் வாழ்ந்துவந்த காலம் அது. அந்தச் சிரிப்பின் சத்தம் வலுவிழந்து போனது. இறுதியில் அதை நான் கண்டுகொள்ளாத நிலை ஏற்பட்டது. என்னை வெகுவாக ஆட்கொண்டிருந்த அலட்சியப் போக்கு எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாமல் அனைத்து

விஷயங்களுக்கும் பரவியது. உணர்வுகளுக்கு இனியும் இடமில்லை! சமமான மனநிலை அல்லது எந்த மனநிலையிலும் இல்லாத சூன்யநிலை என்றே சொல்லலாம். எலும்புருக்கி நோயால் பாதிக்கப்பட்ட நுரையீரல்கள் குணமாகும்போது வற்றிப் போகும். பின்னர் அதிர்ஷ்டவசமாகப் பிழைத்துக்கொண்ட அந்த நோயாளியை நாளடைவில் மூச்சுத்திணறலுக்கு உள்ளாக்கிவிடும். இப்படித்தான் நானும் குணமடைந்தபோது அமைதியாக இறந்துகொண்டிருந்தேன். நான் பேசியது முன்னுக்குப் பின் முரணாக இருந்ததால் என் பெயர் மோசமான அளவில் கெட்டுக்கொண்டிருந்தது. மேலும் தறிக்கெட்டுப்போன என் வாழ்க்கை முறையை மீறி என் தொழிலை விடாது செய்து வந்தேன். நான் செய்துவந்த தொழிலால் மட்டுமே நான் தொடர்ந்து வாழ்ந்துகொண்டிருந்தேன். எனினும் இதில் சுவாரஸ்யமான ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். என் பேச்சில் குறை கண்டுபிடிப்பதைவிட என் இரவு நேர அத்துமீறல்களில் குறைகண்டுபிடிப்பது குறைவாகவே இருந்தது.

நான் எடுத்துவைக்கும் வாதங்களில், குறிப்பாக நீதிபதிமுன் வாதாடும்போது மட்டும் சில நேரங்களில் கடவுளைப் பற்றிக் குறிப்பிடுவேன். அது என் கட்சிக்காரர்களுக்கு அவநம்பிக்கையை ஏற்படுத்திவிட்டது. சட்டவிதிகளில் யாராலும் வெல்ல முடியாத ஒரு வழக்குரைஞர் அளவுக்குத் தங்கள் தேவைகளைக் கடவுளால் பூர்த்தி செய்ய முடியாது என்று அவர்கள் அஞ்சியிருக்கக் கூடும். எனக்குச் சட்டங்கள் பற்றிய அறிவுக் குறைவினால்தான் கடவுளை நாடினேன் என்னும் முடிவுக்குச் செல்லும் நிலையில் அவர்கள் இருந்தனர். அவ்வாறே முடிவும் செய்த என் கட்சிக்காரர்கள் பலர் அதற்குப் பின் என்னிடம் வருவதைக் குறைத்துக் கொண்டனர். இங்கொன்றும் அங்கொன்றுமாக ஏதாவதொரு வழக்கில் நான் வாதாடி வந்தேன். சொல்லப்போனால், சில நேரங்களில் நான் என்ன சொல்கிறேன் என்பதை நானே நம்பாதபோதும் என் வாதங்களை நன்றாகத்தான் முன்வைத்தேன். என் சொந்தக் குரலே என்னை வழி நடத்த, அதை நான் பின்தொடர்வேன். முன்னொரு காலத்தில் இருந்தது போல் வானத்தில் பறக்காமல், பூமியிலிருந்து கொஞ்சமாக எழும்பி மிதந்துகொண்டிருந்தேன். என் தொழிலுக்கு அப்பால், சிலரை மட்டுமே சந்தித்தேன். அவர்களில் ஒன்றிரண்டுபேருடன் ஏற்கெனவேபழகிக் களைத்துப் போயிருந்தேன். ஆனாலும் அத்தொடர்புகளுக்கு மீண்டும் உயிர் கொடுத்தேன். சில சமயங்களில் வெறுமனே நண்பர்களை மட்டுமே சந்தித்துப் பல மாலைப் பொழுதுகளைக் கழித்துவந்தேன். அந்தச் சந்திப்புகளில் எவ்வித ஆர்வமும் பெரிதாக இருந்ததில்லை. அதன் காரணமாகச் சலிப்படைந்து என்ன சொல்கிறார்கள் என்பதைப் பெரும்பாலும் கவனிக்க மாட்டேன். நான் கொஞ்சம் பருமனாகிப் போனேன். இறுதியில் என் பிரச்சினை தீர்ந்துவிட்டதை என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனால் அதற்குக் காரணம் வயதாகிக்கொண்டிருந்ததுதான் என்று உணர்ந்தேன்.

எனினும், ஒருநாள் எனக்கு நெருக்கமான ஒருத்தியைக் கப்பலில் சுற்றுலா அழைத்துச் சென்றேன். நான் குணமடைந்துவிட்டதைக் கொண்டாடத்தான் அப்பயணம் என்று அவளிடம் சொல்லவில்லை. என் இயல்புப்படி மேல் தளத்தில் அமர்ந்தே பயணம் செய்தேன். திடீரென அந்த அடர் சாம்பல் நிறக் கடலில், தூரத்தில் ஒரு கரும்புள்ளி என் கண்ணில் தென்பட்டது. உடனடியாக என் பார்வையைத் திருப்பிக்கொண்டேன். இதயம் படபடக்கத் தொடங்கியது. மீண்டும் அதைப் பார்க்க வலிந்து முற்பட்டபோது அந்தக் கரும்புள்ளி மறைந்துவிட்டது. அது மீண்டும் எனக்குத் தெரிந்தபோது முட்டாள்தனமாக ‘உதவி’ என்று கூச்சல்போடவும் பார்த்தேன். அது வேறு ஒன்றுமில்லை. கப்பல்களிலிருந்து வெளியேறிய கழிவுப்பொருட்களில் ஒன்றுதான் அந்தப் புள்ளி. எனினும் அதைப் பார்க்கக் கூடிய சக்தி எனக்கில்லை. ஏனெனில் நீரில் மூழ்கும் நபர் ஒருவரே உடனடியாக என் மனக்கண்ணில் தோன்றினார். அப்பொழுதுதான் எனக்குத் தெளிவாகப் புரிய ஆரம்பித்தது. நாம் ஒன்றிப்போயிருக்கும் ஒரு எண்ணத்தின் உண்மைத் தன்மை வெகுநாட்களுக்கும் முன்பே

தெரிந்துவிட்டதைப் போல், பல வருடங்களுக்கும் முன்பு, சேன் நதியில் எனக்குப் பின்புறமாக ஒலித்த அந்தக் கூக்குரல் இன்னும் ஓயவில்லை என்பது புரிந்தது. ஆங்கிலக் கால்வாய்வரை நதியலைகளால் அழைத்து வரப்பட்ட அக்குரல், கடலின் எல்லையற்ற வெளியில் உலகமெங்கும் பயணம் செய்துவந்துள்ளது. நான் அதைக் கேட்க நேரும் நாள்வரை எனக்காகக் காத்திருந்ததும் விளங்கியது. அதே போல் நதிகளிலும் கடலிலும் எனக்காக எங்கும் அது காத்திருக்கும் என்பதும் புரிந்தது. சுருக்கமாகச் சொன்னால், எங்கெல்லாம் என் ஞானஸ்தான கசப்பு நீர் உள்ளதோஅங்கெல்லாம் அது இருக்கும். அப்படி பார்த்தால் இங்கே கூடத் தண்ணீர்மீதுதானே நாம் இருக்கிறோம்? அதுவும் நிலத்திடமிருந்து பிரித்துப்பார்க்க முடியாத இந்தச் சலனமற்ற நெடிய, சீரான நீர்ப் பரப்பின் மீது இருக்கிறோம் அல்லவா? ஆம்ஸ்டர்டாம் நகரை நாம் அடைவோம் என்பதை எப்படி நம்புவது? இந்தப் பிரமாண்டமான புனித நீர்ப்பரப்பிலிருந்து நாம் ஒருபோதும் வெளியேற முடியாது என்று நினைக்கிறேன். அங்கே கவனித்துக் கேளுங்கள்! கண்களுக்குத் தெரியாத கடற்பறவைகளின் ஒலி உங்கள் காதில் விழவில்லையா? அவை நம்மை நோக்கியா குரல் எழுப்புகின்றன? அப்படியென்றால் எதற்காக நம்மை அழைக்கின்றன?

எனினும் இதே பறவைகளின் ஒலியை நான் ஏற்கெனவே அட்லாண்டிக் கடல் மீது கேட்டிருக்கிறேன். அன்றுதான் நான் குணமடைய வில்லை என்று எனக்கு உறுதியானது. மேலும் நான் தொடர்ந்து இக்கட்டில் மாட்டிக்கொண்டிருந்ததும் அதிலிருந்து விடுபட்டாக வேண்டிய கட்டாயம் இருந்ததும் எனக்குத் தெளிவாகப் புரிந்தது. புகழ்மிக்க வாழ்வு முடிவுக்கு வந்தது. பதற்றம்மிகு வெறியாட்டங்களும் முடிவுக்கு வந்தன. நான் அடிபணிந்து என் குற்றத்தை ஏற்றுக்கொண்டாக வேண்டும். அசௌகரியத்திலேயே வாழ்ந்தாக வேண்டிய நிலை. பதினைந்தாம் நூற்றாண்டுக்கு முன்பு ஆழமான சிறைக்கூண்டுகளை அசௌகரியமாகக் கருதினர். அவற்றைப் பற்றி உங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. பெரும்பாலும், அதில் ஒருவரை அடைத்து விட்டால் அத்துடன் அவரை மறந்துவிடவேண்டும். நுணுக்கமான பல பரிமாணங்களைக் கொண்டிருந்ததால் மற்ற சிறைகளிலிருந்து அந்தச் சிறை வேறுபட்டிருந்தது. ஒருவர் வசதியாக நிற்கும் அளவுக்குப் போதுமான உயரம் இல்லாத அந்தச்சிறை, அவர் படுத்து உறங்கும் அளவு அகலமானதாகவும் இருக்காது. குறுக்குவாக்கில் மோசமான முறையில் உடலைக் குறுக்கிக்கொண்டு பொழுதைக் கழித்தாக வேண்டும். தூக்கத்தில் உடல் முழுமையாக நிலைகுலைந்திருக்கும். விழித்தெழுந்தால் உடல் குறுகி மண்டியிடும் நிலை ஏற்படும். ஒன்றைக் கவனித்தீர்களா, சாதாரணமாகத் தோன்றும் அந்தச் சிறைப் படைப்பில் தேர்ந்த நுணுக்கம் இருந்தது. இதை யோசித்துதான் சொல்கிறேன். ஒவ்வொரு நாளும் எவ்வித மாற்றமுமின்றி ஒரே மாதிரியாகத் தொடர்ந்து இருக்கச் செய்து உடம்பை மரத்துப் போக வைக்கும் தண்டனையைப் பெறும் கைதி, தான் குற்றவாளி என்பதையும், சந்தோஷமாகக் கை கால்களை விரிப்பதில் மட்டுமே சுதந்திரம் அடங்கியுள்ளது என்பதையும் புரிந்துகொள்வான். மலை உச்சிகளுக்கும் மேல் தளங்களுக்கும் மட்டுமே பழக்கப்பட்ட ஒருவனை அந்தச் சிறையில் வைத்து உங்களால் கற்பனைசெய்து பார்க்கமுடியுமா? சொல்லுங்கள். அத்தகைய சிறைகளில் இருந்துகொண்டே ஒருவன் குற்றமற்றவனாகவும் இருக்க முடியுமா? சாத்தியமில்லை! நிச்சயமாகச் சாத்தியமில்லை! இது உண்மையில்லை என்றால் நான் எடுத்து வைக்கும் வாதம் மண்ணைக் கவ்வும். குற்றமற்றவனாக இருப்பது என்றால் கூனிக்குறுகி வாழ்வது என்ற நிலைக்குத் தள்ளப்படுவோம். அத்தகைய சாத்தியக்கூற்றை ஒரு கணம் கூட என்னால் நினைத்துப்பார்க்க முடியாது. மேலும் யாருடைய குற்றமற்ற தன்மையையும் உறுதியாக நம்மால் நிறுவமுடியாது. ஆனால் எல்லாரும் குற்றம் செய்திருப்பார்கள் என்று மட்டும் உறுதியாகக் கூற முடியும். ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களின் குற்றங்களுக்குச் சாட்சியாக இருக்கிறான். இதுதான் எனக்கு இருக்கும் நம்பிக்கையும் எதிர்பார்ப்புமாகும்.

நான் சொல்வது உண்மைதான். நீதியைப் போதிக்கவும் கட்டளைகளைப் பிறப்பிக்கவும் தொடங்கும்போதே, மதங்கள் தடம்மாறிப் போய்விடுகின்றன. நம்மிடையே குற்ற உணர்வை விதைக்கவும் நம்மைத் தண்டிக்கவும் கடவுள் அவசியமில்லை. நம்முடன் வாழும் மனிதர்கள் போதும். நம் ஒத்துழைப்பும் அதில் இருக்கும். நியாயத் தீர்ப்பைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தீர்கள். மன்னிக்கவேண்டும். அதன்மீது மரியாதை இருந்தாலும் எனக்குச் சிரிப்புதான் வருகிறது. அந்தத் தீர்ப்புக்காக நான் முழுமனதுடன் காத்திருக்கிறேன். ஏனெனில் இருப்பதிலேயே மோசமானது மனிதர்களுடைய மதிப்பீடுதான் என்று எனக்குத் தெரியும். அவர்களைப் பொறுத்தவரை, மன்னிக்கக் கூடிய சூழ்நிலைகள் என்பதெல்லாம் கிடையாது. நல்ல நோக்கத்துக்குக்கூடக் குற்றம் கற்பிப்பார்கள். போகட்டும், இந்தச் செய்தியையாவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா? உலகிலேயே தாங்கள்தான் சிறந்தவர்கள் என்பதை நிரூபிக்க அண்மையில் ஒரு நாடு 'துப்பும் சிறை' என்ற ஒரு ஏற்பாட்டைச் செய்ய எண்ணியது. அதாவது மூடியிருக்கும் அறை ஒன்றில் கைதி நின்றிருப்பான். ஆனால் அவனால் அசைய முடியாது. அந்தக் கைதியை அடைத்துவைத்திருக்கும் சிமெண்ட் கூண்டின் உறுதியான கதவு, அவனுடைய முகவாய் உயரத்தில் இருக்கும். எனவே அவன் முகம் மட்டும்தான் வெளியே தெரியும். அங்கு வரும் காவலாளிகள் ஒவ்வொருவரும் கைதியின் முகத்தின் மீது சரமாரியாகத் துப்புவார்கள். துடைத்துக் கொள்ள அனுமதி இருந்தாலும் கூட கூண்டில் அடைபட்டு இருக்கும் கைதியால் ஒன்றும் செய்யமுடியாது. தன் கண்களை வேண்டுமானால் மூடிக்கொள்ளலாம். இருக்கட்டும், எப்படி பார்த்தாலும் இது ஒரு மனிதக் கண்டுபிடிப்பு. சாதாரணமாகத் தோன்றும் இந்த அற்புதப் படைப்பை உருவாக்க அவர்களுக்குக் கடவுள் தேவைப்படவில்லை.

அதனால் என்ன என்றா கேட்கிறீர்கள்? கடவுளின் ஒரே பயன் குற்றமற்றதனத்தை உறுதிசெய்வதாகத்தான் இருக்கும். குற்றக்கறைகளைக் களையும் பெரியதொரு நிறுவனமாகத்தான் என்னால் மதத்தைப் பார்க்கமுடிகிறது. அப்படித்தான் ஒரு காலகட்டத்தில் அது இருந்தது. ஆனால் அந்நிலை சிறிது காலமே நீடித்தது. சரியாகச் சொல்வதென்றால் மூன்று ஆண்டுகள். அப்போது அது மதம் என்ற பெயரில் அழைக்கப்படவில்லை. அதன்பிறகு சோப்பு கிடைக்கவில்லை. நம் மூக்கு ஒழுகி அசுத்தமாகவே, ஒருவருக்கொருவர் துடைத்துக்கொண்டோம். நாம் எல்லாரும் மண்டுகள், எல்லாரும் தண்டனைக்குள்ளானவர்கள். எனவே நாம் ஒருவர்மேல் ஒருவர் துப்பிக்கொள்ளலாம். சீக்கிரம்! வாருங்கள் அசௌகரியமான அந்தச் சிறைக்குச் செல்வோம். யார் முதலில் துப்புவது என்பதுதான் பிரச்சனை. உங்களுக்கு ஒரு பெரிய உண்மையைச் சொல்லப் போகிறேன். நியாயத் தீர்ப்புக்காகக் காத்திருக்காதீர்கள். நாள்தோறும் அது கிடைத்துக்கொண்டிருக்கிறது.

என்ன பார்க்கிறீர்கள்? இது ஒன்றுமில்லை. இந்த இடம் ஈரமாக இருக்கிறது. எனவே உடல் லேசாக நடுங்குகிறது. எப்படியும் நம் இடத்துக்கு வந்துசேர்ந்துவிட்டோம். இந்த இடம்தான். நீங்கள் முதலில் இறங்குங்கள். என்ன புறப்படுகிறீர்களா? தயவுசெய்து சிறிது நேரம் என்னுடன் இருங்கள். என் வீடுவரை என்னுடன் நடந்துவர முடியுமா? நான் சொல்ல வந்ததை இன்னும் முடிக்கவில்லை. மீதியையும் சொல்லியாக வேண்டும். தொடர்ந்து சொல்வதுதான் கடினம். அது சரி, ஏன் அவரைச் சிலுவையில் அறைந்தார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? இந்த நேரத்தில் அவரைப் பற்றித்தான் நீங்கள் யோசித்துக்கொண்டிருப்பீர்கள். ஆமாம்! அதற்கு மலை போல் காரணங்கள் குவிந்துகிடக்கின்றன. ஒரு மனிதனைக் கொலை செய்ய எப்பொழுதுமே காரணங்களுக்குப் பஞ்சமிருக்காது. ஆனால், அவன் வாழ்கிற வாழ்வை நியாயப்படுத்த ஒருபோதும் முடியாது. இந்தக் காரணத்தால்தான் குற்றங்களுக்குப் பரிந்துபேச எப்பொழுதுமே வழக்குரைஞர்கள் கிடைத்துவிடுவார்கள். ஆனால் குற்றமற்ற தன்மைக்கு அரிதாகவே அவ்வாறு கிடைப்பார்கள். அவரைக் கொன்றதற்கான காரணத்தைக் கடந்த இரண்டாயிரம்

ஆண்டுகளாக நம்மிடையே நன்கு விளக்கி வந்துள்ளனர். ஆனால் அவருடைய மனஉளைச்சலுக்கு முக்கியமான காரணம் ஒன்று இருக்கிறது. அதை ஏன் இவ்வளவு கவனமாக மறைக்கிறார்கள் என்றுதான் தெரியவில்லை. தான் முற்றிலுமாகக் குற்றமற்றவனில்லை என்று அவர் அறிந்திருந்தார். அவர்மீதான கடுமையான குற்றச்சாட்டுகள் நியாயமற்றதாக இருக்கலாம். ஆனால் அதற்கு மேலும் சில குற்றங்களையும் அவர் செய்துள்ளார். என்ன அக்குற்றங்கள் என்று அவருக்குத் தெரியாமல் போனாலும் குற்றம் செய்துள்ளார்தான். உண்மையிலேயே அவற்றைப் பற்றி அவருக்குத் தெரியாதா? எப்படி பார்த்தாலும், எல்லாவற்றுக்கும் அவர்தான் மூலக்காரணமாக இருந்தார். அப்பாவிகளின் படுகொலை ஒன்று நடந்ததே, அதைப் பற்றி அவர் கேள்விப்பட்டிருக்கக்கூடும். பாதுகாப்பான இடத்துக்குப் பெற்றோர்கள் அவரை அழைத்துச் சென்றபோது, யூதேயா (பாலஸ்தீனத்தில் உள்ள ஒரு பகுதி) பகுதியில் இருந்த மற்ற குழந்தைகள் எல்லாம் கொல்லப்பட்டனர். அதற்குக் காரணமாக அவரைச் சொல்ல முடியாது என்றால் ஏன்தான் அவர்கள் இறந்தார்கள்? இரத்தக்கறை படிந்த கைகளையுடைய போர் வீரர்களும் கண்டதுண்டமாய் வெட்டப்பட்ட குழந்தைகளும் அவரைத் திகிலடையச் செய்தனர். ஆனால் அவரது இயல்பை வைத்துப் பார்த்தால், அக்குழந்தைகளை அவரால் மறக்க முடியாது என்று மட்டும் எனக்கு நன்றாகத் தெரியும். அவருடைய ஒவ்வொரு நடவடிக்கையிலும் வெளிப்படும் சோகத்தை நம்மால் உணரமுடியும். அதற்கான காரணம் எது தெரியுமா? இறந்துபோன தன் குழந்தைகளை நினைத்து ரேச்சல் (யாகோப்பின் இரண்டாவது மனைவி, ஜோசப், பெஞ்சமின் ஆகியோரின் தாய்)அழுது புலம்புவாள். அவளை எந்த ஆறுதல் சொல்லியும் தேற்றமுடியாது. ஒவ்வோர் இரவிலும் அப்பெண் அழுது புலம்பும் குரலைக் கேட்கும் மனிதருக்கு ஏற்பட்ட சோகத்தின் தாக்கம்தான் அது. உண்மைதானே? அவளது புலம்பல் இரவில் அதிகமாக இருந்தது. தம் குழந்தைகளை நினைத்து ரேச்சல் புலம்பிக்கொண்டிருந்தாள். அப்போது, அந்தக் குழந்தைகள் கொல்லப்பட மூலக்காரணமாக இருந்தவர் உயிருடன் இருந்தார்.

தனக்குத் தெரிந்ததை வைத்துக்கொண்டும், மனிதனைப் பற்றி அறிந்ததை வைத்துக்கொண்டும் பார்க்கும்போது, அவருக்கு ஒன்று தெளிவாகியிருக்கும். அதாவது, தான் இறக்காமல் மற்றவர்களை இறக்கவைப்பது அவ்வளவு பெரிய குற்றமில்லை என்று எவரும் சொல்ல மாட்டார்கள். ஆகவே, அவர் அறியாமல் செய்த குற்றத்தின் நினைவு அவரை இரவும் பகலும் வாட்டிக் கொண்டிருந்தால், அதனைத் தாக்குப் பிடித்துக்கொண்டு மேற்கொண்டு வாழ்வது கடினம்தான். எனவே அந்தப் பிரச்சினைக்கு முற்றுப்புள்ளி வைப்பது நல்லது. தன்மீதான குற்றச்சாட்டை மறுக்காமல் இறந்துபோவது கூடத் தப்பில்லை. இதன்மூலம், தான் ஒருவன் மட்டும் உயிருடன் இருக்கும் களங்கம் நீங்கும். மேல்உலகிற்குச் செல்லும் போது அவருக்கு ஆதரவு கிடைக்கவும் வாய்ப்புள்ளது. ஆனால் அவருக்கு ஆதரவு கிடைக்கவில்லை. அவர் முறையிட்டுப்பார்த்தார். அதைவிட மோசமாக ஒன்று நடந்தது. அவர் கூறியதைத் தணிக்கை செய்தனர். ஆம், மூன்றாம் நற்செய்தியாளர் என்று நினைக்கிறேன். முறையீட்டை நீக்கத் தொடங்கியவர் அவர்தான். “ஏன் என்னைக் கைவிட்டீர்?” என்னும் முறையீடு ஒரு கலகக்குரல் அல்லவா? எனவே நீக்கிவிடுவோம்! மேலும் ஒன்றை மறந்துவிடாதீர்கள். இவ்வாறு இந்த விஷயத்தைப் புனித நூலில் இருந்து லுயிக் நீக்காமல் விட்டிருந்தால், எல்லாருடைய கவனத்தையும் இது பெரிதாக ஈர்த்திருக்காது. எப்படியும் இந்த அளவுக்கு அதற்கு முக்கியத்துவம் கிடைத்திருக்காது. சட்டத்துக்குப் புறம்பானது என்று தணிக்கையாளர் ஒன்றைத் தடை செய்யும்போது என்ன நடக்கிறது என்றால் அதனை அவர் உரத்த குரலில் எல்லாருக்கும் விளம்பரப்படுத்தி விடுகிறார். இதுபோன்று உலகத்தின் நியதி குழப்பமானதுதான்.

நிலைமை இவ்வாறாக இருந்தாலும், தணிக்கைக்கு உள்ளானவரால் தொடர்ந்து வாழமுடியவில்லை. நான் இதைத் தெரிந்துதான் பேசுகிறேன். அடுத்த கட்டத்துக்கு எப்படி நகர்வது என்று தெரியாமல் நான் தவித்த காலகட்டம் ஒன்று இருந்தது. உண்மைதான், இந்த உலகில் சண்டையிடலாம்; காதல்

செய்வதுபோல் பாவனை செய்யலாம்; சக மனிதனைச் சித்திரவதை செய்யலாம்; செய்தித்தாள்களில் விளம்பரம் செய்து கொள்ளலாம்; பின்னல் வேலையில் ஈடுபட்டபடியே பக்கத்து வீட்டு நபரைப் பற்றிப் புறம் பேசலாம். ஆனால் சில நேரங்களில், அச்செயல்களை அப்படியே தொடர்வது மனித சக்திக்கு அப்பாற்பட்டதாக இருக்கும். அவரோ மனித சக்திக்கு அப்பாற்பட்டவர் இல்லை. நான் சொல்வதை நீங்கள் நம்பலாம். தன் வேதனையைச் சொல்லி அவர் உரக்கச் சத்தமிட்டார். காரணம் தெரியாமலேயே இறந்துபோன அவரை அதனால்தான் எனக்கு மிகவும் பிடிக்கும்.

நாம் அசௌகரியத்தில் உழலவேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டாலும் எதுவந்தபோதிலும் – தொடர்ந்து வாழுமாறு அவர் நம்மைத் தனியாக விட்டுச் சென்றதுதான் துரதிர்ஷ்டவசமானது. அவரைப் போலவே அவருக்கு என்ன தெரிந்திருந்ததோ அது நமக்கும் தெரிந்திருக்கிறது. ஆனால் அவர் செய்தது போல் செய்ய முடியாமலும் அவரைப் போல் இறக்க முடியாமலும் இருக்கும் நிலைமை நமக்கு ஏற்பட்டுள்ளது. அவருடைய மரணத்திலிருந்து ஏதாவது ஆதாயம் பெற முடியுமா என்று தங்கள் இயல்புப்படி மக்கள் முயன்று பார்த்தார்கள். ஆனால் எப்படிப் பார்த்தாலும், “நீங்கள் பெருமைக்குரியவராக இல்லை என்பது உண்மை. சரி, நாம் அதை விரிவாகப் பேச வேண்டாம். எல்லாவற்றையும் சிலுவையில் உடனடியாகத் தீர்த்துக்கொள்ளலாம்”, என்று சொன்னது புத்திசாலித்தனமான முடிவாகும். ஆனால் இப்போதெல்லாம் வெகு தூரத்திலிருக்கிற எல்லாருக்கும் தெரியவேண்டும் என்பதற்காகத்தான் நிறைய மனிதர்கள் சிலுவையில் ஏறுகிறார்கள். ஏற்கெனவே அந்த இடத்தில் வெகுகாலமாக இருப்பவரைக் கொஞ்சம் மிதித்துத் தள்ளிவிட்டு ஏறக்கூட அவர்கள் தயங்குவதில்லை. ஏராளமானவர்கள் பெருந்தன்மை என்னும் நல் இயல்பை மறந்துவிட்டுக் கருணை பொழிபவர்களாக வலம் வர முடிவு செய்துவிட்டனர். அந்தோ! என்ன ஓர் அநீதி! அவருக்கு இழைக்கப்பட்ட இந்த அநீதி என் உள்ளத்தைப் பிழிவதாக உள்ளது.

பார்த்தீர்களா, என் பழக்க தோஷம் என்னை விடவில்லை. நான் வாதாடத் தொடங்கிவிடுகிறேன். என்னை மன்னித்துவிடுங்கள். என்னிடமும் சில நியாயங்கள் உள்ளன என்பதை மட்டும் புரிந்து கொள்ளுங்கள். இதோ இங்கிருந்து சில வீதிகள் கடந்துபோனால் ஓர் அருங்காட்சியகத்தைக் காணலாம். அதன் பெயர் ‘மேல்மாடத்தில் உள்ள எங்கள் ஆண்டவர்’. கல்லறைகளை அந்தக் காலத்தில் மேல்மாடத்தில்தான் அமைத்தனர். என்ன செய்வது? இங்கிருந்த கல்லறைக்குழிகள் அனைத்தும் நிரம்பி வழிந்தன. ஆனால் இன்றோ, கவலைப்படாதீர்கள், அவர்களுடைய ஆண்டவர் மேல்மாடத்திலும் இல்லை; கல்லறைக்குழிக்குள்ளும் இல்லை. தங்கள் இதயத்தில் உள்ள இரகசிய அறையில் நீதிபதி அந்தஸ்துக்கு அவரை உயர்த்திவைத்துப் பலமாகத் தாக்குகின்றனர். குறிப்பாக, மதிப்பீடு செய்கின்றனர். ஆண்டவர் பெயரில் தீர்ப்பு சொல்கின்றனர். துரோகம் செய்த பெண்ணிடம் கூட அவர் மென்மையான குரலில், “நானும் உன்னைத் தீர்ப்பிட மாட்டேன்” என்று சொன்னார். ஆனால் அதைப்பற்றியெல்லாம் இவர்களுக்குக் கவலையில்லை. இவர்கள் எவருடைய குற்றங்களையும் மன்னித்து விடுவிக்காமல் தொடர்ந்து தீர்ப்பளித்துக் கொண்டிருக்கின்றனர். “ஆண்டவர் பெயரில் இதுதான் நீ பெறத்தக்க தீர்ப்பு” என்கிறார்கள். ஆண்டவர் பற்றிக் கேட்கிறீர்களா? அவரிடம் இவ்வளவு எதிர்பார்ப்புகள் இல்லை. தான் நேசிக்கப்பட வேண்டும் என்பதைத் தவிர வேறு எதையும் அவர் எதிர்பார்க்கவில்லை. உண்மையில் கிருத்துவர்களிடையேயும் அவரை நேசிப்பவர்கள் இருக்கின்றனர். ஆனால் அவர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். இப்படி நடக்கும் என்றும் அவர் முன்னரே அறிந்து வைத்திருந்தார். அவருக்கு நகைச்சுவை உணர்வு உண்டு. பேதுரு என்ற தொடைநடுங்கியைப் பற்றித்தான் உங்களுக்குத் தெரியுமே. “எனக்கு இந்த ஆள் யார் என்று தெரியாது. என்ன சொல்கிறாய் என்று புரியவில்லை” – இப்படி சிலவற்றைச் சொல்லி ஆண்டவரைக் கைவிட்ட மனிதர். உண்மையில் பேதுரு நடந்துகொண்ட விதம் கொஞ்சம் மிகையானதுதான்! ஆண்டவர் பேச்சில் சொற்சிலம்பம் இருந்தது. “நீ பேதுரு. (பிரெஞ்சு

*மொழியில் பியர், அதாவது பேதுரு என்றால் பாறை). உன் (பாறையின்) மீது என் திருச்சபையை எழுப்புவேன்" என்கிறார். இதுதான் நகைமுரணின் உச்சமாக இருக்க முடியும் இல்லையா? ஆனால் அதுதான் இல்லை. அத்தகைய தொடைநடுங்கிகள் இன்றும் வெற்றிபெறுகிறார்கள். "நான் சொல்வதற்கு ஒன்றும் இல்லை. அவரே கூறிவிட்டார்" என்றும் சொல்கின்றனர். ஆம், அவர் கூறியது உண்மைதான். விளைவுகளைப் பற்றி அவர் முழுமையாக அறிந்திருந்தார்; பிறகு இவர்களை விட்டுவிட்டு நிரந்தரமாக அவர் மறைந்துவிட்டார். இவர்களோ உதட்டில் மன்னிப்பையும் உள்ளத்தில் தண்டனையையும் வைத்துக்கொண்டு மதிப்பீடு செய்யவும் தண்டனை வழங்கவும் தொடங்கினர்.*

*இங்குக் கருணை வற்றிவிட்டது என்று கூறமுடியாது. நல்லவேளையாக நாம் அதை ஓயாமல் பேசி வருகிறோம். சுருக்கமாகச் சொன்னால், யாரும் குற்றத்திலிருந்து சுதந்திரம் பெறுவதில்லை. மரித்துப்போன குற்றமற்றதன்மைமீது நீதிமான்கள் மொய்க்கின்றனர். இந்த நீதிமான்கள் அனைத்துவகைகளையும் சார்ந்தவர்களாக இருக்கின்றனர். இவர்களில் கிருத்துவை மதிப்பீடு செய்தவர்களும் அந்தி கிருத்துவை மதிப்பீடு செய்தவர்களும் அடங்குவர். இரு சாராருமே அசௌகரியத்தை ஏற்றுக் கொண்டவர்கள்தான். மேலும் கிருத்துவர்களை மட்டுமே குற்றம் சாட்டக்கூடாது. மற்றவர்களுக்கும் இதில் பங்குண்டு. இந்த ஊரில் சிந்தனையாளர் தெக்கார்த் வசித்துவந்த வீட்டின் நிலைமை என்ன ஆயிற்று என்று உங்களுக்குத் தெரியுமா? அது மனநலம் குன்றியோர் காப்பகமானது. உண்மைதான். யாருக்கும் ஏற்பட வாய்ப்புள்ள இந்த மனப்பிறழ்வு ஒருவிதமான தண்டனை. நாமும் அத்தகைய நிலையை எட்டும் கட்டாயத்துக்கு இயல்பாகவே ஆளாகிறோம். என் பேச்சில் நான் எதையும் விட்டுவைப்பதில்லை என்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். நான் நினைப்பதைத்தான் நீங்களும் நினைக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். நாம் எல்லாரும் நீதிபதிகள் என்றாகிவிட்டபடியால், அந்தக் கணத்திலிருந்தே நாம் ஒருவருக்கொருவர் குற்றவாளியாக மாறிவிடுகிறோம். நாம் எல்லாரும் கீழ்த்தரமான முறையில் கிருத்துவாக மாறி, ஒருவர் பின் ஒருவராகச் சிலுவையிலிடப்படுகிறோம். அதுவும் எப்பொழுதும் போல் எதற்காக என்று தெரியாமல். . . கிலெமான்ஸ் ஆகிய நான் ஒரு வழியை, ஒரு நிரந்தரத் தீர்வை, அதாவது உண்மையைக் கண்டுபிடிக்காமல் விட்டிருந்தால் ஒருவேளை அப்படித்தான் (கீழ்த்தரமான முறையில் கிருத்துவாக) இருந்திருப்பேன்.*

*நீங்கள் ஒன்றும் பயப்படவேண்டாம். நான் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். மேலும் நான் உங்களிடமிருந்து விடை பெறப்போகிறேன். இதோ என்னுடைய வீடு வந்துவிட்டது. தனிமையில் உள்ளபோது, சோம்பலும் சேர்ந்துகொள்கிறது. என்ன செய்யச் சொல்கிறீர்கள்? நம்மை நாமே ஒரு ஞானியாக நினைத்துக்கொள்ளும் எண்ணம் வந்துவிடுகிறது. ஏனென்றால், நானும் அதுபோன்ற இடத்தில்தான் இருக்கிறேன். பாறைகள், பனிமூட்டம், தேங்கிய நீர் ஆகியவை காணப்படும் வெறுமையான இடம் ஒன்றில் அடைக்கலம் புகுந்துள்ளேன். மோசமான காலகட்டத்தில் ஆற்றலற்ற ஞானியாக இருக்கிறேன். அதாவது நற்செய்தி கொண்டுவரமுடியாத எலிஜாவாக இருக்கிறேன். காய்ச்சலும் மதுவும் ஆட்கொள்ள, பூஞ்சை பிடித்த இந்தக் கதவின் மீது என் முதுகு சாய்ந்திருக்க, மேகக்கூட்டம் நிறைந்த வானத்தை நோக்கிச் சுட்டும் விரலுடன் கிடக்கிறேன். எவ்விதத் தீர்ப்பையும் தாங்கிக்கொள்ள முடியாமல் இருக்கும் இந்த மனிதர்கள், சட்டத்தை மதிக்காதவர்கள். இவர்கள்மீது வசைபாடிக்கொண்டிருக்கிறேன். தீர்ப்பைத் தாங்கிக்கொள்ள அவர்களால் முடியாதென்பதால், ஒட்டுமொத்தப் பிரச்சினையே இங்குதான் ஏற்படுகிறது. சட்டத்தை ஏற்றுக்கொள்பவன் ஒருபோதும் தீர்ப்புக்கு அஞ்சமாட்டான். ஏனெனில் அவன் நம்பும் சட்டத்தின் விதிமுறைக்கு அது உட்பட்டுள்ளது. ஆனால் எவ்விதமான சட்டத்தின் விதிக்கும் உட்படாமல் மதிப்பிடுவதும் தீர்ப்பளிப்பதும்தான் ஒருவன் அனுபவிக்கும் அதிகபட்சத் துன்பமாகும். இருப்பினும், நாம் இத்தகைய அவஸ்தைகளில்தான் உழன்று கொண்டிருக்கிறோம். தங்களுக்கு இயற்கையாக இருக்கவேண்டிய கட்டுப்பாடுகள் இல்லாததால் நீதி வழங்குபவர்கள் தாறுமாறாக*

அதிகமான வேகத்துடன் செயல்படுகின்றனர். எனவே அவர்களை விட வேகமாக நாம் இயங்க முடியுமா என்று எண்ணிப் பார்க்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது அல்லவா? அதுவே ஒரு பெரிய களேபரமாகிவிடுகிறது. உடனே ஞானிகளும் குணமளிப்பவர்களும் பெருகிவிடுகின்றனர். அத்தகைய நபர்கள் நல்லதொரு சட்டத்துடனோ அப்பழுக்கற்ற நிறுவனத்துடனோ உலகம் மனிதர்களற்றுப் போவதற்குள் வந்துசேர விரைகின்றனர். நல்லவேளையாக, நான் வந்துசேர்ந்துவிட்டேன். நானே அந்தமும் ஆதியுமாகும். நான் என் சட்டத்தைப் பிரகடனம் செய்கிறேன். சுருக்கமாகச் சொன்னால், நான் தண்டனைகோரும் நீதிபதி.

சரி, சரி. இந்த மேன்மையான பணியைப்பற்றி நாளைக்குச் சொல்கிறேன். நீங்களும் நாளை மறுநாள் புறப்பட்டாக வேண்டும். எனவே நான் வேகமாகப் பேசியாக வேண்டும். நான் தங்கியிருக்கும் இடத்துக்கு வருவீர்களா? வந்தவுடன் மூன்றுமுறை அழைப்புமணியை அழுத்துங்கள். பாரீஸுக்குத் திரும்புகிறீர்களா? பாரீஸ் தூரத்தில் உள்ளது. அது ஓர் அழகான ஊர். அதை நான் மறக்கவில்லை. ஏறக்குறைய இதே பருவகாலத்தில் நான் கண்ட அந்த நகரத்தின் அந்திப் பொழுதுகள் இன்னும் என் நினைவை விட்டு அகலவில்லை. வறண்ட காற்று எழுப்பும் ஓசையுடன் புகை மண்டிய நீலநிற மேற்கூரைகள்மீது அந்தி சாயும். நகரம் பெரிதாக ஓலமிடும். நதியோ பின்நோக்கி ஓடுவதுபோல் தோன்றும். அத்தகைய அந்திப்பொழுதில், நான் தெருக்களில் சுற்றிக் கொண்டிருப்பேன். இப்பொழுதும் மக்கள் அங்குச் சுற்றிக்கொண்டிருப்பர் என்று எனக்குத் தெரியும். சோர்ந்துபோயுள்ள மனைவியையும் கட்டுப்பாடுகள் நிறைந்த வீட்டையும் நோக்கி விரைவதுபோலப் பாசாங்கு செய்வர். யோசித்துப் பாருங்கள். பெரிய நகரங்களில் தனித்துவிடப்பட்ட ஒருவன் இவ்வாறு பெருநகரங்களில் சுற்றி அலையும்போது அவன் எப்படி இருப்பான் என்று உங்களுக்குத் தெரியுமா?



நீங்கள் என் வீட்டுக்கு வந்திருக்கும்போது, படுக்கையில் இருந்தபடி உங்களை வரவேற்பது எனக்குச் சங்கடமாக இருக்கிறது. வேறு ஒன்றுமில்லை. சாதாரணக் காய்ச்சல்தான். ஜின்னின் உதவியோடு குணமடைந்து வருகிறேன். இத்தகைய உடல் உபாதைகள் எனக்குப் புதிதல்ல. இது மலேரியா என்று நினைக்கிறேன். நான் போப்பாக இருந்த காலத்தில் எனக்குத் தொற்றிய நோயாக இருக்கலாம். இல்லை, நான் சொல்வதில் பாதிதான் நகைச்சுவை. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். அதாவது, நான் சொல்வதில் பொய்யிலிருந்து உண்மையைப் பிரித்து எடுப்பது கஷ்டமாக உள்ளது இல்லையா? நீங்கள் நினைப்பது சரிதான். எனக்குத் தெரிந்த ஒருவர் மனிதர்களை மூன்றுவகைகளாகப் பிரிப்பார். பொய் சொல்ல வேண்டிய கட்டாயத்தில் இருப்பதைவிட மறைக்க எதுவுமின்றி இருக்க விரும்புபவர்கள் முதல்வகை. மறைக்க எதுவுமின்றி இருப்பதைவிடப் பொய் சொல்வதை விரும்புபவர்கள் இரண்டாவது வகை. மறைப்பதையும் பொய் சொல்வதையும் விரும்புபவர்கள் மூன்றாம் வகை. எனக்கு எந்த வரிசை பொருத்தமாக இருக்கும் என்று தேர்ந்தெடுக்கும் முடிவை உங்களிடமே விட்டுவிடுகிறேன்.

ஆனால் எதுவாக இருந்தால்தான் எனக்கென்ன? இறுதியில், பொய்கள் நம்மை உண்மையை நோக்கித்தானே அழைத்துச் செல்கின்றன? உண்மையோ பொய்யோ நான் விவரித்த அனைத்தும் இதே முடிவை நோக்கித்தான் செல்கின்றன அல்லவா? அவை அனைத்துக்கும் பொருள் ஒன்றுதானே? எனவே அவை உண்மையாக இருந்தாலும் பொய்யாக இருந்தாலும் நான் என்னவாக இருந்தேனோ, என்னவாக இருக்கிறேனோ அதில் அவற்றுக்குக் குறிப்பிடத்தக்க இடம் உண்டு. சில நேரங்களில், உண்மை பேசுபவனை விடப் பொய் பேசுபவன் சொல்வது தெளிவாகப் புரியும். உண்மை ஒளியைப் போன்றது, கண்களைக் கூசவைக்கும். மாறாகப் பொய் என்பது அழகான அந்திவெளிச்சத்தைப் போன்றது. ஒவ்வொரு பொருளையும் தெளிவாகக் காட்டும். சரி, எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளுங்கள். ஆனால், என்னைக் கைதிகள் முகாமொன்றில் போப்பாக நியமித்தனர் என்பதைச் சொல்லியாகவேண்டும்.

தயவுசெய்து உட்காருங்கள். இந்த அறையைக் கவனித்துக் கொண்டு இருக்கிறீர்கள். இது வெறிச்சோடிக் கிடப்பது உண்மைதான், ஆனால் சுத்தமாக இருக்கிறது. மேஜை நாற்காலிகளோ செப்புப் பாத்திரங்களோ இல்லாத வெர்மீர் ஓவியக்காட்சியை ஒத்திருக்கும் தோற்றம். புத்தகங்களும் இங்கு இல்லை. ஏனெனில் நான் வாசிப்பதை நிறுத்திப் பலநாட்களாகி விட்டன. ஒரு காலத்தில், என் வீடு முழுவதும் பாதி படித்து முடித்த புத்தகங்கள் குவிந்துகிடக்கும். புவாகிரா என்னும் உணவு வகையை எடுத்துக்கொள்ளுங்கள். பெரிய புவாகிராவில் ஒரு பகுதியை மட்டும் வெட்டிச் சாப்பிட்டபின் மீதியைத் தூக்கி வீசுவதை விடவும் இப்படி பாதிப் புத்தகத்தை மட்டும் படிக்கும் செய்கை அருவருப்பானது. மேலும் தம் தவறுகளைப் பகிர்ந்துகொள்ளும் பதிவுகளே எனக்குப் பிடிக்கும். ஆனால் அத்தகைய பதிவுகளைக் கொண்ட நூல்களின் ஆசிரியர்கள் தம் குற்றத்தை ஒப்புக்கொள்வதைத் தவிர்க்கவும் தங்களுக்குத் தெரிந்ததை யாருக்கும் சொல்லாமல் இருக்கவும்தான் எழுதுகின்றனர். குற்றத்தை ஏற்றுக்கொள்ள அவர்கள் தயாராவது போல் பாசாங்கு செய்யும் நேரத்தில் நாம் விழிப்பாக இருக்க வேண்டும். ஏனெனில், பிணத்துக்கு ஒப்பனை செய்யப் போகின்றனர் என்று பொருள். நான் அதில் கைதேர்ந்தவன். என்னை நம்புங்கள். நான் சொல்வது சரியாக இருக்கும். எனவே எல்லாவற்றையும் நான் நிறுத்திக்கொண்டேன். இனிப் புத்தகங்கள் இல்லை; எந்தவொரு உபயோகமற்ற பொருளுக்கும் இடமில்லை. அத்தியாவசியமான பொருட்கள் கொண்ட அறை மட்டும் எனக்குப் போதும். அது சுத்தமான, பளபளப்பான ஒரு சவப்பெட்டியைப்போல் இருக்க வேண்டும். மேலும் இந்த ஹாலந்துநாட்டுக் கட்டில்கள் அதிக உறுதியானவை. பளிச்சென்ற வெள்ளை விரிப்புடன், பரிசுத்தம் என்னும் போர்வையால் போர்த்தப்பட்டு அக்கட்டிலில் பாடம் செய்யப்பட்ட

பிணம் போல் கிடப்போம்.

நான் போப்பாக இருந்தகாலத்தில் நேர்ந்த அனுபவங்களைத் தெரிந்துகொள்ள ஆர்வமாக இருக்கிறதா? உண்மையில் அசாதாரணமாக எதுவும் இல்லை. அவற்றைப் பற்றி உங்களுக்குச் சொல்ல எனக்குப் போதிய பலம் இருக்குமா? சரி, காய்ச்சல் குறைவது போல் தெரிகிறது. அவையெல்லாம் நிகழ்ந்து நீண்ட காலமாகிறது. ஆப்பிரிக்காவில் ரொமெல் என்ற ஒரு நபரின் தயவால் முழுவீச்சில் போர்நடந்துகொண்டிருந்தது. இல்லை, எனக்கு அதில் தொடர்பு இல்லை. கவலைப்படாதீர்கள். ஏற்கெனவே ஐரோப்பாவில் நடந்த போரில் கலந்துகொள்ளாமல் தப்பித்திருக்கிறேன். போர்க்களத்துக்கு அனுப்பப்பட்டேன். ஆனால் நான் போரில் பங்கேற்கவில்லை. ஒருவகையில், நான் அதற்காக வருத்தப்படுகிறேன். ஒருவேளை, பங்கேற்றிருந்தால் அது பல விஷயங்களை மாற்றியிருக்கலாம் அல்லவா? போர்முனையில் என் பங்கெடுப்புப் பிரெஞ்சுப்படைக்குத் தேவைப்படவில்லை. பின்வாங்கும் சடங்கில்தான் அது என்னைக் கலந்து கொள்ளும்படிப் பணித்தது. பிறகு நான் பாரீஸுக்குத் திரும்பினேன்.ஜெர்மானிய மக்கள்மீது என் பார்வை திரும்பியது. அதன்பின் ஜெர்மனியைச் சமாளிக்க இயங்கிய தலைமறைவு அமைப்பு ஒன்று என்னை ஈர்த்தது. அந்த அமைப்பைப் பற்றி மக்கள் பேசத் தொடங்கியிருந்த அந்த நேரம்தான் நான் நாட்டுப் பற்றுடையவன் என்பதை உணர்ந்தேன். என்ன சிரிக்கிறீர்களா? நீங்கள் நினைப்பது தவறு. என் நாட்டுப்பற்றை நான் கண்டுபிடித்தது பாரீஸில் உள்ள ஷத்தலே மெட்ரோ நிலையத்தில் உள்ள நடைபாதையில்தான். நாயொன்று தன் உரிமையாளரைத் தவறவிட்டு அலைந்துகொண்டிருந்தது. தொங்கு முடியும், குறுகுறு கண்களுமாய் இருந்த அந்தப் பெரிய நாயின் ஒருபக்கக் காது மடங்கியிருந்தது. குதித்தபடி ஓடிக்கொண்டிருந்த நாய், தன்னைக் கடந்து செல்பவர்களின் பாதங்களை முகர்ந்து பார்த்தது. நாய்களின் மீது வெகுகாலமாகவே எனக்கு உண்மையான பாசம் உண்டு. அவற்றை எனக்குப் பிடிப்பதற்குக் காரணம் அவை எப்பொழுதுமே மன்னிக்கும் குணம் கொண்டவை. அந்த நாயைக் கூப்பிட்டேன். முதலில் தயங்கினாலும், எனக்குச் சில மீட்டர் தூரத்தில் அந்த நாய் உற்சாகத்தோடு வாலைக் குழைத்துக்கொண்டே வந்த விதத்தைப் பார்த்தபோது அதற்கும் என்னைப் பிடித்துவிட்டது என்று நன்றாகத் தெரிந்தது. அந்த நேரம் பார்த்து, அந்த வழியாக வேகமாக வந்த இளம் ஜெர்மானியப் படைவீரர் ஒருவர் என்னைக் கடந்து சென்றார். நாயின் அருகே குனிந்து அதன் தலையைத் தடவிக்கொடுத்தார். எவ்விதத் தயக்கமும் இல்லாமல் அதே உற்சாகத்துடன் அவருடன் அந்த நாய் சென்றுவிட்டது. அந்த ஜெர்மானிய வீரர்மீது ஏற்பட்ட கசப்புணர்வும் கடுங்கோபமும் என்னிடம் இருந்த நாட்டுப்பற்றைத் தெளிவாக்கின. அந்த நாய் ஒரு பிரெஞ்சுக் குடிமகனுடன் சென்றிருந்தால் அதைப்பற்றி நான் நினைத்துக்கூடப் பார்த்திருக்க மாட்டேன். மாறாக, வாஞ்சையாக இருந்த அந்த நாயை ஜெர்மானியப் படையின் நற்சகுனமாக நான் கற்பனை செய்து பார்த்தபோது அது என்னைக் கடுங்கோபத்தில் ஆழ்த்தியது. எனவே என் நாட்டுப்பற்று குறித்த இந்தப் பரிசோதனை திருப்திகரமாக இருந்தது என்றே சொல்ல வேண்டும்.

பகைநாடுகளுக்கெதிரான தலைமறைவு இயக்கத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளும் குறிக்கோளுடன் தென்பகுதியை வந்தடைந்தேன். ஆனால், அங்குள்ள களநிலவரத்தைத் தெரிந்துகொண்டதும் தயங்கினேன். அந்த நடவடிக்கை கொஞ்சம் சிறுபிள்ளைத்தனமாகவும், சுருக்கமாகச் சொன்னால், சாத்தியமற்ற சாகசமாகவும் இருந்தது. குறிப்பாகப் பதுங்குகுழி நடவடிக்கைகள் என் போக்குக்கோ, காற்றோட்டம் நிறைந்த உயரமான இடங்களை விரும்பும் என் இயல்புக்கோ ஏற்றவையாக இல்லை. எனக்கு எப்படி இருந்ததென்றால், என்னை ஒரு குகையில் அடைத்து நெசவு செய்ய வைத்தது போலவும், பின்னர் சில வீணர்கள் எப்படியோ என்னைக் கண்டுபிடித்து வந்து நான் நெசவு செய்ததையெல்லாம் அழித்துவிட்டு வேறொரு குகைக்கு இழுத்துச் சென்று நான் சாகும்வரை அடித்துப் போட்டது போலவும் இருந்தது.

இத்தகைய ஆழமான பகுதிகளில் சிலர் மேற்கொண்ட சாகசங்களைக் கண்டு வியந்திருக்கிறேன். ஆனால், அவர்களைப் போல் என்னால் இயங்க முடிந்ததில்லை.

எனவே நான் இலண்டன் செல்லலாம் என்ற தோராயமான திட்டத்துடன் வட ஆப்பிரிக்காவுக்குச் சென்றேன். ஆனால், ஆப்பிரிக்காவில் நிலைமை தெளிவாக இல்லை. அங்குப் போட்டியில் இருந்த இரண்டு தரப்பினரிடமும் நியாயம் இருப்பதாகத் தெரிந்ததால் நான் எதிலும் ஆர்வம் காட்டாமல் ஒதுங்கியே இருந்தேன். ஓரளவு முக்கியத்துவம் வாய்ந்த இந்த விஷயங்களை அதிகமாக விவரிக்காமல் நான் வேகமாகக் கடந்துசெல்வதாக நீங்கள் நினைப்பது உங்கள் முகபாவத்திலிருந்து தெரிகிறது. சரி, இப்படி வைத்துக்கொள்வோம். உங்கள் உண்மையான மதிப்பை வைத்து உங்களை எடைபோட்ட பின், இந்த விஷயங்களைச் சொல்லாமல் தவிர்ப்பதற்குக் காரணம் அவற்றின் மீது நீங்கள் அதிகமான கவனம் செலுத்துவீர்கள் என்பதற்காகத்தான். எப்படியோ இறுதியில் துனீஸியா சென்றடைந்தேன். அங்கே நெருக்கமான நண்பர் ஒருவர் எனக்கு வேலை கொடுத்தார். அந்தப் பெண் நண்பர் நல்ல அறிவாளி. திரைப்படத்துறையைச் சேர்ந்தவர். அவருடன் துனீஸ் சென்றேன். கூட்டுப்படைகள் அல்ஜீரியாவில் வந்திறங்கிய சில நாட்களுக்குப் பின்புதான் அவருடைய உண்மையான தொழில் என்னவென்று தெரிந்தது. அன்று ஜெர்மானிய வீரர்களால் அவர் கைது செய்யப்பட்டார். நானும் கைதானேன். ஆனால் அதை நான் எதிர்பார்க்கவில்லை. அதன் பின் அந்தப் பெண் என்ன ஆனார் என்று எனக்குத் தெரியாது. என் விஷயத்தில், அவர்கள் என்னை எதுவும் செய்யவில்லை. அதிகமான மனஉளைச்சலுக்குப் பிறகு, அது முற்றிலும் பாதுகாப்புக் காரணங்களுக்காக என்பதைப் புரிந்துகொண்டேன். திரிப்போலி அருகில் உள்ள முகாம் ஒன்றில் என்னை அடைத்து வைத்திருந்தனர். அங்கு நடந்தேறிய மற்ற கொடுமைகளை விடத் தாகமும் தனிமையும் எங்களுக்குப் பெரும்துன்பமாக இருந்தன. அவற்றை நான் உங்களிடம் விளக்கப்போவதில்லை. இந்த நூற்றாண்டின் முதல்பாதியைச் சேர்ந்தவர்களான நமக்கு இத்தகைய இடங்களைக் கற்பனை செய்து பார்க்க வரைபடம் எதுவும் தேவைப்படாது. நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு, ஏரிகளையும் காடுகளையும் கண்டு மக்கள் உணர்ச்சிவயப்பட்டனர். இன்றோ சிறைச்சாலையைக் கண்டு உணர்ச்சிவயப்படுகிறோம். எனவே இந்த விஷயத்தை உங்கள் முடிவுக்கே விட்டுவிடுகிறேன். நீங்கள் அதனுடன் மேலும் சில தகவல்களை மட்டும் சேர்க்க வேண்டியிருக்கும். அதாவது வெப்பம், உச்சிச் சூரியன், ஈக்கள், மணல், தண்ணீர்ப் பற்றாக்குறை – முதலியவை பற்றிய தகவல்களை.

கடவுள் நம்பிக்கையுடைய பிரெஞ்சுக்காரன் ஒருவன் என்னுடன் இருந்தான். ஆம், நிச்சயமாக அது ஒரு சுவாரசியமான கதைதான். நம் துய்கெஸ்கலன் (நூற்றாண்டுப் போரின் தொடக்கத்தில் வீர சாகசங்கள் புரிந்த பிரெஞ்சு வீரர்) கதை போன்றது என்று வைத்துக்கொள்ளுங்கள். அவன் பிரான்ஸிலிருந்து ஸ்பெயினுக்குப் போரிடச் சென்றான். கத்தோலிக்கரான பிராங்கோ என்ற படைத்தலைவர் அவனைச் சிறையில் அடைத்தார். அந்தத் தளபதியின் முகாமில் இருந்த முரடர்களுக்கு ரோம் அளித்துவந்த ஆசிர்வாதத்தைக் கண்ட அவன் பெரும் சோகத்தில் ஆழ்ந்தான். அடுத்ததாக, தான் சென்றடைந்த ஆப்பிரிக்க நாட்டின் வானமோ, முகாமில் தான் கலந்துகொண்ட பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளோ இந்தச் சோகத்திலிருந்து அவனை விடுவிக்கவில்லை. ஆனால் அவனது சிந்தனைகளும் அந்தச் சூரியனும்தான் அவன் மனதைப் பேதலிக்க வைத்தன. ஒருநாள், வெயிலால் உருகும்படியிருந்த கூடாரத்தில், ஈக்களின் மத்தியில் நாங்கள் பத்துப்பதினைந்து பேர் மூச்சுவிடச் சிரமப்பட்டுக் குழுமியிருந்தோம். ரோமானியர் என்று அவனால் சுட்டப்பட்ட போப்பாண்டவருக்கு எதிராக மீண்டும் நீளமானதொரு வசவுரையைச் செய்தான். பலநாள் மழிக்கப்படாத தாடியுடன் அவன் எங்களைக் கோபமாகப் பார்த்தான். திறந்திருந்த அவனது மார்பின் மேல் வியர்வை போர்வையிட்டிருந்தது. இருபுறமும் தெரிந்த விலா எலும்புகளெனும் தந்திக்கட்டைகளின் மீது அவனது விரல்கள் பியானோ வாசித்தன. புதிய போப் ஒருவர் தேவைப்படுவதன்

அவசியத்தை வலியுறுத்தினான். சிம்மாசனத்தில் அமர்ந்தபடிப் பிரார்த்தனை செய்துகொண்டிருக்காமல் துன்பத்தில் உழல்பவர்கள் மத்தியில் வாழ்பவராக அவர் இருக்க வேண்டும் என்றும் அப்படி ஒருவரைக் கூடிய விரைவில் பெற்றாக வேண்டும் என்றும் சொன்னான். தன் தலையை ஆட்டியபடி எங்களைக் கோபமாக உற்றுப் பார்த்தான். அவன் மீண்டும் ஒருமுறை, "ஆம்! எவ்வளவு விரைவாக முடியுமோ அவ்வளவு விரைவாக!" என்றான். பிறகு திடீரென அமைதியானான். மெலிதான குரலில், நம்மிடையே இருப்பவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றான். குற்றங்களும் நல் இயல்புகளும் கொண்ட ஒரு முழுமையான மனிதனாகப் பார்த்துத் தேர்ந்தெடுத்து அவருக்குப் பணிந்து நடப்போம் என்று உறுதியேற்க வேண்டும். ஒரே நிபந்தனை. தம் துயரங்களைப் பகிர்ந்துகொள்ளும் மனோபாவத்தைத் தம்மிடமும் மற்றவர்களிடமும் குன்றாமல் பார்த்துக்கொள்ள அவர் சம்மதிக்க வேண்டும் என்றும் கூறினான்.

"நம்மிடையே, யாருக்கு அதிகமான பலவீனங்கள் உள்ளன?" என்று கேட்டான். வேடிக்கையாக நான் விரலை உயர்த்தினேன். அப்படி நான் மட்டும்தான் செய்தேன். "சரி, ழான் பத்தீஸ்த் தான் சரியான ஆள்" என்று சொல்லிவிட்டான். இல்லை, அவன் அந்தப் பெயரைப் பயன்படுத்தவில்லை. ஏனெனில் அப்பொழுது எனக்கு வேறு ஒரு பெயர் இருந்தது. நான் செய்வதைப் போல், தன்னைத்தானே நியமித்துக்கொள்வதும் மிகப்பெரிய நல்லியல்புதான் என்பதை மட்டுமாவது தெளிவுப்படுத்த அவன் என் பெயரை முன்மொழிந்தான். மற்றவர்கள் அதை வழிமொழிந்தனர். முற்றிலுமாக அவர்கள் வேடிக்கைக்காகத்தான் அப்படி செய்தனர் என்று சொல்லமுடியாது. உண்மை என்னவென்றால், துய்கெஸ்கலனின் பாதிப்பு நம்மிடையேயும் இருந்தது. நானே கூட முழுமையாகச் சிரித்ததாகச் சொல்ல முடியாது. முதலாவதாக, என்னைத் தேர்ந்தெடுத்த அந்தச் சிறிய ஞானி சொல்வது சரி என முடிவு செய்தேன். மேலும் அந்தச் சூரியனின் வெப்பம், கடும் உழைப்பைப் பிழியும் வேலைகள், தண்ணீருக்கான போராட்டம் ஆகியவற்றின் காரணமாக நாங்கள் சௌகரியமாக இல்லை. எப்படி பார்த்தாலும், போப்புக்குரிய என் பொறுப்பைப் பல வாரங்கள் பெரும் ஈடுபாட்டுடன் செய்து வந்தேன்.

அது என்ன மாதிரியான பொறுப்பு என்று கேட்கிறீர்களா? நல்லது. என்னை ஒரு குழுவுக்குத் தலைவர் என்று சொல்லலாம். அல்லது, ஒரு சிறைச்சாலையின் செயலாளர் என்று வைத்துக்கொள்ளலாம். அங்கிருந்த அனைவரும் என்னிடம் பணிந்து நடக்கப் பழகிக்கொண்டனர். அவர்களில் கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களும் இருந்தனர். நம் துய்கெஸ்கலன் அதிகமான துன்பத்தை அனுபவித்தான். அவன் துயரத்துக்கு நான் ஆறுதல் அளித்தேன். போப்பாக இருப்பது நான் நினைத்தது போல் அவ்வளவு எளிதல்ல என்று அப்பொழுது எனக்குப் புரிந்தது. நம் சகோதரர்களான நீதிபதிகள்மீது வெறுப்பை உமிழும்படியாக நேற்று நான் உங்களிடம் பேசிய பின்னர்தான் அது என் நினைவுக்கு வந்தது. முகாமில் இருந்த முக்கிய பிரச்சினை, தண்ணீர்ப் பங்கீடு. அரசியல் குழுக்கள், சமயக்குழுக்கள் என வேறு சில குழுக்களும் உருவாகித் தத்தமது தோழர்களுக்குச் சலுகை காட்டிவந்தன. இதன் காரணமாக, நானும் என் தோழர்களுக்கு ஆதரவாக நடந்துகொள்ளும் நிலைக்கு ஆளானேன். அதாவது சலுகை காட்ட ஆரம்பித்துவிட்டேன் என்று சொல்லலாம். எங்களுக்கிடையே கூட முழுமையான நடுநிலையோடு என்னால் நடந்துகொள்ள இயலவில்லை. எனக்குத் தெரிந்த தோழர்களின் சூழ்நிலைக்கேற்பவோ அவர்கள் செய்ய வேண்டிய வேலையைப் பொறுத்தோ சில விஷயங்களில் சலுகை காட்டி வந்தேன். அத்தகைய பாகுபாடுகளின் விளைவுகள் ஏராளமானவை என்பது நிச்சயம். எனினும், உண்மையில் எனக்குச் சலிப்பு ஏற்பட்டுவிட்டது. மேலும் அந்தக் காலகட்டத்தை இப்போதெல்லாம் நினைத்துப் பார்க்க விரும்புவதில்லை. சாகும் தறுவாயில் இருந்த நண்பன் ஒருவனின் தண்ணீரை எடுத்துக் குடித்த அந்த நாளில்தான் என் நடவடிக்கைகளுக்கு முற்றுப்புள்ளி வைத்தேன் என்று சொல்லலாம். இல்லை இல்லை. அந்த நண்பன்

துய்கெஸ்கலன் கிடையாது. அவன் இறந்துவிட்டான் என்று நினைக்கிறேன். அவன் அதிகமாகத் தனிமையில் இருக்க விரும்புவான். அந்த இடத்தில் அவன் இருந்திருந்தால், எங்களிடையே இருந்த நெருக்கத்தின் காரணமாக மேலும் கொஞ்ச நேரம் தாகத்தை அடக்கியிருப்பேன். ஆம், அவனை மிகவும் நேசித்தேன்; அல்லது அப்படித்தான் என நினைக்கிறேன். ஆனால் நான் தண்ணீரைக் குடித்து விட்டேன் என்பது மட்டும் உண்மை. இறப்பது நிச்சயமெனத் தெரிந்த அவனை விட மற்றவர்களுக்கு நான்தான் அதிகமாகத் தேவைப்படுபவனாக இருந்தேன் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. எனவே, அவர்களுக்காக நான் உயிரோடு இருந்தாக வேண்டிய கடமை இருந்ததால் நான் தண்ணீரைக் குடித்தேன். ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். இவ்வாறாகத்தான் மரணமெனும் சூரியனின் கீழ் அரசுகளும் தேவாலயங்களும் உருவாகின்றன. நேற்று நான் உங்களிடம் பேசிய விஷயங்களெல்லாம் உண்மையில் என் வாழ்க்கையில் நடந்தவையா அல்லது கனவில் வந்தவையா என்றும் தெரியவில்லை. நான் பேசியவற்றில் சில திருத்தங்களைச் செய்யவேண்டும் என்பதால், நான் பேசியபோது என் மனதில் உதித்த பெரிய திட்டத்தை உங்களிடம் சொல்லிவிடுகிறேன். போப்புக்கு மன்னிப்பு வழங்க வேண்டும் என்பதுதான் அந்தத் திட்டம். முதல் காரணம், மற்றவர்களைக் காட்டிலும் அவருக்கு அது அதிகமாகத் தேவைப்படுகிறது. அடுத்ததாக, மற்ற எல்லாரையும் விட உயர்ந்த நிலையில் தன்னை நிறுத்திக்கொள்ள இதுதான் அவருக்குள்ள ஒரே வழி.

கதவை நன்றாக மூடிவிட்டீர்களா? என்ன மூடிவிட்டீர்களா? தயவு செய்து எதற்கும் ஒரு முறை மீண்டும் சரிபாருங்கள். மன்னிக்க வேண்டும். எனக்குப் பூட்டினோமா இல்லையா என்று சந்தேகப்படும் மனநோயான 'பூட்டு நோய்' உள்ளது. தூங்கப்போகும் நேரத்தில், தாழ்ப்பாளைப் போட்டேனா இல்லையா என்று மறந்துவிடுவேன். ஒவ்வொரு நாளும் இரவு நேரத்தில் எழுந்து போய்ச் சரிபார்த்தாக வேண்டும். நான் முன்பே உங்களுக்குக் கூறியிருப்பது போல் எதைப்பற்றியும் ஒருவரால் உறுதியாக இருக்க முடியாது. தாழ்ப்பாளினை முறையாகப் போட்டேனா என்று கவலைப்படும் என் இயல்பை, அச்சத்திலுள்ள வீட்டுஉரிமையாளர் ஒருவருக்கான எதிர்வினையாகக் கருதவேண்டாம். அந்தக் காலத்தில் நான் வசித்துவந்த அடுக்குமாடிக் குடியிருப்பு இல்லத்தையோ என் காரையோ கூட நான் பூட்டுவதில்லை. என் பணத்தையும் பூட்டிவைக்கமாட்டேன். எனக்குச் சொந்தமானவை மீது அதிகப் பற்றுவைக்கமாட்டேன். உண்மையைச் சொல்வதென்றால், எதையும் சொந்தம் கொண்டாட எனக்குக் கொஞ்சம் வெட்கமாகவும் இருந்தது. மேல்தட்டு மக்களிடம் உரையாடும்போது, "உடைமை என்பது கொலைக்குச் சமமானது" என்று சில நேரங்களில் உறுதியோடு முழக்கமிட்டுள்ளேன். தேவைப்படும் ஓர் ஏழைக்குச் செல்வத்தைப் பகிர்ந்தளிக்கக்கூடிய அளவுக்கு எனக்கு மனம் இல்லை. எனவே, அதை என்னிடம் வரக்கூடிய திருடர்கள் எடுத்துக்கொள்ளட்டும் என்று விட்டுவிடுவேன். என்னால் நேர்ந்துவிட்ட அநீதியை இதன்மூலம் ஏதோ ஒருவகையில் சரிசெய்யலாம் என்ற நம்பிக்கையில் அப்படி செய்வேன். மேலும் இப்பொழுது என்னிடம் எதுவும் இல்லை. எனவே என் பாதுகாப்பு குறித்து எவ்விதக் கவலையும் எனக்கில்லை. என் கவலையெல்லாம் என் மனநிலை பற்றியும் தற்சமயம் எனக்குள்ள சமயோஜிதம் பற்றியும்தான். மேலும் அடைக்கப்பட்டுள்ள இந்தச் சிறு உலகத்தின் வாயிலை மூடிவிட வேண்டும் என்ற ஆவல் என்னிடம் உள்ளது. ஏனெனில், அதில் நானே அரசனாகவும் போப்பாகவும் நீதிபதியாகவும் இருக்கிறேன்.

அது போகட்டும், அந்தச் சுவர்அலமாரியைக் கொஞ்சம் திறக்க முடியுமா? ஆம், அந்த ஓவியம்தான். அதைப்பாருங்கள். அது உங்களுக்கு நினைவுக்கு வருகிறதா? அது தான் 'நாணயமான நீதிபதிகள்'. உங்களுக்கு அதிர்ச்சியாக இல்லையா? அப்படியானால் கலாச்சாரம் குறித்த உங்கள் பொதுஅறிவில் சில போதாமைகள் உள்ளன என்றுதானே நினைக்கமுடியும்? எனினும் நீங்கள் செய்தித்தாள்களை வாசித்திருந்தால், 1934ஆம் ஆண்டு, கெண்ட் நகரில் உள்ள புனித பவன் தேவாலயத்தில் நிகழ்ந்த திருட்டுச்சம்பவம் ஒன்று உங்கள் நினைவுக்கு வரக்கூடும். அப்பொழுது, புகழ்பெற்ற ஓவியர் வான் எய்க்

தீட்டிய ஓவியங்களில் ஒன்றான 'புனித ஆட்டுக்கட்டி' என்னும் ஓவியம் களவு போனது. அந்த ஓவியத் தொகுப்பின் பெயர் 'நாணயமான நீதிபதிகள்'. அந்தப் புனித ஆட்டுக்குட்டியை ஆராதிக்க நீதிபதிகள் குதிரைகளில் வருவதை விவரிக்கும் காட்சி அது. அசல் ஓவியத்தைக் கண்டுபிடிக்க முடியாததால், அதற்குப் பதிலாக அற்புதமான மாற்று ஓவியம் ஒன்றை அங்கு வைத்துவிட்டனர். நல்லது. இதோ, இதுதான் அந்த ஓவியம். இல்லை. எனக்கும் அதற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. மெக்ஸிக்கோ சிட்டியின் வாடிக்கையாளர் ஒருவர் இதை ஒருநாள் இரவு நல்ல போதையில் ஒரு பாட்டில் மதுவுக்காக மதுக்கூட உரிமையாளரான அந்தக் கொரில்லாவிடம் விற்றுவிட்டார். ஒருநாள் மாலை, அந்த வாடிக்கையாளரை நீங்களும் கூடப் பார்த்து இருக்கிறீர்கள். முதலில் அதனை மரியாதைக்குரிய இடமாகப் பார்த்து மாட்டிவைக்கும்படி நம் மதுக்கடை ஆசாமிக்கு அறிவுரை வழங்கினேன். கடமையுணர்வுடைய நம் நீதிபதிகளை உலகம் முழுவதும் தேடிக் கொண்டிருந்தனர். அதே நேரத்தில் குடிகாரர்களும் இடைத்தரகர்களும் மது அருந்தும் இடத்துக்கு மேலே, நம் நீதிபதிகள் சிம்மாசனம் போட்டு வீற்றிருந்தனர். அதன் பின்னர், என் கோரிக்கையை ஏற்றுக்கொண்ட அந்தக் கொரில்லா, இங்கே என் பாதுகாப்பில் இருக்கும்படி அதனை வைத்தான். முதலில் கொஞ்சம் தயங்கி முகம் சுழித்தான். ஆனால் நான் விஷயத்தை விளக்கியதும் அவனுக்குப் பயம் வந்துவிட்டது. அந்த நொடி முதல், மேன்மையுடைய இந்த நீதிபதிகள்தான் என் ஒரே துணையாக இருந்து வருகின்றனர். அங்கே மெக்ஸிக்கோ சிட்டியில் மது அருந்தும் இடத்துக்கு மேல் இவர்கள் எத்தகைய வெற்றிடத்தை ஏற்படுத்திவிட்டார்கள் என்பதைத்தான் நீங்கள் பார்த்தீர்களே?

இந்த ஓவியத்தை நான் ஏன் திருப்பித்தரவில்லை? ஆ! ஆ! உங்களுக்கு போலீஸ் மூளை. ஆமாம் உங்களுக்கு அது இருக்கிறது! இருக்கட்டும். இந்த ஓவியம் என் அறையில் இருப்பதை யாராவது கண்டுபிடிக்க நேர்ந்தால், அப்பொழுது இந்தப் பகுதியின் அரசு விசாரணை அதிகாரி கேட்கக்கூடிய கேள்விகளுக்குப் பதிலளிப்பது போல் நினைத்து உங்கள் சந்தேகத்துக்குப் பதில் சொல்கிறேன். முதலாவதாக, இது எனக்குச் சொந்தமானது அல்ல. மெக்ஸிக்கோ சிட்டியின் உரிமையாளருடையது. கெண்ட் பகுதியின் ஆயருக்கு இதன்மீதுள்ள அதே உரிமை மதுவிடுதியின் உரிமையாளருக்கும் உண்டு. அடுத்த காரணம், 'புனித ஆட்டுக்கட்டி' ஓவியத்தின் முன், வரிசையாக நின்று பார்த்துச் சென்றவர்களில் யாருக்கும் அசல் எது நகல் எது என்ற வித்தியாசம் தெரியவில்லை. எனவே நான் செய்த தவறால் யாரும் பாதிக்கப்படவில்லை. மூன்றாவது காரணம், இப்படிச் செய்வதன் மூலம் நான் சூழலின் மேல் ஆளுமை செலுத்துகிறேன். உலகில் உள்ளவர்கள் போலி நீதிபதிகளைப் பார்த்து வியந்துகொண்டிருக்க, நான் மட்டுமே உண்மையான நீதிபதிகளை அறிவேன். நான்காவது காரணம், இதன்மூலம் சிறைக்குச் செல்ல எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கிறது. ஒருவகையில், இது யாரையும் எளிதில் கவரக்கூடியதொரு திட்டம். ஐந்தாவது காரணம், அந்த ஆட்டுக்குட்டியைப் பார்க்க அது இருக்கும் இடத்தைநோக்கி நீதிபதிகள் செல்கிறார்கள். முன்னர் இருந்த ஆட்டுக்குட்டியோ அப்பாவித்தனமோ எதுவும் இப்போது இல்லை. இத்தகைய சூழல்களின் காரணமாக ஓவியத்தைத் திருடிய அந்தச் சாமர்த்தியமான திருடன் புதியதொரு நீதியைப் பெறுவதற்கான கருவியாகிறான். அந்த நீதியை நாம் விமர்சிக்காமல் இருப்பது நல்லது. கடைசிக் காரணம், இத்தகைய வழியால் அனைத்தும் சீரான நிலைக்குத் திரும்பிவிடுகின்றன. நீதியை நிரந்தரமாகக் குற்றமற்ற தனத்திலிருந்து பிரித்தாகிவிட்டது. குற்றமற்ற தனம் சிலுவையில் இருக்க, நீதியோ சுவர் அலமாரியில் இருக்கிறது. எனவே நான் உறுதியாக நம்பும் விஷயங்களின் அடிப்படையில் பணியாற்ற எனக்கு எவ்விதத் தடையும் இல்லை. தண்டனைகோரும் நீதிபதியெனும் கடினமான பணியைத் தெளிவான மனச்சாட்சியோடு இனி என்னால் செய்ய இயலும். பல இன்னல்களையும் முரண்பாடுகளையும் கடந்த பிறகே இப்பணியில் நான் இயங்கத் தொடங்கினேன். நீங்கள் புறப்பட இருப்பதால், அது எத்தகைய பணி என்பதை நான் சொல்லியாக வேண்டிய நேரம் வந்துவிட்டது.

முதலில் நான் நன்கு சுவாசிக்க வசதியாக எழுந்து உட்கார்ந்து கொள்ளட்டுமா, சே! நான் எவ்வளவு பலவீனமாக இருக்கிறேன், பார்த்தீர்களா! ‘என் நீதிபதிகளை’ உள்ளே வைத்துத் தயவுசெய்து பூட்டி விடுங்கள். நன்றி. தண்டனைகோரும் நீதிபதியெனும் பணியைப் பொறுத்தவரை, தற்பொழுது நான் அப்பணியைச் செய்து வருகிறேன். வழக்கமாக, என் அலுவலகம் மெக்ஸிக்கோ சிட்டியில் இயங்கும். ஆனால் ஈடுபாட்டோடு செய்யும் பணிகள் எப்போதும் பணிசெய்யும் இடத்தைத் தாண்டியும் நடைபெறும். படுக்கையில் இருந்தாலும் காய்ச்சலில் இருந்தாலும், என் பணி தொடர்கிறது. மேலும் இப்பணியானது செய்யப்படும் பணியன்று. எந்நேரமும் சுவாசித்துக்கொண்டிருக்கும் பணி. கடந்த ஐந்துநாட்களாக இவ்வளவு விரிவாக நான் உங்களிடம் பேசியது ஏதோ பொழுதுபோக்குக்காக என்று எண்ணிவிடாதீர்கள். அப்படியில்லை. அப்போதெல்லாம், வாய்க்கு வந்ததை நிறையப் பேசிவந்திருக்கிறேன். ஆனால், இப்பொழுதெல்லாம் என் பேச்சில் ஒரு குறிக்கோள் இருக்கும். மேலோட்டமாகப் பார்த்தால், மதிப்பீட்டிலிருந்து தப்பிக்க வழியில்லாதது போல் தெரியும். எனினும், தனிப்பட்ட முறையில் மதிப்பீடுகளைத் தவிர்க்க வேண்டும். நம்மை ஏளனம் செய்பவர்களின் வாயை அடைக்க வேண்டும். இவ்வாறு என் பேச்சுக்கென உண்மையில் சில நோக்கங்கள் உண்டு. நம்மைத் தண்டிப்பதில் நாம்தான் முதல் ஆளாக இருக்கிறோம். இந்த நிதர்சனம்தான் மதிப்பீடுகளிலிருந்து தப்பிக்க நமக்குப் பெரிய இடையூறாக உள்ளது இல்லையா! எனவே எவ்விதப் பேதமுமின்றி எல்லாரையும் தண்டிக்கும் வழிமுறையை முதலில் கையாள வேண்டும். அப்பொழுதுதான் இந்த இடர்ப்பாட்டை ஆரம்பத்திலேயே நீர்த்துப்போகச் செய்ய முடியும்.

மன்னிப்பு என்பது கிடையாது. ஒருபோதும் யாருக்கும் மன்னிப்பு கிடையாது. தொடக்கத்திலிருந்து இதுதான் என் கொள்கை. நல்ல நோக்கம், பரிசீலிக்கக்கூடிய பிழை, தவறி நேர்ந்த தப்பு, தவிர்க்க முடியாத சூழ்நிலைகள், – இவை எதையும் நான் ஏற்றுக்கொள்வதில்லை.என்னிடம் ஆசீர்வதிப்பது, குற்றத்திலிருந்து விடுதலை வழங்குவது போன்ற பேச்சுகளுக்கு இடமில்லை. ஒவ்வொன்றாகக் கூட்டிக்கொண்டே வரவேண்டும். பிறகு, “இவ்வளவு சேர்ந்துள்ளது, நீ வக்கிரப்புத்தியுள்ளவன், காமுகன், பொய்யையே உண்மை என்று நினைத்துப் பேசுபவன், ஓரினச் சேர்க்கையாளன், கலைஞன்” என்று அறிவிக்கவேண்டும். இப்படித்தான் அதிரடியாகக் கூறிவிடவேண்டும். தத்துவமானாலும் அரசியலானாலும், மனிதனை நிரபராதி என்று ஏற்க மறுக்கும் எந்தக் கொள்கையையும் அவனைக் குற்றவாளியாக நடத்தும் எந்த நடைமுறையையும் – நான் ஆதரிக்கிறேன். நண்பரே, அடிமைத்தனத்துக்கு ஆதரவாக வாதாடக்கூடிய தெளிவானதொரு வழக்குரைஞராக நான் உங்கள்முன் நிற்கிறேன்.

உண்மையில், அடிமைத்தனம் இல்லாமல் ஓர் உறுதியான தீர்வே கிடையாது. இதனை விரைவாகப் புரிந்துகொண்டேன். ஒரு காலத்தில், நான் வாயைத் திறந்தால் சுதந்திரத்தைத் தவிர வேறு எதுவும் வராது. காலைச் சிற்றுண்டியின்போது, அதை என் ரொட்டித்துண்டுகளின் மீது படரச் செய்வேன். நாள் முழுவதும் அதை அசைபோட்டுச் சுதந்திரம் கலந்த இனிய நறுமணம் கொண்ட சுவாசத்தோடு வலம் வருவேன். என்னை மறுத்துப் பேசும் எவரையும் அந்த முக்கியமான சொல்லால் வீழ்த்தி விடுவேன். என் விருப்பங்களையும் அதிகாரத்தையும் நிறைவேற்றிக்கொள்ள அதைப் பயன்படுத்திக்கொள்வேன். என்னுடன் உறங்கும் பெண்களின் காதருகே சென்று அச்சொல்லை முணுமுணுப்பேன். அவர்களைத் திடீரென கைவிடவும் அது எனக்கு உதவியது. அந்தச் சொல்லை வாய்தவறி விட்டுவிடுவேன். சரி, சரி, அடடே! நான் உணர்ச்சிவசப்பட்டு வரம்பு மீறிப் பேசுகிறேன். சில நேரங்களில், பிரதிபலன் பாராமல் சுதந்திரத்தைப் பயன்படுத்த நேர்ந்திருக்கிறது. இரண்டு அல்லது மூன்றுமுறை அதைப் பாதுகாப்பதற்காகச் சாகும் அளவுக்குச் சென்றேன் என்று சொல்லமுடியாது என்றாலும் சில ஆபத்துகளை எதிர்கொண்டேன். இதிலிருக்கும் என் சிறுபிள்ளைத்தனத்தைக் குறித்துச் சற்றே நீங்கள் எண்ணிப்பாருங்கள். இதுபோன்ற

முரட்டுத்தனமான நடவடிக்கைகளில் ஈடுபட்டதற்காக என்னை மன்னிக்க வேண்டும். என்ன செய்கிறேன் என்று தெரியாமல் நடந்துகொண்டேன். சுதந்திரம் என்றால்அது ஒரு வெகுமதியோ, ஷம்பாஞ்ஞோடு (பிரெஞ்சு மதுவகை) கொண்டாடப்படும் விருந்தோ அல்ல என்பது எனக்குத் தெரியவில்லை. அது சுவைத்துச் சாப்பிடக்கூடிய இனிப்புகள் கொண்ட பரிசுப்பொருளும் அல்ல. மாறாக, அது ஒரு சிரமமான விஷயம். மூச்சிரைக்கத் தனிமையில் ஓட வேண்டிய நெடுந்தூர ஓட்டம். ஷம்பாஞ் கிடையாது. உங்களைப் பாசத்துடன் பார்த்தபடித் தங்கள் கோப்பைகளை உயர்த்தும் நண்பர்கள் கிடையாது. சோகத்துடன் அறையில் தனித்து விடப்படுவோம். நீதிபதிகள் முன் குற்றவாளிக் கூண்டில் தனித்து விடப்படுவோம். மற்றவர்கள் நம்மை மதிப்பிடும்போதும், நம்மை நாமே மதிப்பிடும்போதும் தனித்து விடப்படுவோம். எந்தச் சுதந்திரத்தின் முடிவிலும் ஒரு தீர்ப்பு உண்டு. சுதந்திரம் பாரமாகத் தென்படக் காரணம் உண்டு. குறிப்பாக, நாம் காய்ச்சலில் கஷ்டப்படும் நேரத்திலோ, சோகத்தில் உள்ளபோதோ, யாரையும் நாம் நேசிக்காத நிலையிலோ சுதந்திரமானது தாங்கமுடியாத அளவு பாரமாகத் தெரிய இதுதான் காரணம்.

ஆ! உண்மையில், தெய்வமோ அல்லது எஜமானோ இல்லாமல் தனியாக வாழ்பவன் ஒவ்வொரு நாளும் அனுபவிக்கும் துயரம் கொடுமையானது. தெய்வம் பழங்கதையாகி விட்டதால் தனக்குத் தானே எஜமான் ஒருவனைத் தேர்ந்தெடுத்தாக வேண்டும். மேலும், தெய்வம் என்ற சொல்லுக்கு அர்த்தமில்லாமல் போய்விட்டது. அந்தச் சொல்லை வைத்துக்கொண்டு யாரையும் அதிர்ச்சிக்குள்ளாக்கிப் பார்க்கும் விஷப்பரீட்சையில் பயனில்லை. உதாரணமாக நம்மிடையே உள்ள அறத்தைப் போதிப்பவர்களைக் கவனியுங்கள். தங்கள் பக்கத்தில் இருப்பவரை நேசிப்பதில் தொடங்கி மற்ற எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் மிகவும் சிரத்தையோடு செய்து வருபவர்கள். கிருத்துவர்களுக்கும் இவர்களுக்கும் உள்ள ஒரே வித்தியாசம், இவர்கள் தேவாலயங்களில் மதபோதனை செய்வதில்லை. உங்களைப் பொறுத்தவரை இவர்கள் கிருத்துவர்களாக மாறாமல் இருக்க எது தடையாக உள்ளது? ஒருவேளை மனிதனை மதிக்கும் பண்பாக இருக்கலாம். அவர்கள் எவ்வித சலசலப்பையும் உண்டாக்க விரும்பவில்லை. தங்கள் உணர்வுகளைத் தங்களுக்குள்ளேயே வைத்துக்கொள்கின்றனர். உதாரணமாக, எனக்குத் தெரிந்த நாத்திக நாவலாசிரியர் ஒருவர் நாள்தோறும் இரவில் பிரார்த்தனையில் ஈடுபடுவார். அதனால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடவில்லை. ஆனால், கடவுளைப் பற்றி எவ்வளவு சுலபமாகத் தம் புத்தகங்களில் பேசுகிறார்! யாரோ ஒருவர் சொல்வாரே அது போல், என்ன ஒரு பலத்த அடி! இதை முற்போக்குச் சிந்தனையாளர் ஒருவரிடம் பேசிக்கொண்டிருந்தேன். அப்போது அவர்தம் கைகளை வானத்தை நோக்கி உயர்த்தினார். உண்மையில் அதில் தவறான நோக்கம் எதுவுமில்லை. “நீங்கள் சொல்வது எதுவும் எனக்குப் புதிதல்ல. அவர்கள் எல்லோருமே அப்படித்தான்” என்று கூறி அந்த ‘இறைத்தூதர்’ பெருமூச்சு விட்டார். அவரைப் பொறுத்தவரை, நம் எழுத்தாளர்களில் எண்பது விழுக்காட்டினர் தங்கள் படைப்புகளில் ஆசிரியர் பெயர் இடம்பெறுவதைத் தவிர்க்க முடியுமென்றால், இறைவனைப் பற்றி எழுதி அவனது நாமத்தைப் புகழ்வார்கள். இவர்கள் தங்கள் பெயரைத் தங்கள் படைப்புகளில் அச்சிட்டுக்கொள்ளக் காரணம் அவர்கள் தங்களையே நேசிக்கின்றனர் என்பதுதான். அவர்கள் யாரையும் போற்றாததற்குக் காரணம் என்ன தெரியுமா? அவர்கள் ஒருவரையொருவர் வெறுத்துக்கொள்கின்றனர். எனினும், யாரையும் மதிப்பிடாமல் அவர்களால் இருக்க முடியாததால், அறச்செயல்களைப் பேசி அதை ஈடுசெய்து கொள்கின்றனர். சுருக்கமாகக் கூறுவதென்றால், அவர்களிடம் நற்பண்புடன் கூடிய சாத்தான் குணமும் இருந்தது. உண்மையில் இது வேடிக்கையான யுகம்தான்! மனித மனங்கள் எல்லாம் குழப்பத்தில் மூழ்கியுள்ளதில் வியப்படைய ஒன்றுமில்லை. என் நண்பர் ஒருவர் அப்பழுக்கற்ற கணவராக இருந்த நாள்வரை நாத்திகராக இருந்தார். தன் மனைவிக்குத் துரோகம் செய்யத்தொடங்கியதும் அவர் ஆத்திகராக மாறிப் போனார்.

ஆ! இவர்களெல்லாம் விஷமிகள், நாடகமாடுபவர்கள், வெளிவேஷம் போடுபவர்கள். இருந்தாலும் நெஞ்சைத் தொடக்கூடியவர்கள். நான் சொல்வது உண்மை. அவர்கள் சொர்க்கத்துக்கே தீவைக்கும் செயலில் ஈடுபடும் போது கூட இப்படித்தான் இருப்பார்கள். நாத்திகர்களோ, கடவுள் நம்பிக்கையுள்ளவர்களோ,மாஸ்கோக்காரர்களோ போஸ்தோனியர்களோ, இவர்கள் அனைவரும் பரம்பரை பரம்பரையாகக் கிருத்துவர்கள்தான். ஆனால் இப்போதோ பிதா இல்லை, எனவே இனிச் சட்டவிதிகளுக்கும் இடமில்லை. அவர்கள் சுதந்திரமாக இருப்பதால் அவர்களாகவே சமாளித்தாக வேண்டும். ஆனால், சுதந்திரத்தையோ அதன் மதிப்பீடுகளையோ அவர்கள் விரும்பாததால், தங்களுக்குத் தண்டனை அளிக்குமாறு கோருகின்றனர். கொடூரமான விதிமுறைகளைக் கண்டுபிடிக்கின்றனர். தேவாலயங்களுக்குப் பதில் சிதைகளை மூடும் விறகுக்கட்டைகளைத் தேடுகின்றனர். என்னைப் பொறுத்தவரை இவர்களெல்லாம் இத்தாலிய மதபோதகர் சவோநாரோ போன்றவர்கள். இவர்கள் பாவங்களை மட்டுமே நினைப்பவர்கள். ஒருபோதும் அருளாசியை நினைக்கமாட்டார்கள். ஆனால் இவர்களுக்குத் தேவை அருளாசிதான். அருளாசி என்னும்போது இவர்கள் விரும்புவதெல்லாம் இவைதான்: பாவமன்னிப்பு, அடிபணிதல், மகிழ்ச்சி. மேலும், யாருக்குத் தெரியும், இவர்கள் உணர்ச்சிவயப்படுபவர்களாய் இருப்பதால் திருமண உறுதி ஏற்பு, இளங்கன்னியான மணமகள், நேர்மையான மனிதன், தேவாலய இசை முதலியவற்றையும் விரும்பலாம். எதற்கும் உணர்ச்சிவயப்படாத என்னையே உதாரணமாக எடுத்துக்கொள்ளுங்கள். நான் எதையெல்லாம் கனவு கண்டேன் தெரியுமா? இரவும் பகலும், இடைவிடாத அணைப்பில், உடல் இன்பமும் உள்ளக்கிளர்ச்சியும் ஒருசேரக் கிடைக்க வேண்டும். அதாவது, உடலும் உள்ளமும் இணைந்ததொரு முழுமையான காதல். இவை அனைத்தும் ஐந்து ஆண்டுகள் நீடித்த பின் மரணம். என்ன பரிதாபகரமான வாழ்க்கை!

எனவே, திருமண உறுதி ஏற்பும் இடைவிடாக் காதலும் சாத்தியமில்லாததால் அதிகாரமும் வன்முறையும் கொண்டு நடத்தப்படும் கொடூரமான திருமணம் தேவையாகிறது. அனைத்தும் எளிமையாகப் புரியும்படி செய்துவிட வேண்டும் என்பதுதான் முக்கியம். அதாவது குழந்தைகள் விஷயத்தில் நடந்துகொள்வது போல, ஒவ்வொன்றுக்கும் கட்டளையிட வேண்டும்; நன்மையையும் தீமையையும் சுட்டிக்காட்ட வேண்டும். நாமே ஏற்படுத்திக்கொண்டவை என்பதால் தெளிவாகச் சுட்டிக்காட்ட வேண்டும். சிசிலியா அல்லது ஜாவா பகுதியின் குடிமகன் போல் நான் இருக்கலாம். ஒருபோதும் நான் கிருத்துவனாக இல்லாமல் இருக்கலாம். எனினும் அவர்களுள் முதலாமவரிடம் எனக்கு எப்போதும் இணக்கம் உண்டு. எனவே நான் இதன் தத்துவத்தை ஏற்றுக்கொண்டேன். ஆனால், பாரீஸ் நகரப் பாலங்களின் மேல் சுதந்திரத்தைக் கண்டு பயம் ஏற்படுவதை நானும் அறிந்துகொண்டேன். எனவே விண்ணுலக நீதியின் இடத்தை நிரப்புபவர் யாராக இருந்தாலும் சரி, வாழ்க அந்தத் தலைவர். “இங்கே தற்காலிகமாக இருக்கும் எங்கள் பிதாவே . . . எங்கள் வழிகாட்டிகளே! இனிமையான கண்டிப்புமிக்க எங்கள் எஜமானர்களே! எங்கள் பாசமிகு கொடிய தலைவர்களே . . .” சுருக்கமாகச் சொல்வதென்றால், சுதந்திரத்தை விட்டுவிட்டு, குற்றவுணர்வோடு நம்மைவிடப் பெரிய சாதுர்யமானவனிடம் பணிய வேண்டுவதுதான் முக்கியமாகும். நாம் எல்லாருமே குற்றவாளிகளாகிவிட்டால் அதுதான் ஜனநாயகம். தான் மட்டும் தனியாக இறக்க வேண்டியிருப்பதால் ஒருவன் அதற்குப் பழிதீர்த்தாகவேண்டும் என்பதை மறக்கமுடியாது. மரணம் தனிமையானது. அடிமைத்தனமோ பலரும் சம்பந்தப்பட்ட விஷயமாகும் . நாம் அதனை அனுபவிக்கும் அதே நேரம் மற்றவர்களும் தங்கள் பங்கைப் பெறுவார்கள். அதுதான் அதில் முக்கியமானது. இறுதியில் எல்லாரும் ஒன்று கூடியிருப்போம். ஆனால் மண்டியிட்டுத் தலைகவிழ்ந்தபடி இருப்போம்.

மேலும், சமுதாயத்தில் உள்ள மற்றவர்கள் போல் வாழ்வது நல்லதில்லையா? அதற்குச் சமுதாயத்தில்

உள்ள மற்றவர்கள் என்னைப் போல் இருக்க வேண்டும், இல்லையா? அச்சுறுத்தப்படுதல், இழிவுசெய்யப்படுதல், காவல்துறைக் கெடுபிடிகளுக்கு உள்ளாதல் ஆகியவையெல்லாம் சமுதாயத்தோடு ஒன்றிப்போக வைக்கும் சடங்குகளாகும். வெறுக்கப்பட்டு, பின்தொடரப்பட்டு, நிர்ப்பந்திக்கப்பட்ட நிலையில்தான், உண்மையில் என் முழு சுயரூபத்தைக் காட்ட இயலும். நான் நானாக இருந்து இயல்பு நிலையை எட்ட முடியும். இப்போது புரிகிறதா? இதன் காரணமாகத்தான், முறைப்படிச் சுதந்திரத்துக்கு என் வணக்கத்தைச் செலுத்திவிட்டு, யார் கிடைத்தாலும் அவர்களுக்கு அதை வழங்கிவிடுவது என இரகசியமாக முடிவு செய்தேன். என்னால் இயன்றபோதெல்லாம், மெக்ஸிக்கோ சிட்டியில் உள்ள என் தேவாலயத்தில் போதனை செய்துவருகிறேன். அதிகாரத்துக்கு இணங்கி, அடிமைத்தனத்தின் வசதிகளைத் தாழ்மையோடு நாடுமாறு நல்லவர்களை அழைக்கிறேன். வேண்டுமானால், பின்னால் அதனை ஓர் உண்மையான சுதந்திரம் என்று சொல்லிக்கொள்ளலாம்.

ஆனால் நான் ஒன்றும் முட்டாள் இல்லை. அடிமைத்தனம் நாளையே நடைமுறைக்கு வந்துவிடாது என்று எனக்குத் தெரியும். எதிர்காலம் பெறக்கூடிய நன்மைகளில் இதுவும் ஒன்று. அவ்வளவுதான். அதற்கிடையே, இப்பொழுது நிலவும் சூழலுடன் ஒத்துப்போயாக வேண்டும். அத்துடன் தற்காலிகத்தீர்வு ஒன்றையாவது தேடியாக வேண்டும். எனவே மதிப்பீட்டை எல்லாருக்குமானதாக விரிவுபடுத்த வேறுவழியைக் கண்டுபிடித்தாக வேண்டிய அவசியம் எனக்கு ஏற்பட்டது. அப்போதுதான் என்மீது மதிப்பீடு சுமத்தும் பாரத்தைக் குறைக்க முடியும். நான் அந்த வழியைக் கண்டுபிடித்துவிட்டேன். தயவுசெய்து, அந்த ஜன்னலைக் கொஞ்சம் திறந்து விடுங்கள். இங்கு வெப்பம் அதிகமாக இருக்கிறது. ஆனால் மிதமிஞ்சி இருக்கிறது என்று சொல்ல முடியாது, ஏனெனில், எனக்குக் குளிராகவும் இருக்கிறது. என் திட்டம் எளிமையானது மட்டுமல்ல, வளமையான கருத்துக்கள் கொண்டதும் கூட. நான் குளிர்காய எல்லாரையும் பலிகடா ஆக்கவேண்டுமா? புகழ்பெற்ற என் சமகாலத் தோழர்களில் பலரைப் போல் நானும் மேடையேறி மனித குலத்தைச் சபிக்க வேண்டுமா? அது மிகவும் ஆபத்தானது! ஏதோ ஒரு பகலிலோ இரவிலோ, எவ்வித முன்னறிவுப்புமின்றிச் சிரிப்பு வெடிக்கிறது. மற்றவர்மீது நீங்கள் செய்யும் மதிப்பீடு உங்கள் முகத்தையே திருப்பித் தாக்குவதுடன் சில சேதங்களையும் ஏற்படுத்துகிறது. அதனால் என்ன என்று கேட்பீர்கள். நல்லது, இதுதான் புத்திசாலித்தனம். எஜமானர்கள் தங்கள் கம்புகளுடன் வருவதற்கு முன், வானியல் அறிஞர் காப்பெர்நிக்கஸ் போல் வாதத்தைத் திருப்பிப்போட்டு நாம் அதை வென்று விட வேண்டும் என்று கண்டுபிடித்தேன். நம்மை நாமே மதிப்பீடு செய்யாமல் மற்றவர்மீது குற்றஞ்சுமத்த முடியாது. எனவே மற்றவர்களை மதிப்பிடவேண்டுமென்றால் நம்மை நாமே அதிக அளவில் குற்றஞ்சாட்டிக்கொள்ள வேண்டும். அப்படி செய்தால் ஒவ்வொரு நீதிபதியும் என்றாவது ஒரு நாள் தன்னைத்தானே தண்டித்துக்கொள்ளும் நிலைக்கு ஆளாவார். ஆகவே நாம் எதிர்த்திசையில் பயணம்செய்து தண்டித்துக்கொள்ளும் பணியில் ஈடுபட்டால் மட்டுமே நாமும் ஒரு நீதிபதியாக மாற முடியும். நான் சொல்வதைக் கவனிக்கிறீர்களா? நல்லது. நான் என்ன சொல்ல வருகிறேன் என்பதை மேலும் உங்களுக்குத் தெளிவாக்க, நான் எப்படி செயல்பட்டேன் என்று கூறுகிறேன்.

முதலில் வழக்குரைஞர் பணியைக் கவனிக்கும் என் அலுவலகத்தை மூடிவிட்டு பாரீஸை விட்டு வெளியேறினேன். சுற்றுப்பயணம் மேற்கொண்டேன். என் பணி தொடர்ந்து நடக்கக்கூடிய இடமாகப் பார்த்தேன்; அங்கு வேறு பெயரில் செயல்படலாம் என்று திட்டமிட்டேன். உலகத்தில் பல இடங்கள் இருக்கின்றன. இது தற்செயல் நிகழ்வாக இருந்தபோதிலும், வசதிக்காகவும் முரண்நகைக்காகவும், என் உடலை வருத்திக்கொள்ள வேண்டிய நெருக்கடி இருந்ததாலும் இந்த இடத்தைத் தெரிவு செய்தேன். இக்காரணங்கள்தான் ஆம்ஸ்டர்டாம் எனும் இத்தலைநகரைத் தேர்ந்தெடுக்க வைத்தன. நீர்நிலைகளும் பனியும் நிறைந்த இந்நகரைக் கால்வாய்கள் சூழ்ந்துள்ளன. குறிப்பாக நெரிசல் மிகுந்த இப்பகுதியைக்

கண்டு இரசிக்க உலகத்தின் பல பகுதிகளில் இருந்து மக்கள் வருகின்றனர். இத்தகைய நகரில் மாலுமிகள் நிறைந்த பகுதியில் உள்ள மதுக்கூடமொன்றில் என் அலுவலகத்தை அமைத்துக் கொண்டேன். வழக்குக்காகத் துறைமுக நகரத்தில் தேடிவரும் கட்சிக்காரர்கள் பலதரப்பட்டவர்களாக இருப்பார்கள். சொகுசான வாழ்க்கைமுறையைக் கொண்ட பகுதிகளுக்கு ஏழை மக்கள் செல்வதில்லை. மாறாக, கண்ணியமானவர்கள் ஒருமுறையாவது மோசமான இடங்களுக்கு வரவேண்டிய நெருக்கடிக்கு ஆளாகிவிடுவதை நீங்களே பார்த்து விட்டீர்கள். குறிப்பாக நடுத்தர வர்க்க நபர்களுக்காக, அதுவும் பாதை தவறும் நபருக்காக நான் காத்திருப்பேன். அத்தகைய மனிதரால்தான் என் முழுத்திறமையும் வெளிப்படும். அசாதாரணமான வயலின் ஒன்றினைப் பெற்ற பெரிய இசை வித்தகரைப் போல் அந்த நபரை வைத்து நுட்பமான என் இசைக்கோர்வையை வெளிக்கொணர்வேன்.

இவ்வாறுதான், மெக்ஸிக்கோ சிட்டியில் சில மாதங்களாக எனக்குப் பயன்படக்கூடிய தொழிலைச் செய்து வருகிறேன். நீங்களே இதுவரை கவனித்துவருவது போல், வாய்ப்புக்கிடைக்கும்போதெல்லாம் வெளிப்படையாக என் குற்றங்களை ஒத்துக்கொள்வதுதான் என் முதல் பணியாகும். ஒன்றுவிடாமல் எல்லாவற்றுக்கும் என்னை நானே குற்றஞ்சாட்டிக்கொள்வேன். இப்பொழுது எனக்கு அனைத்தும் நினைவில் இருப்பதால் அது ஒன்றும் கடினமல்ல. ஆனால் ஒன்றை மட்டும் மறந்து விடாதீர்கள். மார்பில் அடித்துக்கொண்டு கடுமையான முறையில் குற்றஞ்சாட்டிக்கொள்ளும் வழக்கம் என்னிடம் இல்லை. மாறாக, சாதுர்யமாக வாதம் செய்து சமாளிப்பேன். நுட்பமான வேறுபாடுகளையும் தொடர்பில்லாத பல தகவல்களையும் அடுக்கிக்கொண்டே போவேன். அதாவது, நான் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருப்பவருக்கு ஏற்றவாறு என் பேச்சை மாற்றியமைப்பேன். அதன்மூலம் என்னையும் விஞ்சும் அளவுக்கு என் கருத்துக்களை அவர் ஆமோதிக்கும்படிச் செய்துவிடுவேன். எனக்குத் தொடர்புடைய விஷயங்களில் மற்றவர்களின் விஷயங்களைக் கலப்பேன். எங்களிடையே பொதுவாகக் காணப்படும் அம்சங்களை எடுத்துக்கொள்வேன். அதாவது இருவரும் அனுபவிக்க நேர்ந்த ஒரே மாதிரியான துன்பங்கள், எங்களிடையே காணப்படும் பொதுவான பலவீனங்கள், அத்துடன் நல்ல நடத்தை, அதாவது என்னிடமும் மற்றவர்களிடமும் நிறைந்திருக்கும் பொதுவான அம்சங்களுடைய அன்றாட மனிதன் – இவை அனைத்தையும் கொண்டு ஒரு வாழ்க்கைச் சித்திரத்தைக் கட்டமைப்பேன். அது எல்லாருடைய பிம்பமாகவும் இருக்கும். அதே சமயம் குறிப்பிட்ட யாருடையதாகவும் இருக்காது. சுருக்கமாகக் கூறவேண்டுமென்றால் அது ஒரு முகமூடி. ஏறக்குறைய திருவிழாவில் மாறுவேடம் போடுவது போலத்தான். தத்ரூபமாகவும் கச்சிதமாகவும் இருக்கும். அவற்றைப் பார்க்கும் மக்கள், “அட, இந்த ஆளை பார்த்திருக்கிறேனே!” என்று சொல்லும்படியாக இருக்கும். என்னைப் பற்றிய வர்ணனை முடிந்ததும், அதாவது இன்று மாலை நடந்ததைப் போல, அதைச் சுட்டிக் காட்டி, “என்ன ஒரு பரிதாபம், இப்படித்தான் நான் இருக்கிறேன்” என்று பெரும் சோகத்துடன் சொல்வேன். என் குற்றப்பத்திரிக்கை முடிந்துவிட்டது. ஆனால், அதே சமயம், என்னுடன் வாழும் சக மனிதர்களிடம் நான் காட்டும் வாழ்க்கைச் சித்திரம் அவர்களைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகி விடுகிறது.

உடல் முழுதும் சாம்பல் பூசிக்கொண்டும், கொஞ்சம் கொஞ்சமாகத் தலைமுடியைப் பிய்த்துக் கொண்டும், முகத்தை நகத்தால் கீறிக்கொண்டும், அதே சமயம் பார்வையைக் கூர்மையாக வைத்துக்கொண்டும் மனித இனத்தின்முன் நின்று என் அவமானங்களைப் பட்டியலிடுவேன். அதே நேரத்தில் என் பேச்சு எத்தகைய தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்று கவனித்துக்கொண்டே இருப்பேன். “கீழானவர்களை விடக் கீழானவனாக நான் இருந்தேன்” என்றும் சொல்வேன். அடுத்ததாக, யாரும் உணர முடியாதவாறு என் பேச்சில் ‘நான்’ என்பதை ‘நாம்’ என்ற நிலைக்கு நகர்த்திச் செல்வேன். “இப்படித்தான் நாம் இருக்கிறோம்” என்று நான் கூறும் கட்டத்தை அடையும்போது, என் திட்டத்துக்கு வெற்றி

*கிடைத்துவிடும். அதன்பின் அவர்களைப் பற்றிய உண்மைகளை என்னால் எளிதாகச் சுட்டிக்காட்ட முடியும். நானும் அவர்களைப் போன்றுதான் இருக்கிறேன் என்பதில் சந்தேகமில்லை. நானும் அவர்களும் ஒரேவகையான இக்கட்டில்தான் இருக்கிறோம். எனினும் நான் கொஞ்சம் உயர்ந்த நிலையில் இருக்கிறேன். அதாவது அப்படி இருப்பதை நானறிந்திருக்கிறேன் என்ற தகுதிதான் எனக்குப் பேசும் உரிமையைத் தருகிறது. உண்மையில் இதிலுள்ள வசதி உங்களுக்குப் புரியும். என்னை எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகக் குற்றஞ்சாட்டிக் கொள்கிறேனோ அந்த அளவுக்கு அளவு உங்களை மதிப்பிடும் உரிமையை நான் பெற்றுவிடுகிறேன். மேலும் ஒருபடி மேலே போய், உங்களை நீங்களே மதிப்பீடு செய்யும்படி உங்களைத் தூண்டுகிறேன். அப்படி செய்வதன் மூலம் நான் சுமந்துகொண்டிருக்கும் பாரத்திலிருந்து எனக்குப் பெருமளவு விடுதலை கிடைக்கிறது. அடடே! பார்த்தீர்களா, உண்மையில் நாம் வினோதமானவர்கள்; நாம் அனைவரும் பரிதாபத்துக்குரிய உயிரினங்கள். சாதாரணமாக நம் வாழ்க்கையைத் திரும்பிப்பார்த்தால் போதும். நம்மை நாமே பார்த்து ஆச்சரியமடையவும் அதிர்ச்சியடையவும் நிறைய விஷயங்கள் கிடைக்கும். கொஞ்சம் முயன்று பாருங்கள். நீங்கள் செய்த தவறுகளைக் கூறுங்கள். நிச்சயமாக மிகுந்த தோழமையுணர்வுடன் நான் அவற்றைக் கவனிப்பேன்.*

*சிரிக்காதீர்கள்! நீங்கள் என்னுடைய மற்ற கட்சிக்காரர்களைப் போல் இல்லை. உங்களைச் சம்மதிக்கவைப்பது கடினம்தான் என்பதைப் பார்த்த மாத்திரத்திலேயே கண்டுகொண்டேன். எனினும் நீங்கள் என் வழிக்கு வந்துவிடுவீர்கள். அதனைத் தவிர்க்க முடியாது. என் கட்சிக்காரர்களில் பெரும்பான்மையினர் சிந்திக்கும் திறனைவிட உணர்ச்சிகளுக்கு அதிக இடமளிப்பவர்கள். அவர்களை உடனடியாகத் திசை திருப்பிவிடலாம். அறிவாளிகளிடமோ அதிக நேரமாகும். நடைமுறை குறித்து முழுமையாக அவர்களிடம் விவரித்தால் போதும். அதை அவர்கள் மறக்க மாட்டார்கள். கூடவே ஆழ்ந்து யோசித்தும் பார்ப்பார்கள். எப்படியும் ஒருநாள், பாதி விளையாட்டாகவும் பாதி விரக்தியிலும் மனதில் உள்ள எல்லாவற்றையும் கொட்டிவிடுவார்கள். நீங்கள் அறிவாளி மட்டுமல்ல, பண்பட்டவராகவும் தெரிகிறீர்கள். எனினும் மறைக்காமல் சொல்லுங்கள். ஐந்துநாட்களுக்கு முன் நீங்கள் உங்களைப் பற்றிக் கொண்டிருந்த திருப்தி இப்போது குறைந்திருப்பதை நீங்கள் உணர்கிறீர்கள், இல்லையா? இனி, நீங்கள் எனக்குக் கடிதம் எழுதுவீர்கள் அல்லது திரும்பி என்னிடம் வருவீர்கள் என்று நான் எதிர்பார்க்கலாம். நிச்சயம் நீங்கள் திரும்பி வருவீர்கள் என்பதால் சொல்கிறேன், அப்போதும் நான் மாறாமல் இருப்பதைப் பார்ப்பீர்கள். விரும்பிய சந்தோஷம் எனக்குக் கிடைத்த பின் நான் ஏன் மாறவேண்டும்? இரட்டை வேடத்தைக் கண்டு வருத்தமடைவதற்குப் பதிலாக அதனை அப்படியே ஏற்றுக்கொண்டேன். மேலும், அத்தகைய வேடத்தில் ஒன்றிய எனக்கு வாழ்நாள் முழுவதும் தேடிய மதிப்பு கிட்டியது. மதிப்பீட்டினைத் தவிர்ப்பதுதான் முக்கியமானது என்று நான் உங்களிடம் தெரிவித்த கருத்து தவறானதாகும். மாறாக, தான் நினைத்ததை எல்லாம் நிறைவேற்றிக்கொள்ளக்கூடிய சுதந்திரம் ஒருவனுக்கு இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். அதற்கான தன் தகுதியின்மையை அவ்வப்போது பகிரங்கமாக ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தாலும் பரவாயில்லை. நான் விரும்பிய அனைத்தையும் மீண்டும் அனுபவிக்க ஆரம்பித்தேன். ஆனால் இம்முறை எந்தச் சிரிப்புச் சத்தமும் இல்லை. என் வாழ்க்கை முறையை மாற்றிக் கொள்ளவில்லை. என்னையே நேசித்துக்கொள்வதும் மற்றவர்களைப் பயன்படுத்திக்கொள்வதும் தொடர்ந்தது. மீண்டும் மீண்டும் என் குற்றங்களை ஏற்றுக்கொள்வதன் மூலம், மீண்டும் மீண்டும் என் மனதில் உள்ள பாரம் நீங்குகிறது. மீண்டுமொரு முறை என் இயல்பு மற்றும் இனிமையான சுய பச்சாதாபம் ஆகிய இரண்டு நிலைகளில் என்னால் சுகம் அனுபவிக்க முடிகின்றது.*

*எல்லாவற்றுக்குமான தீர்வை நான் கண்டுபிடித்த கணம் முதல் எல்லா விஷயங்களும் என்மீது ஆதிக்கம் செலுத்திவருகின்றன. பெண்கள், பெருமிதம், சலிப்பு, வெறுப்புணர்ச்சி என்ற இவை மட்டுமின்றித்*

தற்சமயம் சுகமாக அதிகரித்துவரும் காய்ச்சலுக்குக் கூட நான் கட்டுப்பட்டுவிடுகிறேன். ஆனால் பாருங்கள் இறுதியில் நான்தான் ஆளுமை செலுத்துகிறேன். இது நிரந்தரமானது. மீண்டும் ஒரு சிகரத்தை நான் கண்டு பிடித்துவிட்டேன். அதில் ஏறியவன் நான் ஒருவன் மட்டுமே. அதன்மீது இருந்தபடி இனி எல்லாரையும் நான் மதிப்பிடலாம். பல நாட்களுக்கு ஒருமுறை, இரம்மியமான இரவுநேரத்தில், சில சமயம் சிரிப்புச் சத்தம் தூரத்தில் ஒலிப்பது கேட்கிறது. மீண்டும் எனக்குச் சந்தேகம் எழுகிறது. அதனால் விரைவிலேயே என் போதாமை தரும் அழுத்தத்தின் காரணமாக மனிதர்களையும் படைப்பையும், படைக்கப்பட்ட அனைத்தையும் திட்டித்தீர்க்கிறேன். அப்படி செய்தவுடன் புத்துணர்ச்சி பெறுகிறேன்.

எனவே உங்களை மீண்டும் மெக்ஸிக்கோ சிட்டியில் சந்திக்க, எவ்வளவு காலம் வேண்டுமானாலும் காத்திருப்பேன். என் போர்வையைக் கொஞ்சம் எடுத்துவிடுங்கள். நான் சுவாசிக்க வேண்டும். நீங்கள் நிச்சயம் வருவீர்கள் இல்லையா? உங்கள் மீது எனக்கு ஒருவிதமான பாசம் உண்டாகி இருக்கிறது. எனவே என் திட்டத்தின் வழிமுறைகளைக் கூட உங்களுக்கு விளக்கமாகச் சொல்கிறேன். அவை இழிவானவை என்பதால் பல இரவுகள் தொடர்ச்சியாக அவற்றை நான் உங்களுக்குக் கற்றுத்தரத் தரப் புரியும். இன்று இரவே கூட அவற்றைத் தொடர்ந்து சொல்லத் தொடங்கலாம். மதுவின் காரணமாக குடிப்பவர்களில் ஒருவன் சோர்ந்துவிழுந்து தன் மார்பை அடித்துக்கொள்ளும் தருணங்களைத் தவிர்க்கவோ விட்டுவிடவோ என்னால் இயலாது. அதுபோன்ற நேரத்தில் என் உயரம் அதிகரித்துவிடுகிறது. உண்மையில் நான் அப்போது உயரமாக வளர்ந்து தாராளமாகச் சுவாசிக்கிறேன். நான் மலைமீது இருக்கிறேன். என் கண்களுக்கு எதிரில் சமவெளி விரிகிறது. தன்னைப் பரமபிதாவாக பாவித்துக்கொண்டு தீய குணங்களுக்கும் தவறான நடவடிக்கைகளுக்குமான இறுதித் தீர்ப்புகளை விநியோகிப்பதில் கிடைக்கும் போதையே அலாதியானதுதான். ஹாலந்து நாட்டின் விண்ணுலகச் சிகரத்தில், என் தீய தேவதைகளுக்கிடையே சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கிறேன். நியாயத் தீர்ப்பினைப் பெற இருக்கும் கூட்டத்தினர் பனிமூட்டத்திலிருந்தும் கால்வாயிலிருந்தும் என்னை நோக்கி எழும்பி வருவதைக் கவனித்துக்கொண்டிருக்கிறேன். அவர்கள் பொறுமையாக மேல்நோக்கி வருகின்றனர். இதோ, முதல் நபர் வந்து சேர்வது தெரிகிறது. குழம்பிப்போயிருக்கும் தன் முகத்தின் பாதியைக் கையால் மறைத்துக்கொண்டாலும், அவர் அனுபவிக்கும் இயல்பான சோகத்தையும் அதிலிருந்து தப்பமுடியாத ஏமாற்றத்தையும் என்னால் கணிக்க முடிகிறது. நானோ, குற்றத்திலிருந்து அவரை விடுவிக்காமல் பரிதாபப்படுகிறேன். மன்னிப்பு வழங்காமல் குற்றத்தின் தன்மையினைப் புரிந்துகொள்கிறேன். குறிப்பாக, எல்லாரும் என்னை ஆராதித்துக் கொண்டிருக்கின்றனர் என்னும் திருப்தி எனக்கு ஏற்படுகிறது.

நான் படுக்கையில் புரண்டுகொண்டிருப்பது உண்மைதான். நகராமல் என்னால் எப்படி அடக்கமாக இருக்க முடியும்? உங்களை விட நான் உயரமாக இருக்க வேண்டும். என் சிந்தனைகள் என்னை மேலே உயர்த்துகின்றன. இரவுகளிலும், குறிப்பாகக் காலைப்பொழுதுகளிலும் (ஏனெனில் வைகறையில்தான் வீழ்ச்சி நிகழும்) நான் வெளியே போய் கால்வாய்களைச் சுற்றி உற்சாகமாக நடைபயில்கிறேன். அந்தக் கருநீலச் சாம்பல்நிற வானத்தில் அடுக்கடுக்காகப் பறக்கும் புறாக்களின் சிறகுகள் சிறுத்துப்போகின்றன. அவை மேலும் உயரப்பறக்கின்றன. வீட்டுக்கூரைகளின் மீது படரும் நம்பிக்கை ஒளி, என் படைப்பில் புது நாள் ஒன்று உதயமாவதை அறிவிக்கிறது. தம்ராக் நகரின் தெருவில் வரும் முதல் டிராம்வண்டி, தன் மணியோசையை ஈரமான காற்றில் ஒலித்து, இங்கு ஐரோப்பாவின் கீழ்ப்பகுதியில் வாழ்க்கை விழித்தெழுவதை அறிவிக்கிறது. இதே நேரத்தில் கோடிக்கணக்கான என் குடிமக்கள் தங்கள் படுக்கையிலிருந்து கஷ்டப்பட்டு எழுந்து, வாயில் கசப்புடன், மகிழ்ச்சி தராத பணிகளுக்குக் கிளம்புவார்கள். தன்னை அறியாமலேயே எனக்குக் கட்டுப்பட்டிருக்கும் இந்த நாடு முழுவதும் என் கீழேயிருக்க, நானோ உயரத்தில் இருந்தவாறு ஆளுமை செலுத்திவருகிறேன். அப்சந்த் மதுவைப் போன்று

புலரும் பொழுதின் வெளிச்சத்தில் மது அருந்தியவாறும், தீய சொற்களின் போதையில் திளைத்தவாறும் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். ஆமாம், நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன் என்று உங்களிடம் சொல்லிவைக்கிறேன். நான் மகிழ்ச்சியாக இல்லை என்று நினைக்க உங்களுக்கு உரிமையில்லை. மட்டில்லா மகிழ்ச்சியில் இருக்கிறேன்; சூரியனே! கடற்கரைகளே! கடுங்காற்றின் பிடியில் உள்ள தீவுகளே! விரக்தியடையச் செய்யும் நினைவுகளைக் கொண்ட வாலிபமே!

மன்னிக்க வேண்டும். நான் மீண்டும் உறங்கச் செல்கிறேன். நான் அதிகமாக உணர்ச்சிவசப்பட்டுவிட்டதாக நினைக்கிறேன். இருந்தாலும் அதற்காக நான் வருந்தவில்லை. சிறந்ததொரு வாழ்க்கைக்கான இரகசியங்களை அறிந்திருந்தாலும் சில சமயம் உண்மைகளைச் சந்தேகித்தபடி நாம் வழி தவறி அல்லாடுவதுண்டு. என்னுடைய தீர்வு நிச்சயமாக உன்னதமானது என்று கூறமுடியாது. எனினும் நீங்கள் வாழும்முறை பிடிக்காதபோது, அதை மாற்ற வேண்டும் என்று உங்களுக்குத் தெரியும் என்றாலும் அதை ஏற்றுக்கொள்வதைத்தவிர உங்களுக்கு வேறு வழியில்லை என்பதும் உண்மைதானே? ஒருவன் என்ன செய்தால் வேறு ஒரு ஆளாக மாறமுடியும்? அப்படியான சாத்தியக்கூறு இல்லை. ஒருவன் தன் தனித்துவத்தை முற்றிலுமாக இல்லாமல் செய்ய வேண்டும். ஒருமுறையாவது தன்னை மறந்து வேறு யாரோ ஒருவனாக அவன் நினைத்துக்கொள்ள வேண்டும். சரி, அது எப்படி முடியும்? என்னை அதிகமாகக் குறை சொல்லாதீர்கள். ஒருநாள் உணவு விடுதியின் முற்றத்தில் சந்திக்க நேர்ந்த அந்த வயதான பிச்சைக்காரனைப் போன்றவன்தான் நான். என் கையைப் பிடித்துக்கொண்டு, விட மறுத்த அவன், “அய்யா, நான் கெட்டவனாக இருக்கவேண்டும் என்று ஒன்றுமில்லை, என் அறிவில்தான் தடுமாற்றம் ஏற்படுகிறது” என்றான். உண்மைதான், காலைநேரங்களில் நம் அறிவில் தடுமாற்றம் ஏற்படுகிறது. நமக்கு நாமே மன்னிப்பு அளித்துக்கொள்ளும் மகத்துவமான குற்றமற்ற தனமும் இல்லாமல் போகிறது.

அங்கே பாருங்கள். பனி பொழிகிறது! ஆமாம், நான் வெளியே சென்றாக வேண்டும். வெண்பனி மூடிய வெள்ளை இரவில் ஆம்ஸ்டர்டாம் உறங்கிக்கொண்டிருக்க, பனி போர்த்திய சிறிய பாலங்களின் அடியில் அடர்த்தியான ஒளிர்பச்சை நிறக் கால்வாய்கள், வெறிச்சோடிய வீதிகள், ஓசை வராமல் கால்கள் எடுத்துவைக்கும் மென்மையான அடிகள், தற்காலிகமாக இருந்தாலும் இவைதான் தூய்மையின் அடையாளம். இவை நாளையே சேறும் சகதியுமாய் மாறிவிடும். ஜன்னல் கண்ணாடிச் சட்டங்களின் மீது விழும் பஞ்சுபோன்ற பெரிய பனித்துகள்களைப் பாருங்கள். நிச்சயமாக அவை புறாக்களாகத்தான் இருக்கவேண்டும். ஒருவழியாக அந்தச் சின்னஞ்சிறு செல்லப்பறவைகள் கீழிறங்கி வர முடிவு செய்துவிட்டன. தங்கள் சிறகுகள் உருவாக்கிய அடர்த்தியான போர்வையால் மேற்கூரைகளையும் நீர்நிலைகளையும் அப்புறாக்கள் மூடிவிடுகின்றன. அவை எல்லா ஜன்னல்களின் மீதும் வந்து மோதுகின்றன. எத்தனை பறவைகளின் ஆக்கிரமிப்பு! அவை நல்ல செய்தியுடன் வருகின்றன என்று நம்புவோம். எல்லாரும் காப்பாற்றப்படுவார்கள். என்ன சரியா? குறிப்பிட்ட சிலர் மட்டுமின்றி, உடைமைகளையும் தண்டனைகளையும் எல்லோரும் பகிர்ந்துகொள்ள வேண்டியிருக்கும். உதாரணமாக, இன்றிலிருந்து இரவு நேரத்தில் எனக்காக நீங்கள் தரையில் உறங்குவீர்கள். இதுபோன்றே மற்ற அனைத்து விஷயங்களும் நடக்கும். சரியா! அதை விடுங்கள். என்னை அழைத்துச் செல்ல வானத்திலிருந்து ஒரு தேர் கீழிறங்கி வந்தாலோ, திடீரெனப் பனி தீப்பிடித்து எரிந்தாலோ நீங்கள் ஸ்தம்பித்துப் போய் நிற்பீர்கள் என்பதை ஒப்புக்கொள்ளுங்கள். நீங்கள் அதை நம்பவில்லையா? நானும்தான். இருந்தாலும், நான் வெளியே போயாக வேண்டும்.

சரி, சரி நான் அமைதியாக இருக்கிறேன். கவலைப் படாதீர்கள்! மேலும் என் உணர்ச்சிப் பெருக்குகளையும் பிதற்றல்களையும் பெரிதாகப் பொருட்படுத்தாதீர்கள். அவையெல்லாம் கட்டுக்குள் உள்ளவைதான். இருக்கட்டும். இப்பொழுது நீங்கள் உங்களைப் பற்றிப் பேசப் போகிறீர்கள். என்

குறைகளை ஏற்று அவற்றை அதிகமான ஈடுபாட்டோடு உங்களிடம் நான் பகிர்ந்துகொண்டதற்கான நோக்கங்களில் ஏதாவது ஒன்றாவது நிறைவேறியிருக்கிறதா என்று பார்க்கப்போகிறேன். உண்மையில், நான் பொதுவாக எதிர்பார்ப்பது இதைத்தான்: என்னுடன் பேசிக்கொண்டிருப்பவர் ஒரு காவல்துறை அதிகாரி; "நாணயமான நீதிபதிகள்" ஓவியத்தைத் திருடியதற்காக என்னை அவர் கைது செய்யவேண்டும். மற்ற விஷயங்களைப் பொறுத்தவரை, என்னை யாரும் கைது செய்ய முடியாது! என்ன, நான் சொல்வது சரிதானே? ஆனால் அந்தத் திருட்டைப் பொறுத்தவரை, அது சட்டத்துக்குப் புறம்பாகிவிடுகிறது. ஆனால் நான் அதற்கு உடந்தை என்பதை நிறுவத் தேவையான அனைத்துச் செயல்களையும் செய்துள்ளேன். ஏனெனில், நான் அந்த ஓவியத்தை மறைத்து வைத்துள்ளேன். அத்துடன் நில்லாமல் யார் பார்க்க விரும்பினாலும் அவர்களிடம் காட்டிக் கொண்டிருக்கிறேன். எனவே நீங்கள் என்னைக் கைது செய்யலாம். அது ஒரு நல்ல தொடக்கமாக இருக்கும். அதையொட்டிய மற்ற விஷயங்களும் நடந்தேறலாம். உதாரணமாக, என் தலை துண்டிக்கப்படலாம். அதன் பின் மரணபயமே எனக்கு இருக்காது. நான் குற்றத்திலிருந்து காப்பாற்றப்படுவேன். குழுமியிருக்கும் மக்களிடையே இன்னும் கதகதப்பாக இருக்கும் என் தலையைத் தூக்கிக் காட்டுவதன் மூலம் அங்கு இருப்பவர்கள் அதில் தங்களை இனங்காணுமாறு செய்வீர்கள். மீண்டும் ஒருமுறை நான் அவர்கள்மீது ஆளுமை செலுத்துவேன். ஆனால் இம்முறை ஓர் எடுத்துக்காட்டாக. அனைத்தும் நிவர்த்தி செய்யப்பட்டிருக்கும். யாருமில்லா வனத்தில் போலி ஞானியாக வலம் வந்த நான் அப்பணியிலிருந்து வெளியேறவும் மறுத்து வந்தேன். யாரும் பார்க்காமல், யாருக்கும் தெரியாமல் அப்பணிக்கு முற்றுப்புள்ளி வைத்துள்ளேன்.

நிச்சயமாக எனக்குத் தெரியும். நீங்கள் காவல்துறை அதிகாரி அல்ல. அப்படி இருந்தால் அதை எளிதாகக் கண்டுபிடித்திருப்பேன். எனக்கு அப்போதே தெரியும். புரிகிறதா? எனவே, உங்கள் மீது எனக்கு ஏற்பட்ட இனம் புரியாத பாசத்துக்குப் பொருள் இருக்கிறது. நீங்கள் பாரீஸில் உன்னதமான வழக்குரைஞர் பணியில் இருக்கிறீர்கள்! நாம் இருவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று உறுதியாக எனக்குத் தெரியும். ஏற்கெனவே விடை தெரிந்திருந்தாலும், எப்பொழுதும் அதே கேள்விகளைப் பற்றி, யாரும் எதிரில் இல்லாவிட்டாலும்கூட இடைவிடாமல் பேசிக்கொண்டிருக்கும் நாம் அனைவரும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறோம் என்பது உண்மைதானே! அப்படியென்றால், ஒருநாள் இரவு சேன் நதி பாலத்தின் மீது உங்களுக்கு என்ன நடந்தது என்பதையும் எவ்வாறு உங்கள் வாழ்க்கையை ஒருபோதும் ஆபத்துக்குள்ளாக்காமல் சமாளிக்க முடிந்தது என்பதையும் தயவு செய்து சொல்லுங்கள். பல ஆண்டுகளாக இரவு நேரங்களில் என் காதுகளில் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டிருக்கும் அதே ஓலம் உங்களுக்குள்ளும் இருக்கும். இறுதியாக, "இளம் பெண்ணே, மீண்டும் ஒரு முறை தண்ணீரில் குதி. நம் இருவரையும் காப்பாற்ற எனக்கு இரண்டாவது முறையாக ஒரு வாய்ப்பு அப்பொழுதுதான் கிடைக்கும்", என்று உங்கள் வாயால் நான் பேசுவேன். இரண்டாவது முறையா, அய்யோ, அது ஆபத்தான ஆலோசனை அல்லவா, நண்பரே? யோசித்துப்பாருங்கள். ஒருவேளை நம் வேண்டுகோளை உண்மையிலேயே ஏற்றுக்கொண்டு யாராவது ஒருத்தி குதித்துவிட்டால் என்ன ஆவது? நம் வாக்கைக் காப்பாற்றியாக வேண்டும். அச்சச்சோ! என்ன குளிர்! நீர் மிகவும் குளிர்ச்சியாக இருக்கிறது! ஆனால் நாம் கவலைப்படவேண்டாம். இப்பொழுது காலம் கடந்துவிட்டது. எப்பொழுதுமே அப்படித்தான். காலம் கடந்துதான் போயிருக்கும் நல்லவேளையாக!

◘

# குறிப்புகள்

*அந்தி கிருத்து – கிருத்துவுக்கு எதிர்க்கருத்து உடையவர். சாத்தானை உருவகப்படுத்தும் சொல்.*

*ஆம்ஸ்டர்டாம் – நெதர்லாந்தின் தலைநகரம்.*

*இசோல்த் – 'திரிஸ்தான், இசோல்த்' 12ஆம் நூற்றாண்டில் உருவான பண்டைய செல்டிக் காவியமாகும். இது பிரெஞ்சு மொழியில் புகழ்பெற்ற காதல்காவியமாகக் கருதப்பட்டது.*

*எட்னா எரிமலை – ஐரோப்பாவின் தென் இத்தாலியில் சிசிலித்தீவில் உள்ளது.*

*எதித் பியாஃப் – பிரெஞ்சு ப் பாடகி. 'அருமையான வாழ்க்கை' உள்ளிட்ட பாடல்களைப் பாடியவர். (ஈசோல்த் பாடுவதாக அமைந்த) ரிச்சர்ட் வேக்னரின் 'காதலின் மரணம்'.*

*எரியும் புதராக வெளிப்பட்ட இறைவன் – விவிலியத்தில் இறைவன் மோசேக்குக் காட்சியளித்ததை விளக்கும் தொடர். இதனை அக்கினி அதிசயங்களில் ஒன்றாகக் கருதுவர்.*

*எலிஜா – எலியா என்றும் அழைக்கப்படும் இவர் நற்செய்தியாளர், தீர்க்கதரிசி.*

*கடைசி வளையம் – துரோகிகள் வளையம். இத்தாலியக் கவிஞர் தாந்தேயின் காவியமான 'டிவைன் காமடி' எனும் படைப்பில் குறிப்பிடப்படும் ஒன்பது நரக வளையங்களில் கடைசி வளையம் இது.*

*காப்பெர்நிக்கஸ் (1473– 1543) – நிகோலஸ் காப்பர்நிக்கஸ். சூரியனை மையமாகக்கொண்டே கோள்கள் இயங்குவதாக ஆராய்ந்து கூறிய வானியல் அறிஞர்.*

*குரோமேக்னன் மனிதன் – சுமார் 40000 ஆண்டுகளுக்கு முன் இருந்த ஆதிமனிதன்.*

*சதுய்சி – மறுமைமீது நம்பிக்கை இல்லாமல், நிகழ்கால வாழ்க்கையினை மகிழ்ச்சியாக அனுபவிக்கும் யூதப்பிரிவினரைக் குறிக்கும் சொல்.*

*சவோநாரோலா (1452– 1498) – இத்தாலிய மதபோதகர். கிருத்துவ மதத்தில் பல சீர்திருத்தங்களைக் கொண்டுவர முயன்றவர். மதத்துக்கு எதிரான நூல்களை எரித்துவிடுவதாக அறிவித்தவர். மத நிந்தனைக்கு அளிக்கப்படும் தண்டனையைக் கடுமையாக்கியவர்.*

*சிசிலி – மத்திய தரைக்கடலில் அமைந்துள்ள மிகப்பெரிய தீவு.*

*சிப்பாங்கோ – ஜப்பானியத் தீவுகள்.*

*செர்தான் – பிரான்ஸின் பிரபலக் குத்துச்சண்டை வீரரான இவரது முழுப்பெயர் மர்சேல் செர்தான்.*

*சேன் நதி – பிரான்ஸின் முக்கிய நதி. பாரீஸில் உள்ள இந்த நதியின் அருகில்தான் உலகப் புகழ்பெற்ற ஈஃபிள் கோபுரம் அமைந்துள்ளது.*

*திரிப்போலி – லிபியாவின் தலைநகர்.*

*துய்கெஸ்கலன் – 1337 முதல் 1453வரை நிகழ்ந்த நூற்றாண்டுப் போரின் தொடக்கத்தில் வீர சாகசங்கள் புரிந்த பிரெஞ்சு வீரர்.*

*துனீஸ் – துனீஷியாவின் தலைநகர்.*

*தெகோல் – தளபதி ஷார்ல் தெ கோல், பிரெஞ்சு க் குடியரசுத்தலைவராக இருந்தவர்.*

*தெக்கார்த் – பிரெஞ்சு ச் சிந்தனையாளர்.*

*தொஃபீன் தெரு – பாரீஸில் உள்ள வீதி ஒன்றின் பெயர்.*

*நாணயமான நீதிபதிகள் – வான் எய்க் சகோதரர்கள் தீட்டிய ஓவியம். 1934ஆம் ஆண்டில் மாயமான இந்த ஓவியம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.*

*நியாயத் தீர்ப்பு – இறுதித் தீர்ப்பு என்றும் வழங்கப்படும். விவிலியத்தின் புதிய ஏற்பாட்டில் இயேசுவின் இரண்டாம் வருகையின் போது உயிரோடு இருப்பவர்களையும் இறந்தவர்களையும் தீர்ப்பிடும் நாள்.*

நெப்போலியன் போனாபார்ட் – முதலாம் நெப்பொலியன் என்றும் அழைக்கப்பட்ட இவர் பிரெஞ்சு வரலாற்றில் முக்கிய இடம் வகிப்பவர்.

பதினான்காம் லூயி – பிரான்ஸில் நீண்டகாலம் ஆட்சியில் இருந்த மன்னர்.

பார்வோன் – பண்டைய எகிப்திய நாட்டின் அரசன்.

பிராங்கோ – கத்தோலிக்கரான இவர் ஸ்பெயின் நாட்டுப் படைத்தலைவர்.1939ஆம் ஆண்டு முதல்1975ஆம் ஆண்டுவரை ஸ்பெயின் நாட்டின் அதிபராகப் பதவி வகித்தார்.

புக்கென்வால்ட் – ஜெர்மனியில் உள்ள நாஜி சித்திரவதை முகாம்.

புவாகிரா – பிரெஞ்சு உணவு வகை. இது தேவைக்கதிகமான தீனியை வாத்துக்குப் பலவந்தமாகத் திணித்து, அதன் கொழுப்பு நிறைந்த கல்லீரலிலிருந்து தயாரிக்கப்படுவதாகும்.

புனித ஆட்டுக்குட்டி – புகழ்பெற்ற ஓவியர் வான் எய்க் தீட்டிய ஓவியம்.

புனித பவன் தேவாலயம் - பெல்ஜியம் நாட்டின் கெண்ட் நகரில் உள்ளது.

பேதுரு – பிரெஞ்சு மொழியில் பியர், அதாவது பேதுரு என்றால் பாறை.

பேபல் கோபுரம் – உலக மக்கள் வெவ்வேறு மொழிகளைப் பேச நேர்ந்ததன் மூலகாரணத்தை விளக்கும் வகையில் அமைந்த இடம். அதுவரையில் ஒரேமொழியினைப் பேசிக்கொண்டிருப்பதில் மக்கள் கொண்ட கர்வத்தை அழிக்கும் பொருட்டுப் பல மொழிகளை இறைவன் படைத்ததைத் தொன்மம் விளக்குகிறது.விவிலியத்தில் இத்தொன்மத்தைப் பற்றிய குறிப்பு ஆதியாகமத்தில் உள்ளது.

போந்தெஸார் – சேன் நதியின் மீது உள்ள பாலம் ஒன்றின் பெயர்.

போர்ச்சுக்கீசிய அருட்சகோதரி – 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மரியானா அல்கோஃபொராடோ. தன்னைக் காதலித்துக் கைவிட்ட பிரெஞ்சு ப் படைவீரர் நோயல் புத்தோனுக்கு இவர் எழுதியதாகக் கூறப்படும் கடிதங்கள் புகழ்பெற்றவை.

போன் ரொயால் – சேன் நதியின் மீது உள்ள மற்றொரு பாலத்தின் பெயர். பிரான்ஸின் பழைமையான பாலங்களில் ஒன்றாகும் இது.

மார்கென் தீவு – ஆம்ஸ்டர்டாம் அருகில் உள்ள சிறிய தீவு.

மூன்றாம் நற்செய்தியாளர் – லுயிக்

மேல்மாடத்தில் உள்ள எங்கள் ஆண்டவர் – ஆம்ஸ்டர்டாமில் உள்ள தேவாலயம் ஒன்றின் பெயர்.

மோன்பர்னாஸ்கல்லறை – பாரீஸின் தென்பகுதியில் உள்ள இந்தக் கல்லறையில் தான் ழூான் போல் சார்த்தர் அடக்கம் செய்யப்பட்டார்.

யூதேயா – பாலஸ்தீனத்தின் ஒரு பகுதி.

ரேச்சல் – யாகோப்பின் இரண்டாவது மனைவி; ஜோசப், பெஞ்சமின் ஆகியோரின் தாய்

ரொமெல் – இரண்டாம் உலகப்போரின்போது ஜெர்மானிய நாஜிப் படைத்தளபதி.

லோஹென்கிரின் – ஜெர்மானிய இலக்கியத்தில் 13ஆம் நூற்றாண்டு தொன்மக்கதை ஒன்றில் வரும் பாத்திரம். தான் யாரென்று கேட்கக்கூடாது என்னும் நிபந்தனையுடன் கன்னி ஒருத்தியைக் காப்பாற்ற அன்னப்படகில் பயணம் மேற்கொண்டவன்.

வேர்கலான் – பாரீஸில் உள்ள பூங்கா ஒன்றின் பெயர்.

ஜாவா – இந்தோனீசியாவில் உள்ள தீவு.

ஸிதிஜிக் – ஆம்ஸ்டர்டாம் நகரில் உள்ள வீதி ஒன்றின் பெயர்.

ஸைதொர்ஸே – ஹாலந்து நாட்டின் வட மேற்கில் உள்ள பெரிய ஏரி. இது ஒரு மரணக் கடலாகும்.

டச்சு மொழியில் தென்கடல் என்ற பொருளுடைய சொல்.

ஷத்தலே – பாரீஸில் உள்ள மெட்ரோ நிலையம்.

# மொழிபெயர்ப்பாளரின் பிற நூல்கள்

[காலச்சுவடு வெளியீடு]




## விரும்பத்தக்க உடல்

(நாவல்)

**உய்பெர் அதாத்**

ரூ. 150

வாகன விபத்தில் மூளைச்சாவு ஏற்பட்ட ஒருவரது உடலை பல உறுப்புகள் செயலிழந்த நிலையில் கிடக்கும் செதெரீக்கின் தலையுடன் இணைக்கும் உறுப்புமாற்று அறுவைச்சிகிச்சை வெற்றி பெறுகிறது. செதெரீக்கின் தந்தை பெரும் செல்வந்தராகையால் இது சாத்தியமானது. இந்த அறிவியல் புரட்சியின் தலைமகன் செதெரீக், உடல் உபாதைகள், உளவியல் சிக்கல்கள் எனப் பல சவால்களை ஏற்கவேண்டிய இக்கட்டுக்கு ஆளாகிறான். இயற்கையின் முடிவினை எதிர்க்கவும், தவிர்க்கவும், துணியும் இந்த அறிவியல் முயற்சியின் முடிவு என்ன என்பதை பல மர்மமுடிச்சுகளோடு சுவாரசியமாக விவரிக்கிறார் இப்புதின ஆசிரியர் உய்பெர் அதாத்.

இக்கதையின் கற்பனை நிறைவேறும் நாள் முதல் நமக்கு நெருக்கமான சொந்தங்கள், நண்பர்கள், சான்றோர்கள், தலைவர்கள், பிரபலங்கள் என எல்லோரும் ஏதோ ஒரு வடிவில் நீண்டகாலம் தொடர்ந்து வாழ்ந்துகொண் டிருப்பார்கள்.

எதிர்கால உலகின் அளப்பரிய அறிவியல் ஆற்றலால் விளையவிருக்கும் விபரீதங்களை விவாதிக்கத்தூண்டும் புனைவு இது.




## அப்பாவின் துப்பாக்கி

(தன்வரலாறு)

**ஹினெர் சலீம்**

ரூ. 100

குர்திஸ்தான் விடுதலையை இலக்காக வைத்துப் போராடியவர்களின் வரலாற்றைப் பின்புலமாகக் கொண்டு அந்த நாட்டின் இயற்கை வளத்தையும் பண்பாட்டுக் கூறுகளையும் வரலாற்று அரசியல் நிகழ்வுகளையும் பதிவு செய்யும் நினைவுப் பேழை.

காதல், பாசம், வீரம், சோகம், சூழ்ச்சி என வாழ்வில் குறிக்கிடும் அத்தனை அம்சங்களையும் அலசும் ஆசிரியரின் உணர்வுப்பூர்வமான நடையில் அவ்வப்போது மெல்லிய நகைச்சுவை இழையோடுவதையும் காண முடிகிறது.

விறுவிறுப்பான எளிய எடுத்துரைப்பில் அமைந்துள்ள இந்நூல், சிறுவன் ஆசாத்தின் கதையோடு குர்திய மக்களின் விடுதலை வேட்கையையும் பதிவுசெய்கிறது.




## சூறாவளி

(இரு குறுநாவல்கள்)

**லெ கிளெஸியோ**

ரூ. 225

தங்கள் அடையாளங்களைத் தேடித் தவிக்கும் இதயங்களை மையமாகக் கொண்ட இரண்டு நாவல்களிலும் இன்றைய நுகர்வு கலாச்சார உலகம் எதிர்கொள்ளும் சிதைந்த குடும்பம் சார்ந்த பெண்களின் நுணுக்கமான ஜீவ அவஸ்தைகள் புனைவுப்பிரதிகளாய் விரிந்து கிடக்கின்றன.

முதல் கதையின் நிகழ்வுகள் ஜப்பான் கடலில் உள்ள யூதோ தீவிலும் அடுத்த கதைக்கான சம்பவங்கள் பாரீஸ் உள்ளிட்ட இடங்களிலும் புனையப்பட்டுள்ளன. இரண்டுமே சமகாலத்தவை.